

# இயற்கை நெசவின் இன்பமான இயல்பு

**சான்போரைஸ்ட் பாப்ளின்ஸ்:**
கோல்ட் ட்ரிங்க், ப்ளூபர்ட், லைர் ப்ரைட், குட்லைன்

**ஷர்ட்டிங்ஸ்:**
ஸ்டிரைப், டாப்பி, செக்ஸ், பைஜாமா

**தோதீஸ்:**
ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல், ப்ளாடினம், காம்ப்ரிஜ்

**ஸ்யூட்டிங்ஸ்:**
காபர்டின்











நைசவான கலர் புட்டாக்கள்.
ப்ரின்ட்ஸ்:
ப்ரின்டட் லான்ஸ், வாயில்ஸ், பாப்ளின்ஸ், ஸ்கிரீன் ப்ரின்ட் ஸாரீஸ்

2x2 கவர்ச்சியான முழு வாயில்கள்—
விரேலிலும் புட்டாக்களிலும்

·SANFORIZED·








# அரவிந்த்

மில்ஸ் லிமிடெட்
அஹமதாபாத்

# கல்கி

## பொருளடக்கம்



படவிளக்கம் 23-ம் பக்கம் பார்க்க

**சோபகிருது, ஐப்பசி 24 - நவம்பர் 10**



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

புகைபிடிக்கும் இந்தியம்

## புசிக்கவும் ஆசை, புகைக்கவும் ஆசை ?




சம்பிரதாய விருந்துகளின்போது புகைபிடிப்பது இக் காலத்திலே விலக்கல்ல. வசதி அளிக்கப் பெற்றிருப்பின், உணவருந்தும் போது தாராளமாக நீங்கள் புகை பிடிக்கலாம். எங்கே சிகரெட் இடம் பெறவில்லையோ அன்றி வழங்கப்பெறவில்லையோ அங்கே நாமாக சொந்த சிகரெட்டைப் பற்றவைக்காமலிருப்பதே பண்பாட்டுக்கு அடையாளம்.

உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும் உகந்தது

# பனமா

Panama

20

CIGARETTES

இழுக்க
இழுக்க
இன்பம்-
இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

**பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.**

GT 413 TAM. Greens' Advtg.



மலர் 23 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 15

# நீதி உணர்ச்சி நீங்கலாகுமா?

ஆட்சியாளர்களுக்குத் தேவையான முதல் இலட்சணம் நீதி உணர்ச்சி. அவர்கள் அரசியலில் எந்தக் கொள்கைகளைக் கடைப்பிடித்தாலும் நீதிக்கு அடி பணிபவர்களாக இருக்க வேண்டும். 'எல்லோருக்கும் சம நீதி' என்ற அரசியல் சாஸனத்தின் முக வுரையை நடைமுறையில் நடத்திக் காட்ட வேண்டும்.

இவ்விஷயத்தில் ஜவாஹர்லால்ஜி நம்மை மிகவும் ஏமாற்றி வருகிறார். இதை எழுதவே மனத்துக்கு வேதனையாகத்தான் இருக்கிறது. ஆனாலும் ஸ்ரீ கெய்ரோன் விவகாரத்தில் அவர் இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறார்.

ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பு ஒன்றில் ஒரு சர்க்கார் அதிகாரியைக் குறித்துக் கண்டனம் இருக்குமானால் பிரதமர் அந்த அதிகாரியை உத்தியோகத்தில் வைத்திருப்பாரா? அவ்வாறிருக்க, பஞ்சாப் முதன்மந்திரிக்கு மட்டும் ஏன் விசேஷச் சலுகை அளிக்கிறார்? அவரைக் குறித்து விசாரணை நடக்கும் போதுகூட அவர் பதவியில் தொடர்ந்திருக்க நேருஜி அனுமதித்திருப்பது எந்த நியாயத்தைச் சேரும்? விசாரணை எவ்வளவுதான் இரகசிய மாக நடத்தப்பட்டாலும் ஒரு ராஜ்யத்தின் முதன் மந்திரியைக் குறித்த தவறுகளை அவரது பதவிக் காலத்திலேயே வெளியிட யாரேனும் முன்வருவார்களா?

நாட்டின் பாதுகாப்பு போன்ற மர்மமான அம்சங்கள் எதுவும் அடங்கியிராத கெய்ரோன் விவகாரத்தை இரகசிய விசாரணைக்கு விட்டிருப்பதே யுக்தமானதல்ல. ஒரு ராஜ்யத்தின் முதன் மந்திரியுடைய நடவடிக்கை பற்றி அறிய இந்த ஜனநாயக நாட்டின் மக்கள் யாவருக்கும் உரிமை உண்டு. இதிலும் பிரதமர் முறை தவறி நடந்துவிட்டார்!

இவை யாவற்றையும்விட உசிதக் குறைவாக இந்தத் தருணத்தில் நேருஜி கெய்ரோனின் புகழைப் பாடியிருக்கிறார்! பிரபல ஆங்கிலப் பத்திரிகை ஒன்று கூறியிருப் பதுபோல், விருதுபெறுகிற ஒருவரைப் பாராட்டும் உபசாரப் பத்திரமாகவே அமைந்திருக் கிறது பிரதமரின் பேச்சு. அதாவது விசாரணை நடக்கு முன்பே கெய்ரோனுக்குச் சாதக மாக நேருஜி தமது 'தீர்ப்பை' அளித்து விட்டார். விசாரணை செய்யப் போகும் நீதிபதி யைப் பெருத்த சங்கடத்துக்கு ஆளாக்கிவிட்டார்.

ஸுப்ரீம் கோர்ட் கெய்ரோனைக் குறித்து வெளியிட்ட கருத்துக்காகக் கெய்ரோனைச் சிறைக்கு அனுப்ப வேண்டும் என்று யாரும் கோரவில்லை. இப்படிப்பட்ட கண்டனத்துக்கு ஆளானவரை ஒரு ராஜ்யத்தின் முதன் மந்திரியாக வைத்திருப்பதைத்தான் நாடு ஆட்சேபிக் கிறது. ஆனால் காங்கிரஸின் செல்வாக்குக்கு உதவுபவர்கள் விஷயத்தில் நீதி சாஸ்திரத்தை அடியோடு புறக்கணிக்க முற்பட்டு விட்டார் பிரதமர். ஸுப்ரீம் கோர்ட்டுக்கும் மேலாகத் தம்மைக் கருதி நாட்டின் நல்லமை நீதிமன்றத்தை அலட்சியம் செய்திருக்கிறார். நடக்க விருக்கும் விசாரணையைத் தமது செல்வாக்கு மறைமுகமாகப் பாதிக்கச் செய்திருக்கிறார். இனி எந்த மந்திரி தவறு செய்தாலும் அதற்குப் பரிகாரம் தேட முடியாது என்று நாடு நினைக்கிற துர்ப்பாக்கிய நிலைமை உண்டாகி விட்டது. அதாவது யாவருக்கும் சம நீதி என்ற அடிப்படைக் கோட்பாட்டைக் காற்றில் பறக்க விட்டிருக்கிறார். இதை யெல்லாம் கண்டு இந்த நாட்டில் நீதியையும் நியாயத்தையும் மதிக்கத் தெரிந்தவர்களெல்லாம் அருவருப் பும் அச்சமும் அடைந்திருக்கிறார்கள். அரசியல் கொள்கைகளையோ, திட்டங்களையோ, செயல் முறைகளையோ கைவிடுவது வேறு விஷயம். ஆனால் நீதி உணர்ச்சியையே கைவிடு வது என்றால் அதைவிடத் தேசத்துக்கு வேறென்ன இழுக்கு இருக்க முடியும்?

# ராஷ்டிரபதி வருந்துகிறார்

**வி**வசாயத்தில் நாடு முன்னேற்றம் காணவில்லை என்று ராஷ்டிரபதி வருத்தப்படுகிறார்! ஏற்கனவே ஆட்சித் தலைவர்கள் பலரும் இப்படி வருத்தப்பட்டதுண்டு. ஆனால் நிலைமையைச் சீர்திருத்துவதற்கு உரிய உபாயத்தைப் பற்றி மட்டும் அவர்கள் சிந்திப்பதில்லை.

மக்களின் தசையும் அறிவுமே நம் நாட்டின் தலைசிறந்த செல்வம். மக்கள் சக்தி பரிபூரணமாக ஆக்க வேலைகளில் வெளிப்படச் சர்க்கார் அனுமதிக்குமானால் விவசாயத் துறையிலும் சரி, தொழில் துறையிலும் சரி இந்தியா நிச்சயமாக அபிவிருத்தி அடையும். மக்களின் சக்தி பூரணமாக வெளிப்படுவது அவர்களின் சொத்துரிமைகள் மதிக்கப்படும் போதுதான். ஆளும் கட்சியின் கொள்கையோ இதற்கு முற்றிலும் மாறானது. எல்லாச் சொத்துக்களும் சர்க்காரின் உடைமையாக இருக்க வேண்டும் என்பதே அதன் ஆதாரக் கோட்பாடு. அதிலும், நில உரிமை விஷயமாகக் காங்கிரஸ் சர்க்கார் செய்துள்ள உற்பாதத்தைச் சொல்லவே வேண்டாம். இந்நிலையில் உற்பத்தியாளர்களின் உற்சாகம் குன்றிப் போகிறது; விளைச்சல் குறைகிறது.

மக்களின் சொத்துரிமைகளை மதித்து, உற்பத்தியாளர்களுக்கு ஊக்கமளிப்பதொன்றுதான் விவசாயம் வளர வழி. ஆனால் காங்கிரஸ் சர்க்காரோ மக்களின் வரிப் பணத்திலிருந்து ரசாயன உரத்துக்கு மானியம் வழங்குவதாலும், நிலத்துக்கு அடுத்தபடி உழவர்களின் செல்வமாக விளங்கி வரும் கால்நடைகளுக்குப் பதில் டிராக்டர்களைத் தருவிப்பதாலும் உணவு உற்பத்தியைப் பெருக்கி விடலாம் என்று கனவு காண்கிறது. காங்கிரஸ் வகுக்கும் திட்டங்களால் பெருகும் செல்வத்தைவிட அதிகமாக அந்தத் திட்டங்களே விழுங்கி விடுகின்றன. கட்சிக் கொள்கையில் அபிமானம் இருக்க வேண்டியதுதான். அதற்காக இப்படிக் கண்மூடித்தனமாகச் செல்லலாமா? ராஜாஜி கூறுவது போல், சுவரிலிருந்து கொஞ்சம் எட்டி ஏணியைச் சாத்தினால்தான் ஏற முடியும். விரைவில் இலட்சியத்தை அடைய எண்ணி ஏணியைச் சுவரில் செங்குத்தாக நாட்டிக் கொண்டு ஏறினால் அதோகதிதான்!

## ஏட்டுச் சுரைக்காய்!



## தீராத நஷ்டம்

நேர்மையும் அசைக்கமுடியாத பக்தியும் தைரியமும் முத்துராமலிங்க தேவரை ஒரு தனி மனிதராகப் பிரகாசிக்கச் செய்த பண்புகள். தென்னாட்டு மக்களைத் துயரத்தில் ஆழச்செய்கிறது அவருடைய மறைவு. அரசியல் துறையில் பெரிய நஷ்டம். ஆளும் கட்சியை எதிர்க்கும் எல்லாக் கட்சிகளுக்கும் பெருத்த நஷ்டம். சுதந்திரக் கட்சிக்குத் தீராத நஷ்டம்.

— ராஜாஜி



# என்ன சேதி?

### முதன்மந்திரி யார் ?

முதன்மந்திரிகளைக் காங்கிரஸ் 'மேலிடம்' வெறும் தலையாட்டிப் பொம்மைகளாகவே கருதுகிறது என்பது உத்தரப் பிரதேசத்தில் வெட்டவெளிச்சமாகி வருகிறது. ஸ்ரீமதி சுசேதா கிருபளானி தமது மந்திரிசபை சகாக்களைச் சுதந்திரமாகத் தேர்வு செய்திருப்பது குறித்துக் காங்கிரஸ் மேலிடத்துக்குச் சீற்றம் பொங்குகிறது. முதன்மந்திரிக்கு அரசியல் சாஸனம் அளித்துள்ள உரிமைகளைக் கட்சியின் தலைமை பீடம் விழுங்கப் பார்க்கிறது. இதைக் காட்டிலும் முதன் மந்திரிக்குப் பதிலாகக் காங்கிரஸ் மேலிடத்தினரே விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டு, மந்திரிசபை அமைத்து, சட்டங்கள் இயற்றி ராஜ்ய நிர்வாகத்தை நடத்தலாம்.

### பிரித்து ஆள முயற்சி

தி. மு. க. மேயர் திரு குசேலர் மாஸ்கோவுக்குப் போனால் என்ன, போகா விட்டால் என்ன? அவர் பிரயாணத்துக்கும் மந்திரி திரு கக்கனுக்கும் என்ன சம்பந்தம்? ஆனால் திரு கக்கன் பேசியிருப்பதைப் பாருங்கள்! ''குசேலர் ஒரு ஹரிஜன் என்ற காரணத்தால் தி.மு.க.வினர் அவரது பயணச் செலவுக்குப் பணம் கொடுக்காமல் விட்டு விட்டனர். இல்லையேல் எத்தனையோ நடிகர்கள் அவர் பயணச் செலவை ஏற்று நகரின் மதிப்பைக் காப்பாற்றியிருக்கலாமே! ஏன் ஏற்கவில்லை? இந்த நிகழ்ச்சியை ஹரிஜன மக்கள் உணர்ந்து தி. மு. கழகத்துக்கு ஆதரவு அளிக்கக் கூடாது என்று அமைச்சர் திரு கக்கன் கூறினார்.'' இப்படிக் கூறுகிறது ஒரு தமிழ்ப் பத்திரிகை.

பிரித்தாளும் கொள்கை, வகுப்புத் துவேஷம், சாதித் துவேஷம் இவற்றை வளர்த்து, காங்கிரஸ்காரர்கள் தங்கள் ஆட்சியை நிரந்தரமாக நடத்திக் கொண்டு போக வேண்டும் என்று விரும்புகிறார்கள் என்பதற்கு இதைவிட அத்தாட்சி என்ன வேண்டும் ?

### வட இலங்கையில் அடக்குமுறை

இலங்கைத் தமிழரசுக் கட்சியின் தலைவர் திரு எஸ். ஜே. வி. செல்வநாயகம் அவர்கள் ஈழநாட்டின் வட பகுதியில் பயங்கரமான ஆட்சி நடைபெறுவதாக இலங்கை சர்க்காருக்கு முறையிட்டிருக்கிறார். வட பகுதியில் பூர்வீகமாக வாழும் தமிழ்க் குடிகளை, சர்க்காரின் அங்கீகாரம் பெற்றவர்களைக் கூட 'கள்ளத்தனமாகக் குடியேறிய

# ஊர் வம்பு

PK













வர்கள்' என்று வட இலங்கை அதிகாரிகள் குற்றம் சாட்டி மிருகப் பிராயமாக நடத்துகின்றனர் என்று முறையிட்டிருக்கிறார். வாரத்துக்குச் சுமார் நூறு பேருக்கு மேற்பட்டவரைக் கைது செய்து, கொழும்பில் வைத்திருந்து 'இந்தியாவிலிருந்து வந்தவர்கள்' என்று கூறி இந்தியாவுக்கு நிர்ப்பந்தமாக அனுப்புகின்றனராம்.

இந்தியாவில் யாதொரு தொடர்புமில்லாதவர்களை இப்படி அனுப்பி வைப்பது இரக்கமற்ற செயலாகும். இலங்கையைத் தாயகமாகக் கொண்டு விட்டவர்களுக்கு எவ்வித அநீதியும் இழைக்காமல் நடந்து கொள்வது இலங்கை சர்க்காரின் புறக்கணிக்க முடியாத கடமைகளில் ஒன்றாகும்!

இவ்விதழ் அச்சேறச் செல்லும் சமயத்தில் பாரதத்தின் பிரதமர் இலங்கைப் பிரதமரைப் பேச்சு வார்த்தைகளுக்கு அழைத்திருப்பதாகச் செய்தி வெளியாகியிருக்கிறது. இலங்கை இந்தியர் விஷயத்தில் இரு சர்க்கார்களுமே பாராமுகமாக இருந்து வருகின்றன என்ற கருத்து நீங்கி, ஈழத்துத் தமிழர் தமக்குரிய சகல உரிமைகளையும் பெற இந்தப் பேச்சு வார்த்தை உதவ வேண்டும் எனப் பிரார்த்திக்கிறோம்.

# அன்பார்ந்த நேயர்களுக்கு...

இந்த ஆண்டுத் தீபாவளிப் பண்டிகை கடந்த ஆண்டுகளில் நடந்த தீபாவளிப் பண்டிகைகளைவிட விசேஷ மகத்துவம் வாய்ந்தது. காரணம், இரட்டைத் தீபாவளி. நண்பர் ஒருவர் அக்டோபர் ஐந்தாம் தேதி தமது மகளுக்குத் திருமணம் நிச்சயம் செய்தார். திருமண முகூர்த்தத்துக்கு நவம்பர் நாலாந் தேதிதான் பல விதங்களிலும் பொருத்தமாயிருந்தது. கல்யாணத்துச் செலவோடு தலை தீபாவளிச் செலவும் சேராமல் இருக்கட்டுமே என்று ஒரு திட்டம் வகுத்தார். அதாவது தம் வீட்டுத் தீபாவளியை அக்டோபர் மாதத்துத் தீபாவளியின்போது வெகு எளிமையாகக் கொண்டாடி முடித்துக் கொண்டார்.

திருமணம் விமரிசையாக முடிந்தது. தீபாவளிப் பேச்சு வந்தது. 'எங்கள் வீட்டில் தீபாவளி ஆகி விட்டதே! அடுத்த ஆண்டு பார்த்துக் கொள்ளலாமே!' என்று மறுப்பினார். 'அதெல்லாம் நன்றாயிராது. இருந்து இருந்து எங்களுக்கு ஒரே பிள்ளை. இந்த ஆண்டே கொண்டாடி விட வேண்டும்!' என்று கூறி விட்டார்கள் சம்பந்தி வீட்டார்கள். அப்புறம் அப்பீல் ஏது?

ஜாம் ஜாம் என்று தீபாவளிக்கு ஏற்பாடு நடந்து கொண்டிருக்கிறது அவர் வீட்டில். தீபாவளி இப்படி இரட்டித்து விட்டதில் புது மணத் தம்பதிக்குப் பரம திருப்தி. அவர்களுடைய திருப்தியில் பெற்றோர்களும் பங்கு கொள்ளாமல் இருப்பார்களா?

இப்படி இரட்டித்த தீபாவளியின் மகிழ்ச்சியைப் பன்மடங்காகப் பெருக்கியவண்ணம் 'கல்கி' தீபாவளி மலர் கங்கா ஸ்நானத்தன்று தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் கிடைக்கும்.

மலருக்கு மணம் கூட்டத் தமிழ் நாட்டின் தலைப் புதல்வர் ராஜாஜி அவர்கள் 'உபநிஷதக் கதைகளை'த் தமக்கே உரித்தான பாணியில் அருமையாகக் கூறுகிறார். தென்னாட்டுக் கோயில்களைப் பற்றித் தமிழ் நாட்டின் முதல் மந்திரி திரு பக்தவத்ஸலம் அவர்கள் எழுதுகிறார்கள். டாக்டர் மு. வரதராசனார் அவர்களும் திரு கி. வா. ஜகந்நாதன் அவர்களும் இலக்கியப் பூங்காவைத் தமது நறுமலர்களால் அலங்கரிக்கிறார்கள்.

'காணாத கண் என்ன கண்ணே!' என்ற தலைப்பில் தென்னாட்டின் இயற்கை — செயற்கை வளங்களை ஓவியர் சிலு நேரில் சென்று சித்திரமாகத் தீட்டி வந்துள்ளார். ஓவியர் ராஜம் 'தியாகராஜ யோகத்'தைத் தமக்கே உரிய பாணியில் அளித்துள்ளார். மகாவீர சரித்திரத்தைத் திரு சாமி அவர்கள் சித்திரக் காவியமாகவே வடித்துள்ளார். 'அன்றைய காவியமும் இன்றைய ஓவிய'மும் என்ற பகுதி கண்ணுக்கு விருந்தாயிருக்கும். ஓவியர் கல்பனாவும் விஜயாவும் இப்பணியைத் திறம்படச் செய்திருக்கிறார்கள். 'எந்நாட்டவர்க்கும் இறைவன்' என்னும் சித்திரப் பகுதியை ஓவியர்கள் சித்திரலேகாவும் நடராஜனும் எழிலுறச் சமைத்திருக்கிறார்கள். ஓவியர் மணியம் அளித்துள்ள 'பாண்டிய நாட்டுச் சித்திரங்கள்' பார்க்கப் பார்க்கத் தெவிட்டாதவை. திருவிளையாடற் புராணத்துக் காட்சி ஒன்றை ஓவியர் வினு அவர்கள் கருத்தைக் கவரும் வகையிலே அட்டைச் சித்திரமாகத் தீட்டியிருக்கிறார்.

எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல அருவமான ஆண்டவன் உருவம் பெற்று வந்திருப்பதுபோன்ற தோற்றத்துடன் காஞ்சி காமகோடி பெரியவர்களின் படம் முகப்புப் படமாகத் திகழ்கிறது.

'காணாத கண் என்ன கண்ணே!' என்று சொல்லும்படி சித்திரங்கள் அமைந்திருக்கின்றனவென்றால், 'படித்துச் சுவைக்காத நா என்ன நாவே!' என்று கூறுமாறு திரு அகிலன், தமிழ்வாணன், தி. ஜானகிராமன், எம். வி. வெங்கட்ராமன், அரு. ராமநாதன், ஆர்வி, வே. லட்சுமணன், அநுத்தமா, வசுமதி ராமசுவாமி போன்ற எழுத்தாளர்கள் சிறந்த கதைகளை எழுதி அலங்கரித்துள்ளார்கள். திருச்சிற்றம்பலக் கவிராயர், மணிவண்ணன், சோமு போன்றவர்களின் கவிதைகளும் கருத்தைக் கவருவதாக அமைந்துள்ளன.

நகைச்சுவைப் பகுதியைக் களைகட்டச் செய்யும் விஷயத்தில் திரு சாமா, உமாபதி, செல்லம் முதலியவர்கள் பங்கெடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றால், மேலும் கூற வேண்டுமா?

இலை போட்ட சாப்பாட்டில், விருந்தைப் பரிமாறுவதற்கு முன்கூட்டி அறிவிப்பது போல, 'கல்கி' அளிக்கும் தீபாவளி விருந்தைப் பற்றிக் கூறி விட்டோம். இனி விருந்தை ருசித்து ரசிக்க வேண்டியது நேயர்களாகிய உங்கள் கடமை.

— ஆசிரியர்




பிள்ளையார் பிடிக்க......

# தேவர் குல திலகம்

## ஆசார்ய என்.ஜி.ரங்கா

பசும்பொன் முத்துராமலிங்க தேவரின் அகால மரணத்தினால் நமது நாடு சிறந்த தேசபக்தர் ஒருவரை இழந்து விட்டது. அவருடைய சமூகப் பணி ஒப்புவமை இல்லாதது. தமிழில் அவருடைய பேச்சுவன்மை நாவிலும் அறிந்தது. சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகத் தாம் கொண்டிருந்த இடைவிடாத பிணைப்பினால் நமது சொந்த ஊர் முதுகுளத்தூரையும், மதுரையம்பதியையும், ராமநாதபுரம் மாவட்டத்தையும் அரசியல் உலகில் புகழ் பெறச் செய்த பெருமை ஸ்ரீ தேவரைச் சாரும். சமூகப் பணியிலும் சமயப் பற்றிலும் இணைந்த குடும்பத்தில் தோன்றிச் சலியா உழைப்பினால் தேவர் சமூகத்தின் நிகரற்ற தலைவராக உயர்ந்து விளங்கினார்.

இரண்டாவது உலக யுத்தத்தின் போது ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடத்திய தேசியப் போராட்டத்தின் புரட்சிக் காலத்திலேயே ஸ்ரீ தேவரை எனக்குத் தெரியும். அப்போதே நேதாஜி சுபாஷ் சந்திர போஸை வழுவாது பின்பற்றியவர். சிறையில் இருந்தபோதும், வெளியே செயலாற்றிய போதும் 1945ம் ஆண்டு முடிவு வரையில் நானும் தேவரும் இணைந்து வேலை செய்தோம். வேலூர்ச் சிறையிலும், மத்தியப் பிரதேசத்தில் உள்ள டாமோ ஜெயிலிலும், வருஷக் கணக்கில் ஒன்றாகவே அடைபட்டுக் கிடந்தோம். அந்தக் காலத்திலிருந்தே கீதையில் கண்ணன் காட்டிய வழியை அப்படியே பின்பற்றியவர் தேவர். புத்தர் உபதேசங்களையும் ராமலிங்க சுவாமிகளின் அருட்பாவையும் அடிக்கடி படித்து மகிழ்வார்.

தமிழ் சத்தியாக்கிரகத் தொண்டர்கள் ஸ்ரீ தேவருடைய பேச்சுத் திறனைப் பற்றியும் தமிழ் மக்கள் மீது அவருக்கிருந்த செல்வாக்கைக் குறித்தும் பெருமிதத்துடன் சொல்லக் கேட்டிருக்கிறேன். 1957ம் ஆண்டில் அவர் லோக சபைக்கு வந்தபோது அவருடைய நட்பை மீண்டும் நான் அனுபவிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. நேதாஜியின் மரணம் சம்பந்தமாகக் கூறப்பட்ட சம்பவங்களை நுட்பமாக ஆராய்வதில் தீவிரமாக ஈடுபட்டு முடிவில் நேதாஜி உயிருடன் இருப்பதாகவே வலியுறுத்திச் சொன்னார் ஸ்ரீ தேவர். ஆங்கில மொழியிலும் அவருடைய இயற்கையான சொல்வேகம் பிரகாசித்து லோக சபையினரை மிகவும் கவர்ந்தது. 'நேருஜியின் டில்லி'யில் காணப்பட்ட ஆடம்பரங்களும், நவநாகரிகங்களும், ஸ்ரீ தேவரைத் துளியும் கவரவில்லை. ஒரு சந்நியாசியைப் போலவேதான் அவர் வாழ்க்கை நடத்தி வந்தார். பத்மாஸனத்தில் அமைதியாக அமர்ந்து, கூட்டம் கூட்டமாக வடக்குச் சாலையிலிருந்த தமது ஜாகைக்கு வந்த குழந்தைகளையும், சிறுவர்களையும் கையமர்த்தி ஆசீர்வதித்து அனுப்புவதை நான் பார்த்திருக்கிறேன். அவர் நிரபராதியாக இருந்தும், துரதிர்ஷ்டவசமாகக் காங்கிரஸ் ஆட்சியின் கொடுமையினால் எதிர்பாராத விதத்தில் சிறைப்பட்டுத் தவிக்க வேண்டியிருந்தது. பழிச் சொல்லுக்குப் பாத்திரமான காங்கிரஸ் அரசாங்கத்தின் செய்கையால் தமக்கு இழைக்கப்பட்ட அநீதியைக் காட்டிலும், தமது சீடர்கள் துன்புறுத்தப்பட்டதைக் கண்டுதான் தேவர் மிகவும் வாடி வதங்கினார்.

சுதந்திரக் கட்சி தொடங்கப்பட்டபோது, கம்யூனிஸ்டுக் கோட்பாடுகளுடன் இயங்கிக் கொண்டு கொட்டமடிக்கும் காங்கிரசுக்கு, ஜனநாயக முறையில் எதிர்க் கட்சியாக இது இயங்கும் என்பதால் புதுக் கட்சியை வரவேற்றார் ஸ்ரீ தேவர். சில சுதந்திரக் கட்சிக் கூட்டங்களில் கலந்து கொண்டு பேசியிருக்கிறார். ராஜாஜியின் தலைமைக்கு மனதார வாழ்த்துக்கள் கூறியதுடன் மக்கள் சபை அலுவல்களில் சுதந்திரக் கட்சியுடன் இணக்கமாகத் தாம் செயல் புரியவும் முன் வந்தார். ''1937ல் தேவர் அவர்கள் எனக்குத் துணையாக நின்றார். அன்று நடந்த முதல் தேர்தலில் நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது தேவர் அவர்கள் என்னுடன் வந்து நாங்கள் சென்ற மோட்டாரைத் தாமே ஓட்டி சாரதியாகக் காட்சி தந்தார். அதே மாதிரி இன்றும் காங்கிரஸிலிருந்து நாட்டை விடுவிக்கும் சுதந்திரக் கட்சிக்கு அவரே சாரதியாக இருக்க விரும்புகிறேன்......'' என்று ராஜாஜியே சிலாகித்துக் கூறியிருக்கிறார்.

''டேப்'' மூலம் பதிவு செய்யப்பட்ட அவருடைய பிரசங்கங்களை வைத்து ஒலிபரப்பச் செய்து மக்கள் அடிக்கடி கேட்டு ரசிப்பது உண்டு. இதிலிருந்து மக்கள் மீது அவருக்கு இருந்த செல்வாக்கு எத்தகையது என்பது நன்கு விளங்கும். நேருஜியின் மோகனாஸ்திரத்தினால் சிறிதும் நிலை குலையாதவர் ஸ்ரீ முத்துராமலிங்க தேவர். காங்கிரஸ் ஆட்சி பற்றியும் அவர் உயர்வாக மதிக்கவில்லை. சுதந்திர சகாப்தத்தில் காங்கிரஸ் கட்சியை வன்மையாக எதிர்த்துச் செயல் புரிந்து வந்தார். நேதாஜியிடம் தளராத அன்பு—பக்தியென்றே சொல்லலாம்—கொண்டவர். சமீப காலங்களில் ராஜாஜியின் கொள்கைகளில் அதே அளவு நம்பிக்கை வைத்திருந்தார்.

தமிழ்ப் பண்புக்கும் கலாசாரத்துக்கும் உறைவிடமான மதுரையம்பதிக்குப் பல தலைவர்கள் பலவிதங்களில் சேவை செய்துள்ளார்கள். முத்துராமலிங்க தேவரின் சேவையும் இவ்வகையில் குறைவில்லாதது. அவருடைய ஸ்வர்க்காரோஹணம் அவருடைய நண்பனான எனக்குப் பெரிய நஷ்டம். சுதந்திரக்கட்சிக்கு அவருடைய மறைவு மகத்தான நஷ்டம். தென் கிழக்கு ஆசிய நாடுகள் முழுவதிலும் பரவியுள்ள லட்சக் கணக்கான அவருடைய சிஷ்யர்களுக்கு என்னுடைய மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மனதை மயக்கும் வசீகரம். தன் நிலை மறந்து அவள் எழிலையே பருகுகின்றனர் அனைவரும். ஆயிரம் தாரகைகளின் மின்னொளி வீசும் இப் பைங்கிளி உடுத்தியிருப்பது

# பின்னியின் தூய பட்டுப்புடவை

ஜார்ஜெட், ஷிப்பான், மற்றும் மென்பட்டு ரகங்களில் கிடைக்கின்றது



பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட், அக்ரஹாரம் ரோடு, பெங்களூர்-23
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட் ஸ்தாபனத்தின் ஒரு கிளை

# முதல் மூவர்

ராஜாஜி-சோமு

31

காஞ்சிபுர க்ஷேத்திரத்திலுள்ள திருப்பாடகத்தில் திருமால், நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார். அதே காஞ்சியில் நாவல்திவியிலே, இருந்த திருக்கோலத்தில் காட்சி தருகிறார். அங்கேயே வெஃகாவில் திருமால் பள்ளிகொண்டிருக்கிறார். இப்படி, நின்றும் உட்கார்ந்தும் படுத்தும் இருப்பதற்குக் காரணம், முன்பு கடல் கடைந்த களைப்பு என்று கற்பித்துக் கொண்டு, பகவான் திருவருளை அழகாகப் பாடுகிறார் பேயாழ்வார்.

இசைந்த அரவமும்
வெற்பும் கடலும்
பசைந்து அங்கு அமுது
படுப்ப—அசைந்து
கடைந்த வருத்தமோ
— அசைந்து
கடைந்த வருத்தமோ
கச்சி வெஃகாவில்
கிடந்து இருந்து நின்றதுவும
அங்கு!

[இசைந்த—இசைந்துக் கட்டிய. அரவமும்—வாசுகி என்ற பாம்பும். வெற்பும்—மந்தரகிரியும். பசைந்து—கடைந்து. அங்கு அமுது படுப்ப—அந்தக் கடலிலே அமுதம் கிடைக்கும்படியாக. அசைந்து கடைந்த வருத்தமோ—ஆடி ஆடிக் கடைந்த சிரமமோ!]

[கச்சி வெஃகா—காஞ்சியிலுள்ள வெஃகா. கிடந்து—பள்ளிகொண்டு. இருந்து—உட்கார்ந்து. நின்றதுவும்—நின்ற கோலத்தில் காட்சி தருவதும்.]

கடலை அத்தனை தேகப் பிரயாசையோடு கடைந்த களைப்பினால்தான், நிலை கொள்ளாமல் நின்றும் இருந்தும் படுத்தும் சிரமம் தீர்த்துக் கொள்ளுகிறீரோ என்று திருமாலைக் கேட்கிறார் பேயாழ்வார்.

திருமால் செயற்கரிய செயலைச் செய்து திருவருள் பாலித்தான் என்பது விஷயம். அந்த அரிய செயலின் அருமைப்பாட்டையும் பெருமையையும் இப்படி சுவைக்கலையோடு சொந்தம் பாராட்டியும் பாடுகிறார் ஆழ்வார்.

இசைந்த அரவமும்
வெற்பும் கடலும்
பசைந்தங்கு அமுது
படுப்ப — அசைந்து
கடைந்த வருத்தமோ
கச்சி வெஃகாவில்
கிடந்திருந்து நின்றதுவும்
அங்கு!

இப்படி வேடிக்கையாக அவதாரச் செயல்களை எடுத்துப் பாடும் முறையைப் பின்னர் தோன்றிய பக்த கவிஞர்களும் கையாண்டிருக்கிறார்கள். அருணாசல கவி 'ஏன் பள்ளி கொண்டீர் ஐயா' என்று பாடியதும் இதுவே!

“நான் கொஞ்சம் கடை வரையில் போய்விட்டு அரை மணி நேரத்தில் திரும்பி வந்து விடுகிறேன். கனகம் இங்கேயே இருக்கட்டும்'' என்று என் சிநேகிதி ஒருத்தி தன் பெண்ணை விட்டு விட்டுப் போனாள்.

கனகத்துக்குப் பன்னிரண்டு வயது இருக்கும். எட்டாம் வகுப்போ, என்னமோ படித்துக் கொண்டிருந்தாள். அவளிடம் சில நிமிஷங்கள் பேசிக் கொண்டிருந்து விட்டு என் காரியங்களைக் கவனிக்கலானேன்.

கனகம் மேஜைமீது இருந்த ஒரு பத்திரிகையை எடுத்துப் புரட்டினாள். முதலில் கொஞ்சம் படித்தாள்; கடைசியில் கொஞ்சம் படித்தாள். அதை ஒரு ஸோபாவின் மீது போட்டாள். ஊஞ்சல் பலகையின் மீதிருந்த ஒரு பத்திரிகையை எடுத்தாள். நடுவில் கொஞ்சம் புரட்டினாள். அதை மேஜை மீது எறிந்தாள். புத்தக அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்தாள். அதைப் பார்க்கும் போது அவள் முகம் சிணுங்கிற்று. தலைகீழாக வைத்துக் கொண்டு பார்த்து விட்டு அதை ஊஞ்சல் பலகையின் மீது வைத்தாள். பிறகு வாசல் பக்கம் போய் ஒரு ஜன்னலுக்கு இடுக்கில் முகத்தை வைத்துக் கொண்டு நின்றிருந்தாள்.

''என்ன பார்க்கிறாய்?'' என்று வியப்புடன் கேட்டேன்.

''அம்மா வருகிறாளோ என்று பார்க்கிறேன்'' என்றாள்.

''ஏன், உள்ளே வந்து உட்காரேன்.''

''போரடிக்கிறது!'' என்றாள்.

''அப்படி என்றால்?'' என்று கேட்டேன்.

''இது தெரியாதா? போரடிக்கிறது என்றால் போர் அடிக்கிறது.''

''இப்படியெல்லாம் நீ சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது'' என்றேன்.

''பின்னே மறுபடி போர் அடிக்கிறதே!'' என்று அந்தச் சிறுமி கூறினாள். நான் அதற்கு மேல் அவளிடம் பேச்சுக் கொடுக்கவில்லை.

'போர்' என்ற இந்த ஆங்கில வார்த்தை தமிழ்ப் பேச்சில் நன்றாக ஐக்கியமாகி விட்டது. சும்மா சளசளவென்று பேசிக் கொண்டிருப்பவர்களை, ஓயாமல் திரும்பத் திரும்பச் சொன்னதையே சொல்லிக் கொண்டிருப்பவர்களை, தங்களைப் பற்றியே கூறிக் கொண்டிருப்பவர்களை 'போர்' ஆசாமிகள் என்று சொல்வது வழக்கம். பொழுது போகாமல் இருக்கும் போதும் இந்த வார்த்தையை உபயோகிப்பது வழக்கம். கடவுளை நாயகனாக வரித்த ஒரு காதலி பொழுது போகாமல்,

''பொழுது போகவில்லையே, எனக்கொரு தூது சொல்வாரில்லையே!''

என்று பாடினாள். நாயகன் வந்து சேராதது அவளுக்கு உண்மையிலேயே போர் அடித்திருக்கிறது.

ஆனால், படித்துக் கொண்டிருக்கும் சிறுமிகள், பெரிய பெண்கள் எல்லாருமே அந்த வார்த்தையை அடிக்கடி உபயோகிப்பதன் காரணம்தான் தெரியவில்லை.

இரண்டு மூன்று பெண்கள் சேர்ந்து சிரித்துப் பேசிக் கும்மாளமடித்துக் கொண்டிருப்பார்கள். திடீரென்று ஒரு பெண் ''ஒரே போரடிக்கிறது'' என்பாள். ஒரு பெண் பரீட்சைக்காகப் பள்ளிக்கூடப் புத்தகங்களை மும்முரமாகப் படித்துக் கொண்டிருப்பாள். எதிர்பாராமல், ''போர் அடிக்கிறது!'' என்று கூறி அதை வீசிப் போடுவாள். காதல் ரசம் ததும்பும் நாவலை எடுத்துப் படிக்க ஆரம்பிப்பாள். காலவாசி படிக்கும் போதே, அந்தப் 'போர்' வந்து அவளை அடித்து விடும்.

அந்த வார்த்தையைச் சொல்வது ஒரு 'பாஷன்' ஆகி விட்டது. ஏன், ஒரு வியாதியாகக் கூடப் போய் விட்டிருக்கிறது என்று சொல்வேன்.

பெண்கள் இப்போதே இப்படிச் சொல்கிறார்களே, நாளைக்குக் கலியாணம் ஆகித் தனியாகக் குடித்தனம் செய்யும்போது உண்மையில் 'போர் அடிக்குமே' அப்போது




என்ன செய்வார்கள்? கணவன் காலையில் ஒன்பது மணிக்குக் காரியாலயத்துக்குக் கிளம்பிப் போய் விட்டால் இராத்திரி ஏழு மணிக்குத்தானே திரும்பி வருவார்.

அந்த வார்த்தையை அடிக்கடி உபயோகிப்பதோ, யாருக்கும் சோம்பேறித் தனத்தையும், எதிலும் சிரத்தை ஏற்படாத மனப்பான்மையையும் உண்டு பண்ணி விடும். பொழுது போக்கப் புதுப் புது சாதனங்களும் இல்லை. சினிமாவைப் பற்றிக் கூட போடுவதைப் பற்றிச் சொல்லவில்லை. அதில் புகுந்தால் சோறு தண்ணீர்கூட ஞாபகம் இராது; நாளை மறந்துப் போகும். இப்போது விஞ்ஞானத்தைப் பற்றி எத்தனையோ புத்தகங்கள் சித்திரப் புத்தகங்கள் எல்லாம் வந்திருக்கின்றன. சிறுவர்களுக்கும் புரியும்படி கதைபோல் எழுதியிருக்கிறார்கள். இத்தகைய புத்தகங்களை வாங்கி வைத்துக் கொண்டு அந்தப் 'போர்' தலை காட்டத் தொடங்கும்போது அவற்றைப் படிக்க முயற்சி செய்யலாம்.

நான் இப்படி எழுதுவதைப் படிக்கும் பெண்களுள் ஒருத்தி, 'இதென்ன கத்த போராயிருக்கிறது?' என்று முணுமுணுப்பது என் காதில் விழுகிறது!

★ ★ ★

ஸ்திரீகள் மோட்டார் வண்டி ஓட்டுவதைப் பற்றிப் பரிகசிப்பதுண்டு. ஒருவன் தெருவில் போய்க் கொண்டிருந்த போது திடீரென்று ஒரு லாந்தர் கம்பத்தின் மீதேறி உச்சியில் தொத்திக் கொண்டான். "ஏன்?" என்று நண்பன் கேட்டான். "அதோ ஒரு பர்லாங்கு தூரத்தில் ஒரு பெண் பிள்ளை மோட்டார் ஓட்டிக் கொண்டு வருகிறாள்" என்று பதில் வந்தது.

"அப்படியானால் நான் இந்தக் குறுக்கு வழியாக ஓடிப் போய் விடுகிறேன். லாந்தர் கம்பத்தில் மோதி விடப் போகிறாள். ஜாக்கிரதை!" என்று எச்சரித்து விட்டு ஓடினானாம். இதெல்லாம் வெள்ளைக்கார தேசத்தினர் ஹாஸ்யம். அங்கே உண்மையிலேயே பல ஸ்திரீகள் சரியாக வண்டி ஓட்டுவதில்லை.

ஆனால் நமது தேசத்தில் அப்படி இல்லை. இங்கே பெண்கள் கூடிய வரை நன்றாகவே, நிதானத்துடன் காரை ஓட்டுகிறார்கள். முன்னால் சென்று கொண்டிருக்கும் வண்டியை முந்திக் கொண்டு செல்ல முயற்சி செய்வதில்லை. இங்கே ஸ்திரீகள் வண்டி ஓட்டுவதனால் ஏற்படும் விபத்துக்கள் உலகத்திலேயே மிகவும் குறைந்த அளவு விகிதமுள்ளது.

சென்னையில் சர்க்கார் பஸ் ஓட ஆரம்பித்த காலத்தில் டிக்கெட் கொடுக்கும் பெண் கண்டக்டர்கள் இருந்தார்கள். சில மாதங்களுக்குப் பிறகு அவர்களை வேலையினின்று எடுத்து விட்டார்கள். ஏனோ தெரியவில்லை.

இப்போது திருவனந்தபுர ராஜ்ய சட்ட சபையில், ஸ்திரீகளைப் பஸ் ஓட்டுவதற்காக நியமிப்பதைப் பற்றிய கேள்வி வந்தது. அவர்களுக்கு வண்டி ஓட்டும் பயிற்சி அளிப்பதைப் பற்றி யோசனை செய்து கொண்டிருப்பதாக மந்திரி தெரிவித்தார்.

ஸ்திரீகள் பஸ் ஓட்டினால், அது முன்னால் போய்க் கொண்டிருக்கும் சைக்கிளையோ, வண்டியையோ முட்டாது. பின்னால் வந்து கொண்டிருப்பதையும் உதைக்காது என்பது நிச்சயம். ஆனால் பூதமாயிருக்கும் பெரிய பஸ்ஸை ஏழு மணி நேரம் தொடர்ந்து அமர்ந்து ஸ்திரீகளால் ஓட்ட முடியும் என்று தோன்றவில்லை.

'உறவு'களில் கலாசார உறவு என்று இப்போது புதிதாக ஏற்பட்டிருக்கிறது. இந்த உறவு ஒரு தேசத்துக்கும் இன்னொரு தேசத்துக்குமிடையே ஏற்படுத்திக் கொள்வது. இதற்காக நம் ஸர்க்காரர்கள் மற்றத் தேசங்களுக்குப் போய், நடனமாடி விட்டும், நாடகங்கள் நடத்திக் காட்டி விட்டும் வருகிறார்கள். அதே மாதிரி மற்றத் தேசத்தினரும் இங்கே வந்து செய்து விட்டுப் போவார்கள்.



கடைசியாக 'ஒரே பெயர் உள்ள ஊர் உறவு' என்று கொண்டாடுகிறார்கள். அமெரிக்காவில் ஸேலம் என்று ஓர் இடம் இருக்கிறது. அந்த ஊர்க்காரர் நமது ராஜ்யத்திலுள்ள சேலத்துக்கு விஜயம் செய்து விட்டுப் போனார். அமெரிக்காவில் 'மெட்ராஸ்' என்று பெயருள்ள ஒரு சிறிய நகரம் இருக்கிறது. ஸ்ரீமதி அம்முகவாமிநாதன் அந்த ஊரைத் தரிசித்து விட்டு வந்தார்.

ஒரு தேசத்துப் பாஷையை இன்னொரு தேசத்தார் கற்றுக்கொள்ள விரும்புவதும் உறவு கொண்டாடும் முறைகளுள் ஒன்று. ஜெர்மனியில் உள்ள கொலோன் சர்வகலாசாலையில் நமது நாட்டைச் சேர்ந்த ஸ்ரீமதி மீனாட்சி பூரி தமிழ் மொழி சொல்லிக் கொடுக்கிறாராம். அவர் தமிழில் கரும் பலகையில் எழுதுவதன் போட்டோ மேலே இருக்கிறது.

'இந்தியா ஒரு பெரிய நாடு. அதற்கும் ஜெர்மனிக்கும் நெருகிய தொடர்பு இருக்கிறது......" என்று அதில் எழுதியிருப்பதாக ஊகம் செய்து கொள்ளலாம். அப்படி ஊகம் செய்து கொள்ளும் போது 'நெருகிய' என்பது 'நெருங்கிய' என்பதைத்தான் குறிக்கிறது என்றும் ஊகம் செய்ய வேண்டும்.

ஒரு தேசத்தினர் இன்னொரு தேசத்தினருக்கு, அதுவும் ஜெர்மானியர் போன்ற நூற்றுக்கு நூறு திறமைசாலிகளுக்குப் போதிக்கும்போது அதி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நான் கையெழுத்தைக் கவனித்துக் கொண்டிருந்த போது இந்தத் தவறு கண்ணில் பட்டு விட்டது.

நாம் பொதுவாகக் கையெழுத்து விஷயத்தில் சிரத்தை கொள்வதே இல்லை. ஏன், அலட்சியமாகவே இருக்கிறோம். முதலில் இவ்வெழுத்துக்களை எழுத ஆரம்பிக்கும் போதே சரியாக, அழகாக எழுதப் பயிற்சியளிக்க வேண்டும். பல பள்ளிக்கூடங்களில் அச்சில் எழுத்துக்கள் எழுதுவதற்குப் புள்ளிகள் வைத்துக் கொடுத்து எழுதச் சொல்



லிப் பழக்குகிறார்கள். எழுத்து அச்சு மாதிரி வருகிறது. தமிழ் எழுத்துக்கள் எழுதும் விஷயத்தில் இத்தகைய முயற்சி செய்வதேயில்லை. அ, ஆ, க, கா, முதலிய எழுத்துக்கள் ஏதோ அவரவர்கள் தம் பொருத்தப்படி அமையட்டும் என்று பேசாதிருந்து விடுகிறோம். பரீட்சை கேள்விகளுக்குப் பதில் எழுதும் போது எழுத்து நன்றாயிருந்தால் அதற்காகவே கூட அதிக மார்க்குகள் கிடைக்கக் கூடும்.

என் கையெழுத்துப் புரியவில்லை என்று சிலர் சொல்வது உண்டு. அவர்களுக்கு மட்டும் என்ன? சில சமயங்களில் எனக்குக் கூடத் தான் புரியவில்லை!

ஒரு பெண் ஒரு ராஜ்யத்தின் மந்திரியாகி விடலாம். ஏன், ஸ்ரீமதி சுசேதா கிருபளானியைப் போல் ஒரு ராஜ்ய முதல் மந்திரியாகக் கூட வந்து விடலாம். ஏனென்றால், இந்தப் பதவிகள் வகிப்பதற்கு இன்னின்ன பரீட்சை கொடுத்திருக்க வேண்டும் என்றோ, இத்தனை அநுபவம் உள்ளவர்களாயிருக்க வேண்டும் என்றோ ஒரு நிபந்தனை கிடையாது. எழுதப் படிக்கத் தெரிந்திருந்தாலே போதுமானது.

ஆனால் அவர்களிடம் வேலை செய்யும் ஜில்லா கலெக்டர்கள் ஐ. ஏ. எஸ். பரீட்சையில் தேறி, அதற்கான பயிற்சிகள் பெற்று, பல வருஷ உத்தியோக அநுபவமும் உள்ளவர்களாக இருந்தாக வேண்டும். சாதாரணமாக ஆண்கள் தலையில் வழுக்கை விழுந்து நாற்பத்தைந்து ஐம்பது வயதான பிறகுதான் ஜில்லா கலெக்டர்களாக முடியும்.

சென்னை ஜில்லா இப்போது குமாரி சந்திரபாமா ஐ. ஏ. எஸ். அவர்களைக் கலெக்டராகப் பெற்றிருக்கும் பெருமையை அடைந்திருக்கிறது. சென்னையின் முதல் பெண் கலெக்டர் அவர். கலெக்டர்கள் சரித்திரத்திலேயே மிகக் குறைந்த வயதானவர் என்று நினைக்கிறேன். அவருக்கு வயது இருபத்தொன்பது.

நான் ஒரு முறை அவரைச் சந்தித்திருக்கிறேன். மெலிந்த தேகம் உள்ளவர். மரியாதையுடன், நாசூக்காக, இலேசாகப் புன்னகை ததும்ப உத்தியோக தர்பார் எதுவுமின்றி நிதானமாகப் பேசுகிறார். ஆனால், அத்தனைக்கும் பின்னால் நல்ல தன்னடக்கமும் உறுதியான மனப்பான்மையும் இருப்பது தெரிகிறது.

வீணை கற்றுக் கொண்டு அதை வாசித்து அநுபவிக்கிறார். நல்ல கடுமையான உழைப்புக்குப் பிறகு வீணை வாத்திய இன்னிசை மனத்துக்கும் நரம்புகளுக்கும் அமைதியை அளிக்கும் அல்லவா?

ஐ.ஏ.எஸ். என்னும் பரீட்சைக்குப் போய்ப் பல கடினமான கேள்வித்தாள்களுக்குப் பதில் எழுதி அதில் தேர்வு பெறுவதோடு நிற்பதில்லை. அந்தப் பரீட்சையிலேயே நூற்றுக்கு இருபது பேர் விகிதம் தேறினால் அதிகம்.

பிறகு டெல்லிக்குப் போய் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் முன் ஆஜராகி அதன் அங்கத்தினர்கள் கேட்கும் சிக்கலான கேள்விகளுக்கு நேரில் பதில் சொல்ல வேண்டும். அந்த அங்கத்தினர்களின் மனத்தில், பதிலளிக்கும் பையனோ பெண்ணோ ஒரு பெரிய நிர்வாக அதிகாரியாயிருக்க லாயக்குள்ளவர் என்று பட வேண்டும். இந்தப் பேட்டிப் பரீட்சையில் பலர் வடிகட்டி நிறுத்தப்படுவார்கள்.

அப்புறம் முஸ்ஸோரியில் ஒரு வருஷகாலம் நிர்வாகப் பயிற்சி பெற வேண்டும். அங்கே துப்பாக்கி சுடும் பயிற்சி, குதிரையேறும் பயிற்சி முதலியனவும் உண்டு.

அதற்குப் பிறகு கிராமத்துக்குச் சென்று கணக்குப்பிள்ளை, பட்டாமணியம் இவர்களோடு இருந்து வேலையை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு ரெவின்யூ இன்ஸ்பெக்டர், தாசில்தார், இப்படி மற்ற அதிகாரிகள் வேலை செய்வதைத் தெரிந்து கொள்ள வேண்டும். இப்படியாக நிர்வாகத்தைப் பற்றிப் பல அம்சங்களைத் தெரிந்து கொள்ளச் செய்த பிறகுதான் பொறுப்பான உத்தியோகத்தில் நியமிக்கப்படுவார்.

சென்னையில் இன்னொரு இளம் பெண்ணும் ஐ.ஏ.எஸ். தேறி வேலை பார்க்கிறார். அவர் ஸ்திரீகள் சமூக நல டைரக்டராக இருக்கும் குமாரி எம். எஸ். ரமேஷ் அவர்கள்.



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

## பெப்ஸ் வில்லைகளை

**உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்.**

பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேதனையைக் குறைக்கவும், தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத் திற்கும் காரணமான கிருமிகளைக் கொல்ல உதவியளிப்பதற்கான வேலையைச் செய்வதை உணருங்கள். உடனடி நிவாரணமளிக்கவும் கிருமிகளை அகற்றவும் பெப்ஸ் உதவிபுரிகிறது




பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

வி. இ. புல்போர்ட (இந்தியா) பிரைவேட் லிட்

PPY-55-TAM

சென்னை ராஜ்யத்திற்கு பூரண விநியோகஸ்தர்கள்:
மெஸர்ஸ் மோதி & கம்பெனி, சென்னை - 3



**பவுன் சூரியன்**
**மார்க் புகையிலை**
**காரைக்குழி**

BS.

அத்தியாயம் பதினெட்டு

## அன்ன நடை

மிருகக் காட்சிசாலையில் குழந்தைகளுக்கு மிருகங்களையெல்லாம் வரிசையாகக் காண்பித்து விளக்கங்கள் கூறிக் கொண்டு உமா சுற்றி வந்தாள். கள்ளங்கபடற்ற குழந்தைகளின் உற்சாகமும், தமாஷ்களும், சிரிப்புகளும், ஓட்டமும் நடையும் அவளைச் சூழ்ந்து கொண்டு அவளையும் குழந்தையாக்க முயன்றன.

''அதோ, யானை! யானை!'' என்று குழந்தைகளெல்லாம் கூவிக் கொண்டு, இரண்டு யானைகள் மணியோசையுடன் ராஜநடை போட்டு வரும் திசை நோக்கிப் பாய்ந்து ஓடினார்கள்.

''ஜாக்கிரதை! ஜாக்கிரதை!'' என்று உமாவும் கத்திக் கொண்டு, குழந்தைகளை எட்டிப் பிடித்து நிறுத்துவதற்காக அவர்கள் பின்னால் வேகமாகத் தாவி ஓடினாள்.

அதே சமயம் அவள் பின்னால் யாரோ ஒருவர் 'திமுதிமு' வென்று ஓடி வரும் சத்தம் கேட்டது.

உமா ஓடிய வேகத்தில் உடனே நிற்க முடியவில்லை என்றாலும், தன் வேகத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு ஒருவாறு சமாளித்தபடி நின்றாள்.

அதற்குள் அவள் பின்னால் ஓடி வந்த வாலிபன் அவள் அருகில் வந்து, அவளைத் தொடாத குறையாய் ஒட்டிக் கொள்வது போல் நெருங்கி நின்று கொண்டு, மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க, ''மிஸ் உமா! ஓட்டப் பந்தயத்தில் உங்களுக்குத்தான் முதல் பரிசு கிடைக்கும்!'' என்றான்.

அவனைப் பார்த்ததும் உமா, ''பிச்சுமணியா?'' என்று தன்னை மறந்து கூவியவளாய் வியப்புடன் அவனை ஒருகணம் வெறித்து நோக்கினாள். ஆனால் அவனுடைய இளமை விழிகளில் குதித்தோடும் உணர்ச்சிமயமான ரசனையையும் உல்லாசச் சிரிப்பையும் உணர்ந்ததும் உமா தன்னையறியாமல் ஒருவித நாணமும் பரபரப்பும் ஏற்பட்டதனால் சட்டென்று தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

பிச்சுமணியின் முகத்தில் தாற்காலிகமாக ஒரு சிரிப்பு மின்னலிட்டதென்றாலும் அதற்கு அடியில் ஏதோ ஓர் இடிமுழக்கத்துக்கு அறிகுறியான கடுமையின் மூட்டம் மறைந்திருந்தது. ஆசையோடு உமாவை ஏற இறங்கப் பார்க்கும் அவனுடைய குறுகுறுத்த விழிகளோ ஏதோ ஓர் உணர்ச்சியாவேசத்தாலும், ஏக்கத்தாலும், ஆத்திரத்தாலும், அழுகையாலும் கனன்று வெந்திருந்தன. அதற்குக் காரணம் அவனுடைய உள்ளத்தில் டாக்டர் ஜகந்நாதன் உருவேற்றியிருந்த பொறாமைதான் என்பது உமாவுக்குப் புரிந்திருக்காது. பிச்சுமணி எப்படி அங்கே வந்தான்? கதைகளில் வருவது போல் அதை எதிர்பாராத சந்திப்பு என்று உமாவால் கருதவும் முடியவில்லை. பிச்சுமணி திட்டமிட்டே அங்கு



# ஒரு ராமநாதன்

வந்திருக்கிறான் என்று அவனுடைய பார்வை மோப்பங்களிலிருந்து தெளிவாகத் தெரிந்தது.

''பிச்சுமணி! நீ.... நீயும் இங்கே வேடிக்கை பார்க்க வந்தாயா?'' என்று உமா மெல்லக் கேட்டாள்.

''இல்லை! நீங்கள் டியூஷன் குழந்தைகளை அழைத்துக் கொண்டு இங்கே இந்த நேரத்தில் வரப் போவதாகத் தெரிந்தது....'' என்று பிச்சுமணி சங்கோசத்தோடு நெளிந்தான்.

''உனக்கு எப்படித் தெரிந்தது...?''

''டாக்டர் ஜகந்நாதன்தான் சொன்னார்!'' என்றான் பிச்சுமணி. அவன் ஜகந்நாதனின் பேரை உச்சரிக்கும் போது அதில் ஓர் ஆழ்ந்த கசப்பு தொனித்தது.

'' பிச்சுமணி! நேற்றிரவு நீ என் வீட்டிலிருந்து நேரே உன் வீட்டுக்குத் தானே போனாய்? இல்லை, உன் தாத்தாவிடம் சவால் விட்டபடி ராத்திரி ஒரு மணிக்குத்தான் போனாயா?''

''நீங்கள் சொன்னதால் நேரே என் வீட்டுக்குத்தான் சென்றேன். ஆனால்... ஆனால்...'' என்று இழுத்தான்.

''ஆனால் என்ன?''

'' எனது தாத்தா வாசற்படியில் ஒரு நாற்காலியைத் தூக்கிப் போட்டுக் கொண்டு கொட்டக் கொட்ட விழித்தபடி எனக்காகக் காத்துக் கொண்டிருந்தார். நான் அவரை அப்படியே நாற்காலியோடு தூக்கி அப்பால் வைத்து விட்டு உள்ளே போனேன். ஆனால் அவரோடு நான் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவரும் என்னோடு பேசவில்லை. நான் விடுவிடுவென்று என் மாடியறைக்குப் போய்ப் படுத்துக் கொண்டேன். அது தாத்தாவுக்குப் பொறுக்கவில்லை! இருதயசாமியை அவர் கத்திக் கூப்பிட்டு, 'டேய், அந்த முட்டாள் பயலை ஒழுங்காகச் சாப்பிட்டு விட்



டுப் படுத்துக் கொள்ளச் சொல்லுடா' என்று என் காது கிழியக் கூப்பாடு போட்டார். நானும் பதிலுக்கு 'எனக்குச் சாப்பாடும் வேண்டாம், கூப்பாடும் வேண்டாம்! நான் மிஸ் உமாவின் வீட்டிலேயே 'வயிறு ரொம்ப'ச் சாப்பிட்டு விட்டேன்! அந்த மிஸ் உமா சொன்னதால்தான் நான் இப்போது நேரே வீட்டுக்கு வந்தேன். என்னை ரோஷமில்லாத முட்டாள்பயல் என்று நினைத்துக்கொள்ள வேண்டாம்' என்று கத்தினேன். அதன் பிறகு தாத்தாவிடமிருந்து ஒரு பேச்சும் வரவில்லை! 'கப்சிப்' என்று அடங்கிவிட்டார்! உங்கள் பேரைச் சொன்னாலே போதும்; தாத்தாவுக்கு வாய்ப்பூட்டு போட்ட மாதிரி இருக்கும்...''

அதைக் கேட்டதும் உமாவுக்கு நெஞ்சு பகீரென்று அடித்துக்கொண்டது. — வெகுளித்தனமான பேச்சுகள் விரோதங்களைக் கிளப்பிவிடுமோ என்று அவள் இது வரையில் நினைத்துப் பார்த்தது கூட இல்லை.

''மணி! உன் தாத்தாவிடம் நீ அப்படி சொல்லியிருக்கக் கூடாது!''

''ஏன் சொல்லக் கூடாது? நான் உண்மையைத்தானே சொன்னேன்?''

அதற்கு உமா என்ன பதில் சொல்ல முடியும்? அவனுக்குப் பொய் சொல்லும்படி கற்பிக்க முடியுமா?

உமா மௌனமாக முகம் வியர்க்கத் தலைகுனிந்து நின்றாள்.

யானைகள் அவர்களை நோக்கி வரும் மணியோசைகள் கேட்டன.

''டீச்சரக்கா! டீச்சரக்கா!'' என்று கூவிக்கொண்டே குழந்தைகள் எல்லோரும் திரும்பி ஓடி வந்தார்கள்.. தங்கள் டீச்சரக்காவின் அருகில் பிச்சுமணியைக் கண்டதும், அவர்கள் ''ஓ! பட்டாளத்தார் வீட்டுப் பையன்! மொட்டைக் கார் மணி...! டிங்டாங் மணி....!'' என்று பலவாறாகவும் உற்சாகமாகக் கூவியபடி துள்ளிக் குதித்து அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். சிறுமி ராஜி மட்டும் பெரிய மனுஷி போல் தன் தாவணியைச் சரி செய்துகொண்டு நாணத்தோடு உமாவுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு தன் குறுகுறு விழிகளால் பிச்சுமணியை விநோதமாகப் பார்த்தபடி நின்றாள்.

''டீச்சரக்கா! என்னை யானை மேல் உட்கார வைக்கச் சொல்லுங்கள்!'' என்று சிறுவன் ரவி ஆரம்பித்தான். அந்த ராக ஆலாபனையில் மற்றச் சில குழந்தைகளும் சேர்ந்துகொண்டார்கள். அவர்களுக்காகப் பிச்சுமணி பரிந்துகொண்டு அவனே காசு கொடுத்து அவர்களை யானை மீது உட்காரவைத்துக் குதூகலம் அடையச் செய்தான்.

பிறகு அவன் உமாவோடும் குழந்தைகளோடும் சேர்ந்து கொண்டு, மிருக வகைகள், பட்சி ஜாலங்கள், ஊர்வன, நீந்துவன முதலான பிராணிகளை வேடிக்கை பார்ப்பதிலும் படகு வலிப்பதிலும், புளியோதரை, தயிர்ச் சாதம் முதலியவைகளைப் பகிர்ந்து சாப்பிடுவதிலும் வெகு ஆனந்தமாகப் பொழுதைக் கழிக்கலானான்.

குரங்கு ஜோடிகள் காதல் குறும்போடு ஒன்றை ஒன்று விரட்டுவதையும் கிளிகளும், குருவிகளும் கொஞ்சிக் கொஞ்சி மகிழ்வதையும் நவநாகரிக ஆண் பெண் ஜோடி ஒன்று கைகோர்த்தபடி ஒருபுறம் உலாவுவதையும், புதிதாகக் கல்யாணமான கிராமியத் தம்பதிகள் இருவர் தங்கள் மாமியார் மாமனார்களின் கண்களில் படாதபடி புது மோகக் கிறக்கத்தோடு புன்சிரிப்புப் புரிவதையும் பிச்சுமணி கவனித்த போது, உமாவை ஓரக்கண்ணால் பார்த்து, விழிகள் மின்ன, கைகள் பரபரக்க விம்மினான்! அப்போதெல்லாம் உமாவோ அதைக் கவனியாதவள் போல் தன் தலையைத் திருப்பிக் கொண்டாள். இருந்தாலும் நாணம் என்கிற அங்குசத்தையும் மீறிக் கொண்டு அவளுடைய மதர்ப்பு விழிகளில் புன்சிரிப்புப் பாய முயன்றது. அது மட்டுமல்ல! ஏதோ ஓர் ஆனந்தம், இதுவரை என்றைக்குமே அவள் அனுபவித்திராத குதூகலக் குறுகுறுப்புப் பொங்கிப் பரவி அவளது உடலெங்கும் வியாபித்தது. ஆனந்தமயமான ஒரு தனி உலகத்தில் சஞ்சரிப்பது போன்ற ஒரு பரவசமும் உண்டாயிற்று.

ஆனந்தம் அதிகரித்தால் அதற்கு முத்தாய்ப்பாகவோ, உரைகல்லாகவோ ஒரு துன்பமும் காத்திருக்குமல்லவா?

அவர்கள் மிருகக் காட்சியில் இரண்டாவது சுற்று வரும்போது உமா ஒரு புலிக் கூண்டின் முன்னால் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு குழந்தைகளையும் பிச்சுமணியையும் மட்டும் அடுத்த கரடிக் கூண்டைப் பார்த்து வரும்படி அனுப்பினாள்.

அவர்கள் சிறிது தூரம் சென்றதும் சிறுவன் ரவி சட்டென்று நின்று, உமாவுக்குப் பின்னால் எதையோ பார்த்து மிரண்டு அலறுகிறவன் போல், ''ஐயய்யோ! யானை! யானை! உங்களுக்குப் பின்னால் யானை ஓடி வருகிறது!'' என்று கத்தினான்.

இன்பம் பொங்கும் இல்லம், கண் நிறைந்த கணவன், மாண்புள்ள மனைவியாள், வீட்டு வேலைகளை விருப்பமுடன் செய்வாள்...

**துணி வெளுக்க அவள் உபயோகிப்பது துல்லியமான டெட்...**

கண்ணைப் பறிக்கும் வெண்மை. ஆரோக்கியம் தரும் தூய்மை, டெட் சலவையின் மேன்மை!

நாகரிக நங்கையர் தேர்ந்தெடுக்கும் நவீன சலவை சாதனம் டெட்!




ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்-3

Shilpi som 1 tam

அவ்வளவுதான்; உமா நெருப்பை மிதித்தவள் போல் விருட்டென்று துள்ளிக் குதித்துத் தலை தெறிக்கும் வேகத்தில் ஒருபுறம் ஓடலானாள்.

அந்த வேகத்தில் ஒரு மரத்தின் வேரில் கால் இடறி, அதன் அருகில் உள்ள சகதி மயமான ஒரு பள்ளத்தில் உமா தொபுகடீரென்று விழுந்து விட்டாள். அவளுடைய வலது கால் ஒரு சிறு குழிக்குள் பாய்ந்து வெளியே எடுக்க முடியாதபடி மாட்டிக் கொண்டு விட்டது.

பிச்சுமணி தன் உயிரே கிழியும் குரலில் ''உமா! உமா!'' என்று கத்திக்கொண்டே புயற் காற்றெனப் பாய்ந்தோடினான்.

'யானை வருகிறது' என்று ரவி வெறும் தமாஷுக்காகப் பொய்யாகத் தான் சொன்னானாகையால், ''மச்சரக்கா பயந்துட்டாங்க! ஏமாந்துட்டாங்க! ஓடுறுங்க!'' என்றெல்லாம் கைகொட்டிச் சிரித்த குழந்தைகள் தங்கள் மச்சரக்கா விழுந்து விட்டதை உணர்ந்ததும், ''மச்சரக்கா! மச்சரக்கா!'' என்று ஓலமிட்டபடி அந்த இடத்தை நோக்கி ஓடிவந்தார்கள்.

சகதிப் பள்ளத்தில் உமா ஒரு சிறு மலர்க் குவியல் போல் அனாதையாகச் சுருண்டு கிடந்தாள். பிராணனைக் கிழிக்கும் கால் வலியையும், அதிர்ச்சியையும் பொறுத்துக்கொள்ள முயன்றவளாய்ப் பற்களைக் கடித்துக்கொண்டு தன் இரு கைகளால் முகத்தை நன்றாக மூடிக் கொண்டும் புழுவென நெளிந்து நெளிந்து துடிதுடித்துக் கொண்டிருந்தாள்.

''உமா!'' என்று கூவியபடி பிச்சுமணி அவள் கிடக்கும் இடத்தை அடைந்ததும் அவளை நோக்கி முழங்காலிட்டுக் குனிந்தான். அவன் எதற்கும் தயங்கவில்லை. உமாவை மீட்பது ஒன்றுதான் உயிர்ப் பிரச்னையாக அவன் உள்ளத்தில் ஓங்காரமிட்டு அவனை முடுக்கியது.

ரப்பர் பொம்மை போல் வளைந்து மடங்கிக் கிடக்கும் உமாவின் உடலை நோக்கிப் பிச்சுமணி தன் இரு கைகளையும் நீட்டி அவளுடைய தலையை மெல்லத் தூக்கித் தன் விசாலமான மார்பையே தலையணையாக்கிச் சாய்த்துக்கொண்டான்.

உமா பிராண அவஸ்தையோடு முக்கி முனகியபடி, ''என்....கால்... ஆ, ஐய்யோ.... எடுக்க முடியவில்லை... ஏதோ ஒரு குழிக்குள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஐயய்யோ! வலி தாங்க முடியவில்லை!'' என்று பிரக்ஞை தடுமாறும் நிலையில் புலம்பினாள்.

''உமா... உமா! ஏதாவது முயல் குழியாக இருக்கும். கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள். மெல்ல எடுத்து விடுகிறேன். ஒரு நிமிஷத்தில் எல்லாம் சரியாகி விடும்!'' என்று பிச்சுமணி, அமாத குரலில் உணர்ச்சிகளெல்லாம் பீறிடத் தன் உயிரையே எட்டிப் பிடித்திழுத்து அதைக் காக்க முயல்பவன் போல் கூவினான்.

அவன் கைப்பிடிக்குள் உமா பூமாலை போல் துவண்டாள்; நெளிந்தாள்.

''மச்சரக்கா! மச்சரக்கா!'' என்று குழந்தைகள் எல்லோரும் கூவிக் கொண்டும், கண்ணைக் கசக்கிக்கொண்டும், விம்மியழுதுகொண்டும் அவளைச் சுற்றிலும் குழுமி நின்று குனிந்து பார்த்தார்கள்.

''குழந்தை! அந்தக் காலை எடு, அம்மா!'' என்று பிச்சுமணி, உமாவின் காலருகில் நின்ற ராஜியை நோக்கிச் சொன்னான்.

ராஜி குனிந்து உமாவின் ஒரு காலைத் தொட்டாள். தொட்டதுதான் தாமதம், உமா 'வீல்' என்று கத்தி ''ராஜீ... ராஜீ... தொடாதேம்மா ராஜீ!'' என்று வலி தாங்காமல் முனகினாள்.

''மச்சரம்மாவுக்குக் கால் ஒடிஞ்சு போயிடுச்சு போலிருக்கு!'' என்றான் ரவி ஏதோ பேயறைந்த மருட்சியுடன்.

''அப்படிச் சொல்லாதேடா, உன் நாக்கு அழுகிப் போயிடும்!'' என்று ராஜி அழுகையோடும், ஆத்திரத்தோடும் கடிந்துரைத்தாள்.

'டேய், ரவி! உன்னால்தான்டா நம் மச்சரக்கா இப்படி ஆயிட்டாங்க! உன்னால்தான்டா.. உன்னால்தான்டா'' என்று குழந்தைகள் எல்லோரும் சிறுவன் ரவியை நோக்கிச் சீறினார்கள்.

---

காது வைத்தியர் ஒருவர் நீதிமன்றத்திலே ஒரு செவிடனுக்கு எதிராக வழக்குத்தொடர்ந்தார். 'இவன் செவிட்டைப் போக்கி விட்டால் எனக்கு ஆயிரம் ரூபாய் தர வேண்டும் என்று பீஸ் பேசியிருந்தேன். இவன் செவிட்டுத்தனம் போய் விட்டது. ஆனால் என் பீஸ் தொகையான ஆயிரம் ரூபாயை இவன் இன்னும் தரவில்லை!' இதுவே அவரது வழக்கு.



விசாரித்த நீதிபதி வழங்கிய தீர்ப்பு என்னவாயிருக்கும்?

அடுத்த பக்கம் பார்க்கவும்



நீதிபதி வழங்கிய தீர்ப்பு இதுதான்:

''இவன் வைத்தியர் கூறிய கட்டணத்தைக் கேட்டுச் சரி என்று சம்மதித்திருந்தால் இவன் செவிடனே அல்ல. அந்த நிலையில் வைத்தியர் இவனுக்குக் காது வைத்தியம் செய்திருக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்காது. உண்மையில் காது கேட்காமல் இருந்தால் இவன் 'சரி' என்று சம்மதித்திருக்கவே மாட்டான். அந்த நிலையில் ஆயிரம் ரூபாய் கொடுக்க வேண்டிய பொறுப்பு இவனுக்கு ஏது?''

''டீச்சர்! என்னை மன்னிச்சிடுங்க, டீச்சர்! யானை ஓடி வரது என்று நான் பொய்யாகக் கத்தியது தப்புதான் டீச்சர்!'' என்று கண்ணைக் கசக்கிக் கொண்டே விம்மிய ரவி, ''ஆனால் சித்தப்பா சொன்னதால்தான் அப்படிக் கத்தினேன். யானை வருகிறது என்று பயமுறுத்தினால் டீச்சரம்மா பயந்து ஓடுவாங்க. அது தமாஷாக இருக்கும் அப்படின்னு சித்தப்பா தான் சொல்லிக் கொடுத்தார்!'' என்று பொருமினான்.

''அந்த ஆசாமி சொன்னால் உன் மூளை எங்கே போச்சு?'' என்று ஆத்திரத்தோடு கூவிய பிச்சுமணி, ஒரு கையால் உமாவின் தலையைத் தன் தோளோடு சேர்த்து அணைத்துக் கொண்டே இன்னொரு கையை ஓங்கி ரவியை அடிக்க முயன்றான்.

ஆனால் உமா அதைத் தடுத்து, ''பாவம்! குழந்தை என்ன செய்வான்? இது என் விதி!'' என்று பிரக்ஞை தடுமாறும் அந்த நிலையிலும் கருணையோடு கூறினாள்.

இதற்குள் அங்கு கூடிவிட்ட வழிப் போக்கர்களில் ஒருவர், ''பாவம், அந்தப் பெண்ணுக்கு ஏதாவது ஆகிவிடப் போகிறது. சீக்கிரம் கொண்டுபோய் ஒரு டாக்டரிடம் காட்ட வேண்டும்'' என்று கூறினார்.

பிச்சுமணிக்கு 'ஓ'வென்று அழவேண்டும் போலிருந்தது. இருந்தாலும் அந்த உணர்ச்சியை அவன் அடக்கிக் கொண்டு தன் தோள்களுக்கிடையே தலை துவளும் உமாவின் முகத்தை நோக்கி, ''உமா! உங்களை இந்த இடத்திலிருந்து மெல்லப் பத்திரமாகத் தூக்கிக்கொண்டு போகட்டுமா?'' என்று பாசப் பரிவுடன் கேட்டான்.

உமா பேசச் சக்தியற்ற நிலையில் 'சரி' என்பது போல் தலையை ஆட்டினாள்.

பிச்சுமணி அவள் முகத்தருகே குனிந்து, ''உமா! உங்கள் கையால் என் கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்!'' என்று சொல்லிவிட்டுச் சிறுமி ராஜியை நோக்கி, ''நான் மெல்லப் பின்னால் இழுத்துத் தூக்குகிறேன். நீ அந்தக் குழியிலிருந்து காலை மெதுவாக எடுத்து விடு!'' என்றான்.

ராஜி அவ்வாறே செய்வதற்காகக் குனிந்தாள்.

பிச்சுமணி உமாவை மிகவும் ஜாக்கிரதையாக ஒரு மெல்லிய கண்ணாடியைக் கையாளுவதைப் போல் மிகவும் கவனமாக நகர்த்திப் பின்னுக்கு இழுத்து மெதுவாகத் தூக்கினான். ஆனால் அந்தச் சிறு அசைவின் அதிர்ச்சியையும் உமாவின் வலது கால் தாங்க முடியாமல், அவளது இடது காலும் ஊன்றி நிற்கச் சக்தியின்றி அவள் 'வீல்' என்று கத்திவிட்டு அப்படியே பிச்சுமணியின் கரங்களுக்குள் மூழ்கலானாள்.

அவள் நழுவிக் கீழே விழுந்து விடாதபடி இறுக்கிப் பிடித்துக் கொண்டு பிச்சுமணி ஆறுதலாக ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் அவள் தோள்மீது உமாவின் தலை மூர்ச்சையுற்றுத் துவண்டு சரிந்து விடவே, 'ஏதோ 'ஸீரியஸாக' இருக்கும்போலிருக்கு! உடனே என் காருக்குக் கொண்டு போவோம்! சீக்கிரம் 'ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டும்' என்று துடி துடித்தான்.

உமாவின் வலது கால் ஒடிந்த பாவனையில் துவண்டு அதிலிருந்து ரத்தம் வேறு கசிந்தது.

அன்னம் போல் அழகாக நடக்கும் உமாவின் கால் ஒன்று நொண்டியாகி விடுமோ? அதை நினைத்துப் பார்க்கக் கூடப் பிச்சுமணி நடுநடுங்கினான்.

குழந்தைகள் எல்லோரும் ''டீச்சரக்கா! டீச்சரக்கா!'' என்று பெரிதாக அழ ஆரம்பித்து விட்டார்கள். சிறுவன் ரவியோ தன் விம்மல்களுக்கிடையில் தன் சித்தப்பா டாக்டர் ஜகந்நாதனைப் பழிக்குப் பழி வாங்கவேண்டு மெனக் கருவினான்.

பிச்சுமணி தன் உணர்ச்சிப் பெருக்கில் நூறு யானை பலம் பெற்றவன் போல் தன் இரு கைகளிலும் பலத்தைத் திரட்டிக் கொண்டு உமாவைப் பஞ்சுப் பொம்மை போல் தானொருவனாகவே தூக்கிக் கொண்டு மிருகக் காட்சி சாலையின் வாசலுக்கு வெளியே நிறுத்தியிருக்கும் தன் காரை நோக்கி வெகு வேகமாகச் சென்றான்.

நல்லவேளையாக அந்த வாசல் அருகிலேயே இருந்ததால் அவன் சீக்கிரமாகத் தன் பேபி ஆஸ்டின் காரை அடைந்து அதன் பின் ஸீட்டில் உமாவின் உடலைச் சாய்வாகக் கிடத்தினான். குழந்தைகளும் அலறியடித்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்து, "மச்சரக்கா! மச்சரக்கா!" என்று புலம்பினார்கள்.

உமாவின் வலது கால் பாதத்தில் சிராய்ப்புகளிலிருந்து ரத்தம் கசிவதைப் பிச்சுமணியால் பொறுக்க முடியவில்லை. உடனே அவன் தன் மேல் சட்டையைக் கிழித்துக் கால் பாதத்தின் ரத்தக் கசிவுகளைத் துடைத்தான். அதற்கு மேல் என்ன செய்வது, எப்படிக் கட்டுப் போடுவதென்பதொன்றும் அவனுக்குத் தெரியவில்லை; சங்கடமாகவும் இருந்தது.

சட்டைத் துணியின் துண்டுகளைச் சிறுமி ராஜியிடம் கொடுத்தான். அந்தக் குழந்தையும் திருதிருவென விழித்தாள்.

அதற்குள் காரைச் சுற்றி ஒரு சிறு ஜனக் கும்பலே கூடி விட்டதால், அக் கும்பலில் யாரோ ஓர் அனுபவஸ்தர், "பாவம்! அந்தப் பொண்ணுக்கு உடம்பு குளிர்ந்துவிடப் போகிறது. ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகும் வரை காலையும் கையையும் தேய்த்துச் சூடு பண்ணிக்கொண்டேயிருக்க வேண்டும்!" என்றார்.

உடனே பிச்சுமணி பதறியவனாக உமாவின் இரு பாதங்களையும் தன்னிரு கைகளாலும் தேய்த்துச் சூடு பண்ண ஆரம்பித்தான்.

உமாவிடமிருந்து ஒரு முனகல் ஒலி கேட்டது.

பிச்சுமணி பாய்ந்து சென்று உமாவின் தலையைப் பரிவுடன் தூக்கித் தன் ஒரு புஜத்தின்மீது சாய்த்துக் கொண்டு "உமா! உமா!" என்று பரிதாபமாகக் கூப்பிட்டான்.

ஆனால் உமாவிடமிருந்து பதில் வரவில்லை. அவளுடைய தலை துவண்டு தொங்கியது.

பிச்சுமணி பரபரப்புடன் உமாவின் இரு கைகளையும் எடுத்துத் தன் இரு உள்ளங் கைகளாலும் தேய்த்துக் கொண்டே, சிறுமி ராஜியை நோக்கி, "குழந்தே! நீ அந்தப் பக்கமா ஏறி உட்கார்ந்து மச்சரம்மாவின் பாதங்களைத் தேய்த்துக் கொண்டிரு!" என்று சொல்லிவிட்டுச் சுற்றிலுமுள்ள கூட்டத்தினரை நோக்கி, "யாராவது கார் ஓட்டக்கூடியவர்கள் இருக்கிறார்களா? சீக்கிரம் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டும்!" என்று கத்தினான்.

அதே சமயம்—

"ஜெனரல் ஆஸ்பத்திரி எதற்கு? நானிருக்கும்போது!" என்று குரல் கொடுத்தபடி ஒருவர் அந்தக் கூட்டத்தைப் பிளந்து கொண்டு முன்னால் பாய்ந்து வந்தார். (தொடரும்)

## போலீஸ் ஹெலிகாப்டர்

சென்னையில் கார்களின் எண்ணிக்கை அதிகமாக ஆக, போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவது பெரும் பிரச்னையாகி, மவுண்ட்ரோடை அகலப்படுத்தவும், அதனை ஆறு பகுதிகளாகப் பிரிக்கவும் சிவப்பு, பச்சை, ஆரஞ்சு நிற விளக்குகள் மாறிமாறி எரியவும் ஏற்பாடுகள் செய்ய நேரிட்டது. சென்னையிலேயே இத்தனை கஷ்டம் என்றால், மிகவும் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளின் பிரதான நகரங்களில் அதிகாரிகள் படும் அவஸ்தை எத்தகையதாக இருக்க வேண்டும்? மேற்கு ஜெர்மனியில் பிராங்பர்ட்—மாநீம் சாலையில் நாளொன்றுக்கு ஒரு பக்கமாக மட்டும் 30,000 மோட்டார் வண்டிகள் செல்கின்றன. உல்லாசப் பிரயாணிகள் அதிகமாக வரும் ஒருசில மாதங்களில் இந்த எண்ணிக்கை 55,000மாக உயரும்! இந்நிலையில் போலீஸார் ஹெலிகாப்டர்களில் ஏறிப் பறந்து சென்று சாலைகளில் எங்கேனும் போக்குவரத்து ஸ்தம்பித்து நிற்கிறதா என்று சதா கண்காணித்து வருகிறார்கள். உடனுக்குடன் ரேடியோக் கருவிகள் மூலம் அருகிலுள்ள போலீஸ் நிலையத்துக்குத் தகவல் தெரிவித்து நெருக்கடி நீங்க வழி செய்கிறார்கள். மோட்டார் விபத்து ஏற்பட்டால் உடனே முதலுதவி அளிக்கவும் காயமடைந்தவர்களைத் துரிதமாக மருத்துவமனைக்குக் கொண்டு சேர்க்கவும் போலீஸாருக்கு ஹெலிகாப்டர்கள் பயன்படுகின்றன.






# அம்மா ஆ ஆ ஆ ஆ ஆ

அவனுடைய வேதனையைப் போக்கி அவனைச் சிரிக்கச் செய்யுங்கள்; உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் கொடுப்பதன் மூலம். இப்பொழுது ஒரு நூற்றாண்டுக்கு மேலாகக் குழந்தைகள் (லட்சக்கணக்கில்) வாயு, வயிற்றுக் கோளாறு மற்றும் பல் முளைக்கும் போதுள்ள வேதனைகள் முதலியவைகளிலிருந்து நிவாரணம் அடைந்திருக்கின்றன. இத்தகைய நிவாரணத்தை உட்வர்ட்ஸ் மட்டுமே அளிக்கிறது. தலைமுறை தலைமுறையாகத் தாய்மார்கள் செய்தது தவறாகவே இருக்கமுடியாது!

## உட்வர்ட்ஸ்
## 'கிரைப் வாட்டர்'

**100 வருஷங்களுக்கு மேலாக உலகெங்கிலும் உபயோகிக்கப்படுகிறது.**



அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்டுகள்: ஹெர்பர்ட்ஸன்ஸ் லிட். பம்பாய், கல்கத்தா, & லக்னோ ● டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ. மதறாஸ், எம். ஜி. ஷஹானி & கோ. (டில்லி) பிரைவேட் லிட்., டில்லி.

*Aiyars AT. 357-TM. A*

1. சென்னை முதல் மந்திரி திரு பக்தவத்ஸலம் அவர்கள் முதல் அமைச்சர் பதவி ஏற்கப் புறப்படுமுன்னர் ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் தருமபுர ஆதீனப் பிரசாதம் கொடுத்துப் பொன்னாடை போர்த்தினர். 2. மலாயா பல்கலைக் கழக அரங்கில் இருபதாம் நூற்றாண்டின் சிறந்த எழுத்தாளரான பேராசிரியர் கல்கியின் நினைவுக் கருத்தரங்கம் ஒன்றை மலாயா பல்கலைக் கழக இந்தியப் பிரிவும், மலேயா தமிழ் எழுத்தாளர் சங்கமும் சிறப்பாக நடத்தின. 3. ராஜாஜி ஹாலில் ஐ. நா. சபை நன்னாள் கொண்டாடப்பட்டது. 4. பம்பாயில் பாரதீய வித்தியா பவன் புதிய கட்டடத்துக்குத் திரு எஸ்.கே. பாட்டீல் அஸ்திவாரக் கல் இட்டார். 5. சென்னை நீதிமன்றத்தில் சட்டக் கருத்தரங்கைச் சென்னை பிரதம நீதிபதி ஸ்ரீ ராமச்சந்திரய்யர் ஆரம்பித்து வைத்தார்.








# தோல்வி என்பது தெரியாது

**கி.ராஜேந்திரன்**



ஊர்ந்து செல்லும் மெல்லிய நீளமான கொடிய விஷப் பாம்பின் உடல் நெளிவுகளைப் போல் அமைந்திருந்த அபாயகரமான மலைப் பாதையில் இக்கித் திணறியபடி அந்தப் பழங்கால ராணுவ லாரி சென்று கொண்டிருந்தது. வளைவுகளில் அடிக்கடி கியர் மாற்றிச் செல்கிற தொல்லை போதாதென்று கியர்பாக்ஸ் சரியாக இல்லாததால் போட்ட இடத்தில் நிற்காதபடி கியர் அடிக்கடி நழுவி நியூட்ரலுக்கு வந்து டிரைவரின் பொறுமையை வெகுவாகச் சோதித்தது. "சை! சனியன்!" என்று வைது கொண்டே லாரியை ஓட்டிப் போனான் யஷ்வந்த். டிரைவருக்குப் பக்கத்தில் லெப்டினன்ட் ஜோகிந்தர் மடிப்புக் கலையாத சட்டையும், படிய வாரிய தலையுமாக அமர்ந்திருந்தான். உள்ளுக்குள்ளே சுமார் இருபது, இருபத்திரண்டு பேர்கள் அடைந்து கிடந்தார்கள். ஸ்வரூப் வழுக்கிக் கொண்டு செல்வது போல் தன் சட்டைப் பாக்கெட்டுக்குள் இரண்டு விரல்களை நுழைத்து ஒரு சிகரெட் துண்டை எடுத்தான். பாதி எரிந்திருந்ததால் கருகிச் சாம்பலாகியிருந்த பகுதியை முகத்தைச் சுளுக்கியபடி பார்த்தான். பிறகு நிக்கர் பையிலிருந்து புத்தம் புதிய அயல் நாட்டு பிளேட் ஒன்றினை எடுத்தான். உறையைப் பிரித்து விட்டுக் கரத்தின் ஒரு வீச்சிலே சிகரெட்டின் கருகிய பகுதியை வெட்டி விட்டு மீதியை உதடுகளுக்கிடையில் செருகிக் கொண்டான்.

மற்றவர்கள் அவன் செய்கையை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தன்னைக் கவனிப்பதை உணர்ந்த ஸ்வரூப், "என்ன பார்க்கிறீர்கள்?" என்று வாயிலிருந்த சிகரெட் துண்டைப் பற்ற வைத்தபடியே கேட்டான். "என் கரம் இத்தனை லாகவமாகச் செயல்படுகிறதே என்றா? ராணுவத்தில் சேர்வதற்கு முன்னால் புத்தம் புதிய பிளேடுகள்தான் என் வயிற்றை நிரப்பின. பிளேட் மாஸ்டர் என்று பட்டப் பெயர் கூட எனக்கு உண்டு!"



யாரும் பதில் பேசவில்லை. ஆனால் அனைவரது கண்களும் அவன் பேரிலேயே பதிந்திருந்தன. ஸ்வரூப் முதுகைக் கூனி நன்றாகச் சாய்ந்து, கால்களை எதிரே நீட்டிக் கொண்டான். சிகரெட்டை நீள ஒருமுறை இழுத்து விட்டு முன்புறம் அமர்ந்திருந்த லெப்டினன்ட் பக்கமாகச் சிகரெட் நுனியால் சுட்டிக் காட்டி விட்டுச் சொன்னான்:

"தாய்நாட்டின் மானம் காக்கத் தான் ஜெயிப்பதாக ஜோகிந்தர் அடிக்கடி சொல்லிக் கேட்டிருக்கிறோம். எனக்கு அதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது! ராணுவத்தில் நான் சேர்ந்ததற்கு முதல் காரணம், போலீஸார் கண்களில் படாதிருக்க; இரண்டாவது

காரணம் உணவுக்கும் உடைக்கும் கவலையில்லை. சிகரெட் செலவுகளுக்குச் சம்பளம் என்றும் ஏதோ தருகிறார்கள்! ரோகிந்தர் அடிக்கடி தனக்குத் தோல்வி என்றால் என்ன என்றே தெரியாது என்று கூறும்போதெல்லாம் எனக்குச் சிரிப்பாக வரும். ஏனென்றால்,



வாழ்க்கையில் தோல்வியைத் தவிர வேறு எதையும் கண்டறியாதவன் நான்.''

சிகரெட் புகையைக் கடைசி முறையாக இழுத்துத் துண்டை வெளியே எறிந்துவிட்டுக் கரங்களை நெஞ்சிலே சேர்த்துக் கட்டிக் கொண்டு தொடர்ந்து பேசினான் ஸ்வரூப். பழைய நினைவுகளில் ஈடுபட்டுத் தனக்குத் தானே அவன் கூறிக் கொள்வதுபோல் இருந்தது அப்போதைய அவன் தோற்றம்.

''என் பெற்றோர்கள் ஏழைகள். பணக்கார உறவினர் வீட்டில் தங்கிப் படிக்கச் சொன்னார்கள். நான் மாட்டேனென்றேன். பெற்றோருடனேயே வாழ விரும்பினேன். என் உணர்ச்சியை யாரும் மதிக்கவில்லை. அது முதல் தோல்வி. எனக்குப் படிப்பு வரவில்லை; பரீட்சைகளெல்லாம் தோல்விதான். பணக்கார உறவினர்கள் என்னைப் பணம் செலவழித்துப் படிக்க வைத்ததால் என்னை வேலைக்காரன் போல் நடத்தினார்கள். அவர்கள் எனக்காகச் செலவழிக்கும் தொகை நான் செய்யும் காரியங்களுக்கு நியாயமான ஈடாகாது என்று எனக்குப் பட்டது. ஆகவே, நானாகவே பணத்தை எடுத்துக் கொள்ள ஆரம்பித்தேன். யாருக்கும் தெரியாமல் சாமர்த்தியமாகச் செயல் புரிவதாக நினைத்து அம்முயற்சியிலும் தோல்வி அடைந்தேன். என் திருட்டுத்தனத்தைக் கண்டுபிடித்துச் சுலபமாக நிரூபித்தும் விட்டார்கள். வீட்டை விட்டுத் துரத்தி யடித்தார்கள்! எனக்கெனக் கூட்டாளிகள் சேர்ந்து என்னைப் பிளேட் மாஸ்டராக்கினார்கள். அதிலும் தோல்வி தான். கையும் களவுமாக என்னை ஒரு பஸ் கண்டக்டர் போலீஸ்காரரிடம் பிடித்துக் கொடுத்து விட்டான்! ஜெயிலிலிருந்து தப்பிக்க முயன்று தோல்வியே அடைந்தேன். பல வருஷங்களுக்குப் பிறகு விடுதலையும் கிடைத்தது. ஆனால் எங்கே ஒரு சின்னக் களவு நடந்தாலும் போலீசார் உடனே, 'ஸ்வரூப்பைப் பிடித்து வா!' என்றார்கள். அவர்களிடமிருந்து தப்ப நான் தாடியைக் கூட எடுத்து விட்டேன். திருட்டுப் புரட்டில் ஈடுபடும்போது மட்டும் போலீஸாரை ஏமாற்றப் பொய்த் தாடி வைத்துக் கொள்வேன். இப்படி வேஷம் போடுகிற கலையிலும் எனக்குத் தோல்வியே கிட்டியது. சி. ஐ. டிக்காரர்கள் என் தந்திரத்தைத் தெரிந்து கொண்டு விட்டார்கள். கடைசியில் வேறு வழியின்றி ராணுவத்தில் சேர்ந்து விட்டேன். இமயமலைத் தொடரின் காமேங் பகுதியில் எந்தப் போலீஸ்காரன் என்னைத் தேடப் போகிறான்?'' ஸ்வரூப் சிரித்துக் கொண்டே தன்னைச் சுற்றியுமிருந்தோரைப் பார்த்தான். சிலர் புன்னகை புரிந்தார்கள்; சிலர் போனால் போகட்டும் என்பது போல் சிரித்து வைத்தார்கள். வேறு சிலர் மௌனத்தின் மூலம் தங்கள் வெறுப்பைக் காட்டிக் கொள்ளத் தயங்கவில்லை.

''என்ன சங்கதி?'' என்று துடையைத் தட்டியவாறு நிமிர்ந்து உட்கார்ந்து கேட்டான் ஸ்வரூப். ''அதிர்ஷ்டம் கெட்டவனுடன் வந்து சேர்ந்திருக்கிறோமே என்று கவலைப்படாதீர்கள்! வாழ்க்கையில்தான் எனக்குத் தோல்வி. போர்முனையில் வெற்றிக்கு மேல் வெற்றிதான்!''

இதைக் கேட்டதும் எல்லாருமே ஏதோ புதுத் தெம்பு பெற்றது போல் அசைந்து கொடுத்து நெஞ்சு புடைக்கப் பெருமூச்சு விட்டார்கள். லாரியில் மீண்டும் கலகலப்பு நிலவியது....



லாரி நின்றது. லெப்டினன்ட் ஜோகிந்தர் கீழே இறங்கிப் பின்புறம் வந்தான். ''நிலச் சரிவு ஏற்பட்டிருக்கிறது. பாதைக்கு அருகே பாறைகளும் மண்ணுமாக விழுந்து கிடக்கின்றன. ஆனால் உங்களுக்குத் தெரியும், நான் தோல்வி என்பதை ஒப்புக் கொள்ளாதவனென்று. இங்கிருந்து ஒரு மைல் தொலைவில் ஒரு கிராமம் இருப்பதாக இந்த 'மேப்' சொல்கிறது. ஸ்வரூப் அங்கே ஓடிப் போய் ஒரு தாம்புக் கயிறு வாங்கி வருவான். அதை லாரியைச் சுற்றிக் கட்டி இழுப்போம். நமக்கு அதிக நேரம் இல்லை. இரவு எட்டு மணிக்குள்ளாக நாம் முகாம் 'டி.கே. நாலி'ல் இருந்தாக வேண்டும்......''

நீளமான தாம்புக் கயிறுகள் பலவற்றை ஒன்றோடொன்று பிணைத்து லாரியைச் சுற்றிலும் ஓடவிட்டு இறுகக் கட்டி மண் மேட்டிலிருந்தபடி சிப்பாய்கள் இழுத்தார்கள். பக்கவாட்டிலும் லாரியின் பின்னாலும் நின்று வேறு பலர் தள்ளினார்கள். டிரைவர் தன் ஆசனத்தில் அமர்ந்து முதல் கியரைப் போட்டு மோட்டாரைக் கிளப்பி ஓட்டினான். அங்குலம் அங்குலமாக லாரி மேலே ஏறியது. மண்ணில் சக்கரங்கள் புதைந்து விடாமல் ராணுவ வீரர்கள் கயிறு கட்டி இழுத்தது உதவியது. 'ஹீவ் ஹீவ்' என்று அவர்கள் ஒரே குரலாகக் கத்தினார்கள். பத்து சிங்கங்களின் கர்ஜனை ஒலியுடன் போட்டி போடுகிற மாதிரியாக மோட்டார் உறுமியது. இந்தச் சத்தத்துக்கிடையிலும் ஸ்வரூப்புக்கு மட்டும் இன்னும் ஓர் ஓசை செவிக்கு எட்டியது. ''நிலச் சரிவு, நிலச் சரிவு! ஓடுங்கள்!'' என்று கத்திக் கொண்டே சாலை ஓரத்தில் செங்குத்தாக நின்ற மலையடிவாரத்தில் போய் ஒண்டிக் கொண்டான். அவன் கூச்சலைக் கேட்டு மற்றவர்களும் லாரியை அப்படியே விட்டுவிட்டுத் 'திபுதிபு' வென்று ஓடி வந்து ஒதுங்கினார்கள். அடுத்த கணம் இடி முழக்கம்போன்ற பேரிரைச்சலுடன் அவர்கள் முன்னே சிறியதும் பெரியதுமான பாறைகளும் கல்லும் மண்ணும் கலந்து வந்து அருவி போல் விழுந்தன. பூமியே அதிர்வது போலிருந்தது. அவர்கள் பாறைச் சுவருடன் இன்னும் நன்றாக ஒட்டிக் கொண்டார்கள். ஒரு பெரிய பாறை லாரியைத் தாக்கிக் கண்ணாடிகளைத் தூள் தூளாக்கியது. ''பல்வந்த்!'' என்று அலறிக் கொண்டே முன்னுக்கு ஓட யத்தனித்த ஜோகிந்தரை ஸ்வரூப் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். பல்வந்தினுடைய முகத்தில் அதிர்ச்சியையும் பீதியையும் அவர்களால் காண முடிந்தது. அந்த அதிர்ச்சியில் [illegible] அவன் கவனிக்கவில்லை போலும். அப்படிக் கவனித்திருந்தாலும் பீதியில் அவன் கரங்கள் செயல்பட வில்லை போலும்! மேலும் மேலும் பாறைகள் வந்து விழுந்து லாரியைத் தாக்கின. லாரி பின்னோக்கி வேகமாய் இறக்கத்தில் நகர்ந்தது. அபாயமான பள்ளத்தாக்கில் அது விழுவதற்கு முன்னால் கதவு திறந்துகொள்ள பல்வந்த் வெளியே தூக்கி எறியப்படுவதை அவர்கள் பார்த்தார்கள். அடுத்த கணம் மனித உடலும் லாரியும் பாதாள யாத்திரையைத் தொடங்கி விட்டன.

நிலச்சரிவு இன்னும் மூன்று நான்கு நிமிஷங்களுக்கு நீடித்தது. அதன் பிறகு படிப் படியாகக் குறைந்தது. சிறு சிறு பாறைகளும் கூழாங் கற்களும் விழுந்தன. பிறகு அதுவும் நின்றது. புழுதி சிறிது சிறிதாக அடங்கியது.

பேசும் திறனைத் திரும்பப் பெற்றதும், ''நிலச் சரிவு நிகழப் போவதை அத்தனை கணக்காக எப்படிச் சொன்னாய்?'' என்று ஒரு சிப்பாய் ஸ்வரூப்பைக் கேட்டான்.

''எந்த நிமிஷத்திலும் போலீஸாரிடம் சிக்க நேரிடும் என்பதால் சதா அபாயத்தை எதிர் பார்த்தபடியே எச்சரிக்கையாக இருப்பது எனக்கு வழக்கமாகி விட்டது'' என்றான் ஸ்வரூப்.

சிலர் சிரித்தார்கள்.

''ஸ்வரூப்! எப்போது பார்த்தாலும் உன் திருட்டுத் தொழிலையும் அதில் நீ அடைந்த தோல்விகளையும் பற்றிச் சொல்லிக் கேட்டு எனக்கு அலுத்து விட்டது; வெட்கமாயில்லை, உனக்கு?'' என்றான் ஜோகிந்தர்.

''லெப்டினன்ட் அழைத்துப் போன வெற்றிப்பாதை கடக்க முடியாதபடி மண் மேடிட்டுப் போய் ஒருவன் உயிரைப் பலி வாங்கியது; வாழ்க்கையில் நான் அடைந்த தோல்விகள் இருபது உயிர்களைக் காப்பாற்ற இன்று எனக்கு உதவின. இதில் வெட்கப்பட என்ன இருக்கிறது?''

''உயிரைப் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்ள நாம் இங்கு வரவில்லை. அதைக் கொடுத்துச் சுதந்திரத்தை விலை பேச வந்திருக்கிறோம்.''

ஸ்வரூப் சாலையின் எல்லைக்குப் போனான். கீழே வெகு தொலைவில் பல்வந்தின் உடல் பார்வைக்குச் சிறுத்துத் தெரிந்தது. ''அதோ தான் விரும்பாமலே பிராணத்தியாகம் செய்த பல்வந்த் விழுந்து கிடக்கிறான். இனி, அவனுக்குப் பதக்கம்கூடக் கொடுத்துக் கௌரவிப்பார்கள்!''

ஜோகிந்தரின் கண்களில் நீர் நிறைந்து விட்டது.

சீனப் பிடாரிகளிடமிருந்து தங்களைக் காப்பாற்ற வந்திருக்கும் துருப்பினருக்குக் கிராமிய மக்கள் பலமான வரவேற்பு கொடுத்தார்கள். குளிருக்கு அடக்கமாகத் தீ மூட்டி விட்டுத் தங்களிடமிருந்த சொற்ப உணவைச் சிப்பாய்களுடன் பகிர்ந்து கொண்டார்கள். பின்னர் அந்த மலைஜாதியினர் ஆண்களும் பெண்களும் ஜோடி சேர்ந்து கோஷ்டியாக நடனமாடி வீரர்களை மகிழ்வித்தனர். அவர்களுடைய முரட்டுத்தனமான நாட்டியமும் வாத்திய இசையும் ஸ்வரூப்புக்குப் பிடித்திருந்ததாகக் கூற முடியாது. எனினும் அந்த மலைஜாதியினரைத் திருப்திப்படுத்தத் தானும் அவர்களுடன் சேர்ந்து வேடிக்கையாகக் குதித்தான். உடனே அந்த ஆதிவாசிகளுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. வேறு சில சிப்பாய்களும் இந்தக் கோலாகலத்தில் கலந்து கொண்டார்கள்.

இப்பொழுது
நடைபெறுகிறது

மேகலாவின்

# காஞ்சித்தலைவன்

கதை - வசனம்: மு.கருணாநிதி M.L.A.,

டைரக்ஷன்: A.காசிலிங்கம்

இசை: K.V.மகாதேவன் • ஒளிப்பதிவு: G. துரை • ஒலிப்பதிவு: T.S.ரங்கசாமி • ஸ்டூடியோ: மெஜஸ்டிக்

... சென்னை ...

சித்ரா • பிராட்வே
புவனேஸ்வரி
மற்றும் தென்னாடெங்கும்.

WORLD RIGHTS CONTROLLED BY: SITTANANDA FILMS, PONDICHERRY.

இந்த ஆட்டம் எதுவும் ஜோகிந்தருக்கு ரசிக்கவில்லை. அவன் எதிரே பழைய நினைவுகள் நிழலாடிக்கொண்டிருந்தன. சிறுவனாக இருந்து பள்ளியில் சேர்ந்த நாளாக எடுத்த காரியம் யாவிலும் வெற்றி பெற்றே வந்திருக்கிறான் அவன். எத்தனை பெரிய உத்தியோகமானாலும் எனக்கு வேண்டாம், ராணுவ சேவையே எனக்குப் பிடித்திருக்கிறது என்று பிடிவாதமாகச் சொல்லித் தாய், மனைவி, மாமனார் அனைவரையும் தர்க்கம் புரிந்து தன் வழிக்குக் கொணர்வதிலும் அவனுக்கு வெற்றியே கிட்டியிருக்கிறது. சீனப் படையெடுப்பு பற்றி அறிந்ததும் அவன் உடல் சிலிர்க்க, போர் முனைக்குச் செல்லத் துடித்திருக்கிறான். அந்த வாய்ப்பும் கிட்டியிருக்கிறது இப்போது.

வைக்கோல் திணிக்கப்பட்டு அமைந்த பொம்மையைத் துப்பாக்கிமுனையிலுள்ள கட்டியால் குத்துவதும் மரப் பலகையாலான மனிதர்களைக் குறி பார்த்துச் சுடுவதும் அபாய மற்ற, புகை மட்டும் எழுப்புகிற குண்டுகளை வீசிச் சண்டை பிடிவதும் கலபமாக இருந்தன; சரியாகவும் நடந்தன. ஆனால் இங்கோ, ஒட்டை லாரியில் மலைப்பாதையுடன் போராடி வெற்றி பெற வேண்டும்; நிலச் சரிவுகளைச் சமாளிக்க வேண்டும்; தேர் வடம் பிடித்து இழுப்பது போல் லாரியை இழுக்க வேண்டும்; வாய்த் துடுக்குப் பேர்வழிகளை வாதத்தில் வெல்ல வேண்டும்; இன்னும் என்ன என்னவோ இடைஞ்சல்கள்; அனைத்திலும் தோல்விக்கு மேல் தோல்வி! எதில் வேண்டுமானாலும் தோல்வியுறலாம், பரவாயில்லை; ஆனால் ஸ்வரூப்பிடம் தோல்வியுறக் கூடாது. அதை விட அவமானம் வேறில்லை. நண்பன் ஒருவனைப் பள்ளத்தாக்குக்குப் பலிகொடுத்து விட்டு எப்படிச் சிரித்துக் கும்மாளம் போடுகிறான்? சீ! அவனுக்கு வெட்கமாயில்லை!

''ஸ்வரூப்! ஸ்வரூப்!'' அவன் போட்ட சத்தத்தில் இசை, நாட்டியம் எல்லாம் திகைத்து நின்றன.

லெப்டினன்டை நோக்கி ஸ்வரூப் முன்னேறி வந்தான். ''உன் கோமாளித்தனத்தை யெல்லாம் நிறுத்துகிறாயா? பாரத ராணுவத்துக்கே நீ இழுக்குத் தேடித் தந்துவிடுவாய்!''

''லெப்டினன்ட்! இந்தக் கிராமிய மக்கள் நமக்குப் பேருபகாரம் செய்திருக்கிறார்கள். அவர்களை மகிழ்விப்பதில் தவறு என்ன?''

''ஸ்வரூப்! நான் உத்தரவு போடுகிறேன். கூத்து நிற்க வேண்டும்; நீ காவல் இருக்க வேண்டும். மற்றவர்கள் உடனே படுக்க வேண்டும்; காலை ஐந்து மணிக்கு வழக்கம் போல் 'டிரில்' நடக்கும்!''

''அப்படியே ஆகட்டும், லெப்டினன்ட்! ஆனால் நீங்களாகவே சிருஷ்டித்துக் கொண்ட ஒரு வறட்டுக் கௌரவம் காரணமாக உங்களால் எங்களைப் போல் ஆனந்தமாய் ஆடிப் பாட முடியவில்லை. அதனால் உங்களுக்கு எங்கள் மீது பொறாமை! அதைக் காட்டிக் கொள்ளாது பழி வாங்குகிறீர்கள்!''

''நீ ரொம்பவும் எதிர்த்துப் பேசுகிறாய், உன் நடத்தை பற்றி நான் 'ரிப்போர்ட்' செய்ய நேரிடும்.''

''செய்யுங்கள்; கூடவே நிலச் சரிவு ஏற்பட்டிருக்கையில் தலைமைக் காரியாலயத்



பக்கத்து வீட்டுக்காரி: ராமு! உங்க வீட்டிலே குஞ்சுப் பாப்பா பிறந்திருக்காமே!

ராமு: குஞ்சுப் பாப்பாவாம், குஞ்சுப் பாப்பா! என்ன அழுகை அழறது, ஐம்பது வருஷமா கத்துக் கொண்டு வந்தது போல! அதைப் போய்க் குஞ்சுப் பாப்பாங்கிறேளே!

துடன் ரேடியோ டெலிபோன் மூலம் தொடர்பு கொள்ளாமல் 'தோல்வி என்பது தெரியாது' என்ற வறட்டு ஜம்பத்துக்காக அதைக் கடக்க முற்பட்டது ஏன் என்பதையும் ரிப்போர்ட்டில் குறிப்பிடுங்கள். பள்ளத்தாக்கில் லாரி கவிழ்ந்ததும் அத்துடன் கூடவே சிப்பாய்களின் துப்பாக்கி, ஆடை, உணவு, ரேடியோக் கருவி போன்ற சகல உபகரணங்களும் பறி போனதன் காரணத்தையும் தெரியப்படுத்துங்கள்!''

ஜோகிந்தருக்கு உடலெல்லாம் பதறியது. அவனை அடித்துவிட நினைத்த கரத்தை மற்றொரு கரத்தால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு திரும்பி நடந்தான்.

'தான் திருடன்; ஊத் தொழிலில் ஈடுபட்டவன்' என்கிற தாழ்வு மனப்பான்மை ஸ்வரூப்பை ஆட்கொண்டு ஆட்டிப் படைக்கிறதென்றும், தான் தாழ்ந்தவன் அல்ல என்பதைத் தனக்குத் தானே நிரூபித்துக் கொள்கிற வியர்த்தமான முயற்சியில் அவன் தேவைக்கு அதிகமாகவே எதிர்த்துப் பேசுகிறான் என்றும் ஜோகிந்தருக்குத் தெரிந்தது. எனினும், இதனைக் கட்டிக்காட்ட முடியாத அளவுக்கு ஸ்வரூப்பின் வாதங்கள் தவறே இல்லாதவாறு கச்சிதமாய் அமைந்திருந்தன.

செய்தி கொண்டு போனவர்கள் லாரியுடனும் உத்தரவுடனும் தேவையான உபகரணங்களுடனும் திரும்பி வந்தார்கள். தாமதம் பற்றிய விசாரணை பின்னால் நடக்கும் என்றும் இப்போது உடனே போர்முனைக்குப் போக வேண்டும் என்றும் உத்தரவில் கண்டிருந்தது. சீனப் படைகளை அவர்கள் பத்து மைல் தொலைவில் சந்திக்கவும் செய்தார்கள். அதற்கு இரண்டு மைல்களுக்கு இப்பாலேயே அவர்களை இறக்கி விட்டு விட்டு லாரி திரும்பியும் விட்டது. வேறு அலுவல்களைக் கவனிக்க, ஒற்றையடிப் பாதையில் செங்குத்தான ஒரு குன்றினை ஏறிக் கடந்தார்கள்.

திடுமென ஒரு பாறையின் மறைவிலிருந்து டாங்கி வெளிப்பட்டது. அதிலிருந்து மிஷின்

கன்கள் அவனுடன் குண்டுகளையும் கக்கின. ஜோகிந்தருடன் இருந்தவர்கள் கண் மூடித் திறக்கும் நேரத்தில் சடசடவென்று ஒருவர் பின் ஒருவராய்ச் சரிந்தார்கள். ஒன்றன்பின் ஒன்றாய்ச் சீட்டுக்களைச் செங்குத்தாக நிறுத்தி வைத்து விட்டுக் கடைசிச் சீட்டைத் தட்டி விட்டு அனைத்தையும் சரியச் செய்கிற விளையாட்டா இது? சுற்றிலும் பிணங்களைப் பார்த்ததும் ஜோகிந்தருக்கு வயிற்றைக் குமட்டியது.

''கோழை! கோழை!'' என்று பரிகசித்தான் ஸ்வரூப். ஜோகிந்தர் இருந்த பக்கமாய்க் காரி உமிழ்ந்தான்.

அனைவரையும் தீர்த்துக் கட்டி விட்டதாகச் சீனர்கள் எண்ணினார்களோ என்னவோ? டாங்கு சுடுவதை நிறுத்தி விட்டது. தன் ஒளிவிடத்துக்குப் பின் நோக்கியே சென்று மறைந்தது. அடுத்து வரப் போகும் படை வீரர்களை அவர்கள் எதிர்பாராத தருணத்தில் திடுமெனத் தாக்க மீண்டும் காத்திருக்கத் தொடங்கியது.

அவர்கள் கையாண்ட தந்திரத்தை ஜோகிந்தர் புரிந்து கொண்டான். மெல்ல எழுந்தான். ''ஸ்வரூப்! நாம் நான்கு பேர் பாக்கி இருப்பது அவர்களுக்குத் தெரியாது. நான் டாங்கியை நோக்கி ஓடப் போகிறேன். நீ இங்கிருந்தபடியே எனக்கு உதவ வேண்டும்'' என்று கூறி விட்டுப் பதிலுக்குக் காத்திராமல் பாய்ந்தோடினான்.

மரங்கள் அடர்ந்த கானகத்தின் ஒரு பக்கத்திலிருந்து ஜோகிந்தரை நோக்கிக் குண்டுகள் பறந்தன. சட்டென்று ஸ்வரூப் குண்டுகள் கிளம்பி வந்த திசையை நோக்கிச் சுட்டான். யாரோ மரண ஓலம் எழுப்புவது கேட்டது. அங்கு ஒளிந்திருந்த சீனர்கள் எத்தனை பேரோ தெரியாது! ஜோகிந்தரைத் தாக்குவதை விடுத்து அவர்கள் இப்போது ஸ்வரூப் மீது குண்டு மழை பொழிந்தார்கள். ஸ்வரூப்புக்குத் துணையாக, உயிர் தப்பிப் பிழைத்த வேறு இரு பாரதச் சிப்பாய்களும் சேர்ந்து கொண்டார்கள். கணப் பொழுது மரங்களின் மறைவிலிருந்து சீனத் தலைகள் வெளிப்பட்டால் போதும். உடனே ஸ்வரூப்பும் அவன் தோழர்களும் சுட்டார்கள்.

ஸ்வரூப் தனது வலது தோள் துளைக்கப்படுவதை உணர்ந்தான். நெருப்பாய் அங்கு தகித்தது. பழுக்கக் காய்ச்சிய இரும்பினால் உடலில் கீழிருந்து மேலாகக் கோடு போட்டது போல் அந்த வேதனை பரவி மூளையை எட்டியது. அவன் கண்கள் இருண்டன. முழங்கால் மடங்கியது. அவன் சுருண்டு விழுந்தான்.

மீண்டும் அவன் கண் விழித்தபோது தன்னை ஒரு ஸ்ட்ரெச்சரில் போட்டு முன்னும் பின்னுமாய் இரண்டு பேர்கள் தூக்கிப் போவதைப் பார்த்தான். காட்டு மரத்திலிருந்து வெட்டப்பட்ட இரண்டு கழிகளுக்கிடையில் ஒருவனது மேல் சட்டையைச் சுற்றிக் கட்டி ஸ்ட்ரெச்சர் தயாரித்திருந்தார்கள். அவர்கள் ஒவ்வொரு அடியெடுத்து வைக்கும் போதும் ஸ்வரூப்பின் வலது தோள் விண் விண்ணென்று தெறித்தது.

''எதற்கு இவனைத் தூக்கிப் போக வேண்டும்? எப்படியானாலும் இவன் சாகத்தான் போகிறான். தூக்கிப் போய்ப் பயனென்ன?''

''எனக்கும் அதுதான் புரியவில்லை. எதற்கு இந்த ரெட்கிராஸ் வேலை நமக்கு?''

''இருதய பாகத்தில்தான் அடி! அது இனி மேல் எதற்கும் பயன்படாது!''

''சீனர்கள் எதிர்ப்பட்டால் இவனைக் கீழே இறக்கி விட்டுத் துப்பாக்கியை எடுக்கக் கூடச் சந்தர்ப்பம் கிடைக்காது; அதற்குள் நாம் எமலோக யாத்திரையைத் தொடங்கி விடுவோம். செத்துக் கொண்டிருக்கும் இவனுக்காக நாமும் சாகத்தான் போகிறோம்!''

தான் மயங்கிக் கிடப்பதாக எண்ணிக் கொண்டு தன்னைத் தூக்கிச் செல்வோர் மெலிய குரலில் மனம் விட்டுப் பேசுவதை ஸ்வரூப் கேட்டான். அவர்கள் கூறுவதில் உள்ள தர்க்க ரீதியான நியாயமும் அவன் மூளைக்கு எட்டியது.

குற்றுயிரும் கொலையுயிருமாகத் தன்னை விட்டு விட்டுப் போய் விடுவார்களோ? உடலை அசைக்கக் கூட முடியாத நிலையில் உயிரும் சீக்கிரத்தில் பிரியாவிட்டால்? சிறுகச் சிறுகத் தான் சாகையில் எறும்புகள் தன் உடல் மீது ஊர்ந்தால்.....? பீதி படர்ந்தது அவன் நெஞ்சில்; உடல் வேதனையைக் காட்டிலும் பயங்கரமான கற்பனைகளே அவனை அதிகமான சித்திரவதைக் குள்ளாக்கின.

''லெப்டினண்ட்!'' தன்னிடத்தில் எஞ்சியிருந்த பலத்தை யெல்லாம் ஒன்று திரட்டி உரக்கக் கத்தினான் ஸ்வரூப்.

சற்றுத் தூரத்தில் போய்க் கொண்டிருந்த ஜோகிந்தர் நின்று திரும்பினான். ''என்ன ஸ்வரூப்! நினைவு வந்து விட்டதா உனக்கு? அந்த டாங்கு சீனர்களுக்கு இனிப் பயன் படாது! அத்துடன் வந்திருந்த படையினரையும் ஒழித்துக் கட்டி விட்டோம்!'' என்று சந்தோஷத்துடன் கூறினான் ஜோகிந்தர்.

''லெப்டினண்ட்! எனக்குப் பயமாயிருக்கிறது'' என்றான் ஸ்வரூப். 'கோழை' என்று ஜோகிந்தரைப் பரிகசித்தது அவனுக்கு நினைவு வந்தது. அவன் கண்களில் நீர் நிறைந்து காதோரமாக வழிந்தது. ''என்னை விட்டு விட்டுப் போய்விட மாட்டீர்களே?'' என்று கெஞ்சும் குரலில் கேட்டான்.

''ஒரு நாளும் மாட்டேன்; இங்கேயிருந்து இரண்டு மூன்று மைல் தொலைவில் ஹெலிகாப்டர் தளம் இருப்பதாக ஞாபகம். ஒரு ஹெலிகாப்டரில் உன்னை ஏற்றி மருத்துவ மனைக்கு அனுப்பி விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பேன்; பயப்படாதே! இந்தக் காட்டு வழி மட்டும் பிசகாமல் இருக்க வேண்டும்!''

''லெப்டினண்ட்! தோல்வி என்பது உங்களுக்குத் தெரியாதல்லவா? சீனர்களின் டாங்குப் படையை வெற்றி கண்டது போல், இந்தக் கானகத்தில் வழி கண்டுபிடிப்பதிலும்.......''

''எனக்கு நிச்சயம் வெற்றிதான். கவலைப் படாதே!'' என்றான் ஜோகிந்தர். இருவரும் ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொண்டதன் அடையாளமாகப் புன்னகை புரிந்தார்கள்.

# அறிவுக் கனலே,

இருளிலிருந்து ஒளிக்கும், ஐயத்திலிருந்து ஆனந்தத்துக்கும், அயர்விலிருந்து அமைதிக்கும் நரேந்திரரை மெல்ல மெல்ல இட்டுச் சென்று கொண்டிருந்தார் பரமஹம்ஸர்.

அந்த இருள் நரேந்திரரை எப்படிக் கப்பிக் கொண்டிருந்தது, ஐயம் அவரை எப்படித் துளைத்துத் துன்புறுத்தியது, அயர்வு அவரை எவ்வாறு அல்லலுறச் செய்தது என்பதெல்லாம் அவருக்கு மட்டுமேதான் தெரியும். அதே போல, பரமஹம்ஸர் அவற்றை எப்படி நீக்கினார் என்பதும் அவருக்குத்தான் தெரியும்; அல்லது அவருக்குமே தெரியாமல் பரமஹம்ஸருக்கு மட்டும்தான் தெரியுமோ என்னவோ? வைத்தியரிடம் சிகிச்சை செய்து கொள்ளும் நோயாளிக்கு அந்தச் சிகிச்சை முறை தெரிய வேண்டிய அவசியமில்லையே!

ராமகிருஷ்ணர் நரேந்திரரைப் பாரத தர்மமாகிய வேதாந்தத்துக்கு வென்று அழைத்துச் சென்றது மேல் நாட்டு அறிவாராய்ச்சிகளை இந்தியாவின் அநுபவம் வென்ற அற்புத காவியமாகும். தான் இன்னார் என்பதை அறிய வேண்டும், தன்னையும், தன் போன்ற இன்னும் பல ஜீவர்களையும் வேறு பல பொருட்களையும் கொண்ட இந்தப் பிரபஞ்சத்தின் மூலகாரணம் இன்னதென்று அறிய வேண்டும் என்பதில் நரேந்திரர் குமைந்த குமைச்சல் நம் எல்லோருக்காகவும் அவர் ஒருவர் பட்ட இன்னலாகும் — மக்கள் குலத்தின் பாபச் சுமையை இயேசுநாதர் ஏற்று அநுபவித்ததாகக் கிறிஸ்துவ சமயத்தில் கூறுவது போல. பகுத்தறிவு மனோபாவம் காரணமாக இன்று நாம் ஐயப்படும் நூறாயிரம் விஷயங்களைப் பற்றி நம்மைவிட மிகவும் தீவிரமாக ஐயம் கொண்டு, அந்த ஐயத்திலேயே வெந்து கொண்டிருந்தவர் நரேந்திரர். அப்படிப்பட்ட ஒருவர் மூலம்தானே இக்காலத்துக்கு உள்ளுணர்ச்சியின் உண்மை நிதரிசனமாகும்? ஆரம்பத்திலேயே நரேந்திரர் பரமஹம்ஸரை வந்தடையாமல், மேல்நாட்டின் நானாவிதமான தத்துவ சாஸ்திரங்களைப் படித்து விட்டு அவற்றில் சாந்தி காணாமல் பின்பே தட்சிணேசுவரத்துத் தபஸ்வியை வந்தடைந்து அமைதி பெற்றது நம் எல்லோருடைய கண்களையும் திறந்து விடுவதற்குத்தான். ஆசார அநுஷ்டானம் உள்ள ஒரு குடும்பத்தில் நரேந்திரர் பிறந்து, அறிவைவிட நம்பிக்கையைப் பெரிதாக மதித்து, பரமஹம்ஸரை ஆச்ரயித்து ஞானம் பெற்றிருந்தால், அதனால் மேனாட்டு அறிவாராய்ச்சியின் வழியே செல்பவர்களுக்கு ஹிந்து தர்மத்தில் ஈடுபாடு ஏற்பட முடியாது. இதேபோல், நவீன விஞ்ஞானக் கல்வியால் மதம் பிடித்த மக்கள் பிரம்மாநுபவத்துக்குக் கல்வியும் கேள்வியும் அவசியம் இல்லை என்பதை உணர வேண்டுமென்றே மெத்த கற்ற நரேந்திரர் தம்மை வாட்டி வதக்கிய வினாவின் விடையைக் கல்லாதவரான பரமஹம்ஸரிடமிருந்து கற்றுத் தெளிந்தார் போலும்!



விவேகாநந்தருக்குப் பரிசயமில்லாத மேல்நாட்டுத் தத்துவ மார்க்கங்கள் இல்லை. பிளாட்டோ, அரிஸ்டாடிலில் தொடங்கி ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் வரையில் அவர் படிக்காத தத்துவ சாஸ்திரி கிடையாது.



# அருட்புனலே!

ரா. கணபதி

40

நானாவிதமான அந்த ஆராய்ச்சிகள் — ஒன்றுக்கொன்று முரண்பட்ட அந்த ஆராய்ச்சிகள் — அறிவைக் குழப்பின. இப்படிக் குழம்பிய நரேந்திரர் பரமஹம்ஸரிடம் தெளிவு பெற்றார் என்பது உலகறிந்த விஷயம் எனினும், எப்படித் தெளிவு பெற்றார் என்று யாரும் விண்டு கூறி விளங்கி வைக்க முடியாது. ஒன்று மட்டும் அநுமானிக்கலாம். மேல்நாட்டுத் தத்துவ ஆராய்ச்சியாளர்கள் அறநெறி, அன்பு, அழகு, அறிவு, உணர்வு இவை யாவும் இணைந்த ஆத்மிக வாழ்முறையை வகுக்கவில்லை. அது பாரதத்தில்தான் இயல்பாக வந்திருக்கிறது.

அறம், அன்பு, அழகு, அறிவு, இந்திரிய உணர்வு எல்லாவற்றுக்கும் மேலாக ஆத்மாவின் அநுபவம் என்பதாக ஒன்று உண்டு. பரம் பொருளை அநுபவிக்க வேண்டும் என்று துடித்தவர்கள் பாரத ரிஷிகள்தான். பரம்பொருளை அநுபவிக்க முடியும் என்று கருதி, அநுபவிக்க வேண்டும் என்று வேட்கை கொண்டு, அநுபவித்துக்காட்டியவர்கள் பாரத ரிஷிகள்தாம். பரம்பொருளை அறிய வேண்டும் என்றே மேல்நாட்டுத் தத்துவ ஆராய்ச்சியாளர்கள் எண்ணினார்கள். ஆனால் பரம்பொருள் அறிவுக்கு அப்பாற்பட்டது அல்லவா?

இந்த உலகின் மூலகாரணம் என்ன என்பதை ஏதோ புத்தகத்தில் விஷயம் இருப்பது போல் நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்றுதான் மேல்நாட்டுத் தத்துவ சாஸ்திரிகள் முயன்றார்கள்; உடலில் உயிர் இருப்பது போல் அதைத் தன் மயமாக்கிக் கொள்ள அவர்கள் முயலவில்லை. பரம்பொருளை அறிவதற்கு சாதகன் என்ன செய்ய வேண்டும் என்பதாக சாதனா மார்க்கத்தை அவர்கள் யாரும் வகுத்துக் கொடுக்கவில்லை. வாதப் பிரதிவாதத்தின் வழியே மூலப் பொருளைப் பற்றிய உண்மையை நிச்சயிக்க அவர்கள் முயன்றார்கள். ஜீவர்களுக்கு இருப்பதாகக் காணும் அறிவுக்கு] மூல காரணம் பரம்பொருள். எனவே, இந்த அறிவால் எப்படித் தன்னைப் படைத்த பேரறிவை அளக்க முடியும்? இதனால் தான் பரம்பொருளைப் பற்றி ஹெர்பர்ட் ஸ்பென்ஸரும் மற்றும் பலரும் அறியவொண்ணாதது என்ற முடிவுக்கு வந்





"தம்பி! உனக்கு இரண்டணா தருகிறேன் நிசமா சொல்லு உன் அப்பா வீட்டிலே இல்லையா ?"

"மன்னிச்சுக்குங்க மாமா, நான் எங்கப்பாவுக்கு நம்பிக்கைத் துரோகம் பண்ணமாட்டேன்; அதுவும் ஆறணா நஷ்டத்துக்கு !"

தனர். ஆனால் அது அநுபவிக்க வொண்ணாதது அல்ல. இதை மேநாட்டுத் தத்துவ சாஸ்திரிகள் காணவில்லை. ஏனெனில், பரம்பொருளை **அநுபவிக்க** வேண்டும் என்ற எண்ணமே அவர்களுக்கு எழவில்லை; **அறிய** முயன்றார்கள் — தோற்றுப் போனார்கள். அவர்களால் நரேந்திரரை எப்படிக் கடவுளின் காட்சிக்கு இட்டுச் செல்ல முடியும்?

ஆனாலும் ஆரம்ப காலத்தில் அவர்களைத்தான் நம்பினார் நரேந்திரர்.

கடல் மீது பறக்கும் பட்சி ஒவ்வொரு பேரலையையும் ஸ்திரமானதாக எண்ணி அதில் அமரச் சென்று, ஏமாறிப் போய் இறகு வலிக்கத் தங்குமிடத்தைத் தேடிப் பறந்து செல்வது போல், ஆராய்ச்சி நூல்கள் நிரம்பிய வாத சமுத்திரத்தில் எங்கும் தங்கி அமைதி காண முடியாமல் தத்தளித்தார் நரேந்திரர். டேவிட் ஹ்யூமின் அவநம்பிக்கைச் சித்தாந்தத்தைப் படித்துக் கடவுள் என்று ஒன்று அல்லது ஒருவர் உண்டா என்றே அவர் கலங்கிய காலமும் உண்டு.

இப்படிக் கலங்கிய காலத்திலெல்லாம் கவிதையும், கானமுமே அவருடைய உள்ளப் புண்ணை ஒரு சிறிது ஆற்றி வந்தது. ஷெல்லியின் அழகுத் தத்துவமும், வேட்ஸ்வொர்த்தின் அன்புத் தத்துவமும் அறிவு ஆராய்ச்சிக் கடலில் அமிழ்ந்த அவருக்கு மிதப்புக் கட்டைகளாக உதவின. இசையின் போது அவர் இதயம் தன்னைத் தனக்கே தானறியாமலே திறந்து காட்டிக்கொண்டது. உருவ வழிபாட்டை அவருடைய பகுத்தறிவு எதிர்த்த அதே சமயத்தில் தேவியின் மீது ஒரு பாடலைப் பாடும் போது அவருடைய இதயம் நிரம்பியது. அந்தப் பகுத்தறிவை இதயத்துக்குப் படிய வைத்தவர்தான் பரமஹம்ஸர். 'பகுத்தறிவு முதலில் பகுத்து அறிய வேண்டிய உண்மை தன்னால் ஓர் எல்லைக்கு மேல் செல்ல முடியாது என்பதைத்தான்' என்று நரேனுக்கு உணர்த்தினார் பரமஹம்ஸர். பகுத்தறிவைப் பாவாகவும், இதயத்தை ஊடாகவும் கொண்டு பகுத்தறிவைத் துளைத்துத் துளைத்து இதயத்தைச் செலுத்தி நெசவு செய்தால்தான் ஆத்மாநுபவம் என்ற வஸ்திரம் கிடைக்கும் என்று நரேந்திரருக்கு உணர்த்தினார்.

"உங்களுடைய அறிவுக்குப் பொருந்தாதது எதையும் ஏற்காதீர்கள்; புத்தகத்தில் எழுதி வைத்திருக்கிறது, அல்லது வேறு யாரோ சொன்னார்கள் என்பதற்காக எதையுமே ஒப்புக் கொண்டு விடாதீர்கள்" என்று கூறியவராயிற்றே ஸ்வாமி விவேகானந்தர், அவரே எப்படிப் பகுத்தறிவுக்குப் புறம்பான முறையில் ஞானம் பெற்றிருக்க முடியும் என்று வாசகர்கள் எண்ணலாம்.

உண்மை என்ன வெனில், விவேகானந்தர் பகுத்தறிவை முழு ஆதாரமாகக் கொள்ள வில்லை; அதனை அடியோடு ஒதுக்கவும் இல்லை. பகுத்தறிவுக்கு அடங்கிய விஷயங்களில் வேறு பிரமாணங்களைத் தேடக் கூடாது என்பதே அவர் வலியுறுத்திய உண்மை. எனினும் பகுத்தறிவுக்கு மேம்பட்டது அநுபவம் என்பதே அவர் கொள்கை. இவ்விஷயத்தில் அவர் ஆதிசங்கரரின் வழியில் சென்றவர் என்று கூறலாம்.

குரு என்று ஒருவர் அவசியமே யில்லை என்றுதான் நரேன் படித்த நூல்கள் பகுத்தறிவு வாதம் செய்தன. நரேனுடைய பகுத்தறிவும் அதனை ஒப்புக் கொண்டது. கடவுளுக்கும் மனிதனுக்கும் குறுக்கே நிற்பவர்தான் குரு என்றுகூட அவர் கருதினார்.

இருந்த போதிலும், தத்தளிக்கும் தம்மைக் காக்க ஒரு கை தேவை என்று அவரது இதயம் அலறிப் பரிதவித்துக்


நவநாகரீகத்தின்
நற்சின்னம்
பின்னியின் தூய
பட்டுப் புடவை
ஜார்ஜெட், ஷிப்பான், மென் பட்டு
ரகங்களில் கிடைக்கும்
வெங்கடேஷ்
வஸ்திராலயா
ஷோரூம்கள்
மைசூர் பாங்க் பில்டிங்
(ஹைகோர்ட்டுக்கு எதிரே) மதராஸ்
S. வெங்கடேஸ்வர அய்யர். V. சிவராமன்
பார்ட்னர்கள்
JWTWV-1151

கொண்டிருந்தது. கைகொடுத்துக் காப்பாற்றினார் பரமஹம்ஸர்.

சரித்திரத்தையும் பூகோளத்தையும் போல வாயினால் கூறி விளங்க வைப்பது அல்ல தத்துவம்; அதனை வாழ்ந்து காட்டி நிரூபிக்க வேண்டும்; அப்படி நிரூபிப்பவர்தான் குரு — என்பதையெல்லாம் நரேனுக்கு நிரூபித்துக் காட்டினார் ராமகிருஷ்ணர்.

'உருவும் பெயரும் குணமுமற்ற ஒன்றுதான் இந்த உலகுக்கெல்லாம் காரணம். காரணம் என்றால் இந்த உலகையெல்லாம் அது எதைக் கொண்டோ படைத்தது என்று அர்த்தமில்லை. அந்த ஒரே பொருள், தானே இப்படிப் பலவாகத் தோன்றுகிறது. புலன்களை அடக்கி, மனசைச் சுத்தமாக்கிக் கொண்டு, அந்தப் பொருளைத் தியானித்தால் அதுவே நாம் என்ற உண்மையை உணரலாம்.'—நாம் யார் என்று அறியவும், பிரபஞ்சம் இன்னது என்று அறியவும், கடவுள் உண்டா என்று அறியவும் நரேந்திரர் துடித்த துடிப்புக்கு இந்த விடையைத்தான் வாழ்ந்து காட்டினார் ராமகிருஷ்ணர். 'இந்த உருவும் பெயரும் குணமுமற்ற பொருளே, நாம் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கினால் உருவம் தரித்து வந்து நம்மை ரட்சிக்கும்.' — இதையும் பிற்பாடு பரமஹம்ஸர் நரேந்திரருக்கு உணர்த்தினார்.

.........that is all
Ye know on earth, and all ye
need to know

என்று வேறொரு பொருள் பற்றிக் கவி கூறியது போல, இதுதான் உலகம் முழுவதிலும் ஒருவர் அறியக் கூடிய பேர் உண்மை; அதற்கு மேல் வேறெதுவும் வேண்டியதில்லை. அப்படி நரேந்திரரை அறியச் செய்து விட்டார் ராமகிருஷ்ணர். ஆனால் அந்தப் பயிற்சி முடிவதற்கு ஐந்து நீண்ட ஆண்டுகள் தேவைப்பட்டன. அதற்குள் நரேந்திரர் பட்டபாடு கொஞ்சமா, நஞ்சமா?

நரேந்திரர் ராமகிருஷ்ண தேவரை இலேசில் தமது குருவாக மதித்துச் சரணடைய வில்லை. ஐந்து ஆண்டுகள் அவருடைய செய்கைகளை அக்கு வேறு ஆணி வேறாகப் பகுத்துப் பார்த்தபின் தான் அந்தப் பிரேமசாகரத்தில் கரைந்தார் நரேந்திரர்.

சிஷ்யன் குருவைத் தேடுவது உலக வழக்கு. ஆனால் இந்தக் குருவோ, தாமே சிஷ்யனைத் தேடித் தவித்தாரல்லவா? அதே போல, சிஷ்யர்களை குருமார் பரீட்சித்துப் பார்ப்பதே வழக்கமாயினும், பரமஹம்ஸரோ தமது சிஷ்யர்



''எதிரி உம்மைப் பயங்கர ஆயுதங்களைக் கொண்டு தாக்கினார் என்று புகார் செய்திருக்கிறீரே அவர் உம்மை எதனால் தாக்கினார்?''

''அவர் வீட்டுத் தீபாவளிப் பக்ஷணங்களால்!''

தம்மைப் பரிசோதித்துப் பார்ப்பதை மகிழ்ச்சியுடன் வரவேற்றார். ஏன், அவரே ஒரு முறை கூறினார்: ''பணத்தை மாற்றிக் கொள்ளுபவர்கள் எப்படி ஒவ்வொரு நாணயமும் செல்கிறதா செல்லாதா என்று பார்ப்பார்களோ, அதே போல எனது சகல காரியங்களையும் பரீட்சித்துப் பார்த்து, அதன் பின்னரே என்னை ஏற்றுக் கொள்'' என்று. இவ்வாறு கூறுவதற்கு எவ்வளவு தெரிய நடத்தையும் நிர்மலமான உள்ளமும் வேண்டும்?

பரமஹம்ஸரின் அமானுஷிகமான அனுபவங்களை ஆரம்ப காலத்தில் நரேந்திரர் நம்ப வில்லைதான். எனினும், அவரது துறவும், தூய்மையும், அவற்றுக்கு மேலாக அவரது கலப்படமற்ற அன்பும் நரேந்திரரைக் கவர்ந்து விட்டன. வாரம் இரு முறையேனும் அவர் பரமஹம்ஸரைக் காணச் செல்வார்.

கூட்டுப் புழு வண்ணத்துப் பூச்சியாக மாறுவது போல நரேந்திரர் விவேகானந்தரானார் என்று ஸ்வாமி சிவானந்தர் அவர்கள் தாம் எழுதியுள்ள ஸ்வாமிஜியின் சரிதத்தில் அழகுறக் கூறியிருக்கிறார்.



''இன்று நடந்த ஒரு வேடிக்கையைக் கேளுங்கள் சார்! நான் இன்று மத்தியானம் சாப்பிடவே மறந்துவிட்டேனாம்! என் மனைவி சொல்கிறாள்!''

''நானும் உங்களைப் போல் மறதிப் பேர்வழிதான்! மறந்துபோய் எட்டுத் தடவை சாப்பிட வந்தேன் என்கிறாள் என் மனைவி!''

கூட்டுப் புழு வண்ணத்துப் பூச்சியாவது எளிதில் நடைபெறும் காரியமல்லவே! நரேந்திரர் நரேந்திரராகவே தான் பல நாட்கள் இருந்து வந்தார்!

மெய்ப் பொருளும், ஜீவனும் ஒன்றே என்ற சமாதி நிலைக்குப் பரமஹம்ஸர் அவரை உயர்த்திச் சென்ற போதும்கூட அவருக்கு அது புரியத்தான் இல்லை. ''எனக்கு வீடு — வாசல், தந்தை — தாய் எல்லாம் உண்டே'' என்று அலறினார்; தாம் நரேந்திரராகவே இருக்க விரும்பினார். இதைப் பற்றி குரு மஹராஜ் ஒரு முறை வேடிக்கையாகக் கூறினார்:

''செத்துப் போனபின் ஒருவன் பிசாசாகப் போனான். அந்தப் பிசாசுக்கு ஒரு சகா வேண்டியிருந்தது. யாரேனும் இறந்து போனதாக அறிந்தால் உடனே அந்த இடத்துக்குச் சென்றுவிடும் பிசாசு. ஆனால் இறந்து போனவரின் ஆவி பிசாசுடன் கூட்டுச் சேராது. 'நான் நல்ல காரியங்கள் பண்ணியவனாயிற்றே, ஆதலால் நான் பிசாசாக அலைய முடியாது' என்று சொல்லி மரணமடைந்த மற்றவர்களின் ஆவிகள் மேல் உலகம் சென்றுவிடும். அந்தப் பிசாசைப் போலவேதான் இவ்விடமும் ஒரு சகாவுக்காக ஏங்கிற்று. நரேந்தர், உன்னைக் கண்டவுடன் அந்தச் சகாவைப் பெற்றுவிட்டோம் என்று எண்ணிற்று. ஆனால் நீயும் 'வீடு — வாசல் இருக்கிறது, அப்பா — அம்மா இருக்கிறார்கள்' என்று தான் சொல்லி விட்டாய்!''

பிசாசுக்கும் பரமஹம்ஸருக்கும் எவ்வளவு தொலைவோ, அவ்வளவு தொலைவு மற்றவர்களுக்கும் நரேந்திரருக்கும் என்பது போகப் போகத் தெளிவாயிற்று. தம்முடைய வீடு வாசல், தந்தை தாய் தமர் யாவும் குருதேவரே என்று நரேந்திரர் உணரும் காலமும் வரத்தான் போகிறது!

பரமஹம்ஸர் விளையாட்டாக இவ்வாறு கூறிய போதிலும் நரேந்திரருக்கும் மற்றவர்களுக்கும் எவ்வளவு தொலைவு என்பதை முதற் பார்வையிலிருந்தே அவர் நன்கு அறிந்து தான் இருந்தார். நரேந்திரரையும் இன்னும் சிலரையும் நித்திய சித்தர்கள் — பிறப்பிலிருந்தே பூரணத்துவம் பெற்றவர்கள்—என்பதாக அவர் கூறி வந்தார். ''அவர்கள் பெறும் பயிற்சிகள் எல்லாம் அவர்களுக்காக அல்ல. உலகத்தின் நன்மைக்காகவே அவை'' என்று அவர் சொல்லுவார். உலக மக்களுக்காக அவதார புருஷராகிய நரேந்திரர் ஐயங்கள் கொண்டு இன்னலுற்றதைத்தான் பரமஹம்ஸர் இப்படிக் குறிப்பிட்டாரோ?

நரேந்திரரிடம் பரம ஹம்ஸருக்கு இருந்த அன்பை வார்த்தைகளால் வடிக்க இயலாது. ஆத்மாவை நேசிப்பது போலவே நரேந்திரரை நேசித்தார் பரமஹம்ஸர்.

ராமகிருஷ்ணரின் துறவுக்காகவும், தூய்மைக்காகவும் அவரை நரேந்திரர் நேசித்தார் எனில், அதைப் போலப் பல மடங்கு நரேந்திரரை நேசித்தார் பரமஹம்ஸர். நரேந்திரரின் சுய நம்பிக்கையும், ஆண்மையும், சத்திய நாட்டமுமே பரமஹம்ஸரை இவ்வாறு ஈர்த்தன.

நரேந்திரரைப் பிடிவாதக்காரர் என வெளி உலகம் கண்ட போது ராமகிருஷ்ணர் மட்டும் அந்தப் 'பிடிவாதம்' தன்னம்பிக்கையில் பிறந்தது எனக் கண்டார். சுதந்திரமாகச் சிந்திக்கும் நரேந்திரரைத் 'தான்தோன்றி' என்று மற்றவர்கள் எண்ணியபோது ராமகிருஷ்ணர் மட்டும் அந்தச் சுதந்திரச் சிந்தனை நரேனுடைய புலனடக்கத்தில் பிறந்ததெனக் கண்டார். அலட்சியக்காரர் என்று மற்றவர்கள் நரேந்திரரை எண்ணிய போது ராமகிருஷ்ணரோ புகழையும் இகழையும் பொருட்படுத்தாத அந்த 'அலட்சியம்' அவரது இதய சுத்தத்தில் பிறந்தது என்பதை நன்கு உணர்ந்திருந்தார். (தொடரும்)



உங்கள் சமையலறைக்கு வண்ணம் துலங்கும் வனப்பூட்ட...

**ஏஸிஸியின் வெள்ளை ஸிமெண்டான ஸில்விக்ரீட்**

கொண்டு தயாரித்த தளவரிசைக் கற்களைப் பதியுங்கள்

ஏஸிஸியின் வெள்ளை ஸிமெண்டான ஸில்விக்ரீட் கொண்டு தயாரித்த 'டெர்ராஸோ,' மற்றும் தளவரிசையிட்ட தரைகள் கண்ணைப்பறிக்கும் வண்ணத்தோடு நாள்பட நிற்பவை; கழுவித்துடைப்பதற்கு மிக்க வசதியானவை.

அடுக்களை, ஸ்நான அறை, கவர்ச்சியாக இருக்க, வீடு முழுவதிலுமுள்ள தரைகள் வனப்புடன் விளங்க, ஸில்விக்ரீட் கொண்டு தயாரித்த தளவரிசைக் கற்களைப் பதியுங்கள்.

ஸ்ஜேரொலம் மற்றும் கலர்க்ரீட்டுக்கு ஸில்விக்ரீட் தான் ஆதாரப் பொருள்.

**ஸில்விக்ரீட்**

விவரங்களுக்கு:
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்
பம்பாய் - அஹமதாபாத் - பெங்களூர் - கல்கத்தா - கோயம்புத்தூர் - புது டில்லி
இந்தூர் - கான்பூர் - மதராஸ் - பட்னா - ஸெகந்திராபாத்
தி அஸோஸியேட்டட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்

JWT-CHI-1466(R)

# நீதி வளர்க்கும் விடுதிகள்



பிற்பகல் மணி மூன்று. அமைதி நிரம்பிய சூழ்நிலை.

வகுப்பு அறைகளின் ஜன்னல்களின் வழியாக ஆசிரியர்களின் மாறுபட்ட குரல்கள் ஆங்காங்கு வெளியே பரவுகின்றன.

தோப்பில் உள்ள தென்னை மரங்களின் கீற்றுக்கள் விட்டு விட்டு அசைந்து சலசலப்பான ஓசையைத் தோற்றுவிக்கின்றன.

''வாருங்கள்! நான் குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி நேராகவே பரிட்சை செய்து பார்த்து விடுவோம்'' என்கிறார் பௌதிகப் பேராசிரியர் திரு எஸ். தியாகராஜன்.

ஹாஸ்டல் கட்டட முகப்பில் அமைதியின் அளவு அதிகமாகவே இருக்கிறது. காவல் நிற்கும் கூர்க்கா கையில் உள்ள ஒரு குறிப்புப் புத்தகத்தைப் பேராசிரியரிடம் நீட்டிவிட்டு ஒதுங்கி நிற்கிறான்.

'ஐம்பத்தி ஐந்தாம் நம்பர் அறை' என்று எழுதி அதற்கு நேராக இரண்டு மாணவர்கள் பெயரையும் கூர்க்கா கடைசியாக எழுதி வைத்திருக்கிறான்.

பேராசிரியர் முன் நடக்க மாடிக்குப் போகிறோம். வாசலில் நிற்கும் கூர்க்காவைத் தவிரவும் அந்தப் பெரிய கட்டடத்தில் மனித அரவமே இல்லை. ஒரே நிசப்தம்.

ஐம்பத்தி ஐந்தாம் நம்பர் அறையும் மூடித்தான் இருக்கிறது. பேராசிரியர் விரல்களால் தட்டுகிறார் கதவை. அடுத்த நிமிடம் கதவைத் திறந்து கொண்டு இரண்டு மாணவர்கள் வெளியே வருகிறார்கள். வணக்கம் தெரிவிக்கிறார்கள்.

'' ஊருக்குப் போக அனுமதி வாங்கிக் கொண்டு புறப்பட்டேன் சார். ஆனால் நான் போவதற்குள் பஸ் அவசரப்பட்டுப் புறப்பட்டு விட்டது . ஆகையால்தான் அறைக்குத் திரும்பி விட்டேன். மீண்டும் மாலையில்தான் பஸ்'' என்கிறான் முதல் மாணவன்.

''எனக்குக் காப் (Cough) சார்! ஹூப்பிங் காப்! (Whooping Cough) டாக்டர் சீட்டு வாங்கிக் கொண்டு விட்டேன்'' என்கிறான் இரண்டாவது மாணவன்.

பேராசிரியர் முகத்தில் பெருமிதம் பரவுகிறது. ஒரு மாணவன் பஸ்ஸைக் கோட்டை விட்டு அவஸ்தைப்படுவதற்காகவோ, மற்றொரு மாணவன் பலத்த இருமலின் பிடியில் சிக்கியிருக்கிறான் என்பதற்காகவோ தோன்றிய பெருமிதம் இல்லை அது. வகுப்பு நேரங்களில் ஹாஸ்டல் மாணவர்கள் வகுப்புகளுக்கு மட்டம் போட்டு விட்டுத் தங்கள் அறைகளுக்குள் நுழைந்து காரணமின்றித் தங்கி யிருக்க வில்லை என்ற மன நிறைவில் எழுந்த பெருமிதம்.

வராந்தாவின் மறு பக்கமாகச் சுற்றி நடந்து கீழே வருகிறோம். ஐம்பத்தி ஐந்தாம் நம்பர் அறையைத் தவிர எல்லா அறைகளுமே பூட்டப்பட்டுத்தான் இருக்கின்றன.

''பெரியவர்களுக்கு 'ஹூப்பிங் காப்' — வருமா?'' என்று கேட்கிறார் பேராசிரியர்.

''சாதாரண இருமலாகத்தான் இருக்கும். நீங்கள் இப்படி ஒரு விசேஷ சந்தர்ப்பத்தில் மாணவனைத் திடீரென்று விசாரிக்க முற்படும் போது அவன் வியாதிக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வகையில் பேசியிருப்பான்'' என்ற பதிலைக் கேட்டு அவர் சிரிக்கிறார். அவர் ஹாஸ்டல் வார்டனும்கூட!

மீனம்பாக்கத்தில் உள்ள ஜெயின் கல்லூரி ஹாஸ்டலில் நிலவும் இந்த ஏற்பாடு பாராட்டப்பட வேண்டிய ஒரு காரியம் என்றுதான் தோன்றுகிறது. கூர்க்காவின் குறிப்பேட்டுக்கு மட்டம் போடும் மாணவர்கள் பயந்துதான் ஆக வேண்டும். தினம் மாலையில் வார்டன் அந்தக் குறிப்பேட்டைப் பார்க்கிறார். மாணவர்களைக் கூப்பிட்டு விசாரிக்கிறார்!

ஏறத்தாழ ஆயிரத்து நானூறு மாணவர்கள் கல்வி கற்கும் இந்தக் கல்லூரிக்குத் தற்சமயம் ஹாஸ்டல் வசதி குறைவாகத்தான் இருக்கிறது. சுமார் நூற்றி எழுபத்திரண்டு மாணவர்கள் தங்கக் கூடிய கட்டடம்தான் எழுந்திருக்கிறது. மேலும் சில கட்டடங்கள் கட்டத் திட்டமும் பண



# ஜெயின் கல்லூரி

றும் தயாராக இருக்கின்றன. கட்டடச் சாமான்களுக்காகவும் சிமெண்டுக்காகவும் காத்திருக்க வேண்டிய நிலை.

இந்த ஹாஸ்டல் கட்டடத்தில் வந்து நிம்மதியாக வசிக்கவே மாணவர்கள் ஒரு காலத்தில் உரிமைப் போராட்டம் நடத்த வேண்டிய நிலை ஏற்பட்டதாம். புதிய ஹாஸ்டலைச் சுற்றியிருந்த பரந்த மைதானத்தில் வசித்த பழைய குடிசைவாழ் குடும்பங்கள் இந்த இடத்தைக் காலி செய்ய மறுத்துச் சத்தியாக்கிரகமே நடத்தினவாம்! மாணவர்கள் அந்த இம்சையையெல்லாம் பெரிதாக்காமல் சகித்துக் கொண்டிருந்தார்கள். கல்லூரி ஸ்தாபகர்கள் அவர்களுக்கு வேறு இட வசதி செய்து கொடுத்து, குடும்பம் ஒன்றுக்குத் தலா முப்பது ரூபாய் கொடுத்து அனுப்ப முன் வந்த பிறகு கூடச் சிறிதுகாலம் சமாளிக்க முடியாத நிலைமை இருந்தது. ஒரே வாரத்தில் ஸ்தாபகர்கள் லட்ச ரூபாய் சேர்த்துக் கல்லூரி, ஹாஸ்டல் இவைகளைச் சுற்றி மாபெரும் காம்பௌண்டுச் சுவர் எழுப்ப ஏற்பாடு செய்து விட்டார்கள்.

'இப்போதும் அந்தப் பழைய குடிசை நண்பர்கள் தீபாவளி, பொங்கல் நேரங்களில் கல்லூரிக்கு வந்து உரிமையோடு இனாம் பெற்றுப் போகும் வழக்கத்தைக் கடைப்பிடிக்கிறார்கள்'' என்று கல்லூரி முதல்வர் திரு ஏ. எம். கிருஷ்ணன் குறிப்பிட்டார்.

உயர் கல்வித் துறையில் நாற்பது வருட அனுபவம் பெற்றவரும் ஆங்கில பாடத்தைப் போதிப்பதில் தமக்கென்று ஒரு வழி வகுத்துக் கொண்டு பல மாணவ தலைமுறைகளின் நன்மதிப்புக்குப் பாத்திரமாகியிருப்பவருமான , திரு ஏ. எம். கிருஷ்ணன் கடந்த ஏழெட்டு ஆண்டுகளாக இங்கு முதல்வர் பதவியில் அமர்ந்திருக்கிறார். அனுபவத்தினால் அவர் உள்ளம் எவ்வளவு விரிந்திருக்கிறதோ அதைவிடப் பன்மடங்கு உற்சாகத்தினாலும் அவர் உள்ளம் விரிவடைகிறது.

''வேறு கல்லூரிகளில் என்னுடன் கூடப் பணியாற்றிய ஆசிரியர்களில் பலரும், எங்களிடம் படித்துப் பிரகாசித்த மாணவ மணிகளும் இன்று இந்தக் கல்லூரியில் மீண்டும் ஒன்றாகச் சேர்ந்து ஆசிரியர்களாக என்னுடன் பணி செய்வதை நினைக்கும் போது, ஆண்டவன் என் மீது விசேஷமாகக் கருணை காட்டுகிறார் என்று தான் நான் நினைத்து மகிழ்கிறேன். ஆசிரியர்கள் எல்லாரும் ஒரே குடும்பம்போல் நன்கு புரிந்து கொண்டு பழக இது ஒரு நல்ல வாய்ப்பைக் கொடுக்கிறது. இதனுடைய பலனை முழுக்க முழுக்க அடைகிறவர்கள் எங்கள் மாணவர்கள்தான்'' என்று முதல்வர் கிருஷ்ணன் குறிப்பிட்டபோது அவர் முகம் ஆனந்தத்தால் பூரித்தது.

சர்வ கலாசாலை நிர்ணயிக்கும் அளவைவிட அதிக அளவில் ஆசிரியர்கள் இங்கு பணி செய்கிறார்கள் என்பது ஒரு குறிப்பிட வேண்டிய அம்சம். அந்த அளவுக்குச் சர்க்கார் மான்யம் குறைவதைக் கூடக் கல்லூரி நிர்வாகம் பொருட்படுத்த வில்லை. மாணவர்களின் உள்ளங்களில் அறிவு என்னும் விளக்கை ஏற்றி வைக்க அதிகப்படியான சக்தி தேவை என்ற ஒரே லட்சியம்தான் நிர்வாகத்துக்கு!

புகு முக வகுப்பைப் பகுதி பகுதிகளாகப் பிரிப்பதில் கூட இந்தத் தாராள மனப்பான்மையைப் பார்க்க முடிகிறது. பிரிவுகளில் குறைந்த மாணவர்களை வைத்துப் பிரிவுகளின் எண்ணிக்கையை அதிகரித்திருப்பதால் ஆசிரியர்களிடம் மாணவர்களின் கவனமும், மாணவர்களிடம் ஆசிரியர்களின் சிரத்தையும் அதிகரிக்க வழி ஏற்படுகின்றன.

''பள்ளிக்கூடங்களில் பையன்கள் முப்பது நாற்பது தலைகள் கொண்ட செக்ஷன்களில் அமர்ந்துதானே படித்திருப்பார்கள்! உடனடியாகக் காலேஜில் நுழைந்த போது எண்பது தொண்ணூறு என்று அடைத்து உட்கார்த்தி வைத்தால், ஏதோ கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற்போல் இருக்காதா? ஓரளவு





அந்த நிலையைக் குறைக்க நாங்கள் முயற்சி செய்கிறோம்'' என்று கல்லூரி முதல்வர் விளக்கிய போது அவர் குரலில் பெற்றோர்களின் ஆதுரமும் ஆசிரியர்களின் கடமை உணர்ச்சியும் கலந்தே ஒலித்தன.

இத்தகைய முயற்சிகளின் அடிப்படையில்தான், பரீட்சை வெற்றிகளில் இந்த ஜெயின் கல்லூரி சர்வகலாசாலையில் முதல் மூன்றிடங்களில் ஒன்றை எப்போதும் பிடித்துக் கொள்கிறது போலும். பல மாணவர்களால் ஒரு பயங்கர நிகழ்ச்சி என்று கருதப்படும் புகுமுக வகுப்புக்கான ஆண்டுப்பரீட்சையில் இரண்டாம் வகுப்பில் விட முதல் வகுப்பிலேயே அதிக மாணவர்கள் வெற்றி பெற்றுக் கல்லூரிக்குப் புகழ் தேடித் தருகிறார்கள்.

ஜா அகர்ச்சண்ட் மன்றூல் நிறுவனத்தின் அதிபர் மோஹன் மூல்சாரியா மனமுவந்து அளித்த நன்கொடையான இரண்டு லட்சம் ரூபாய், சுவேதாம்பர் ஸ்தானக்வாசி ஜெயின் கல்வி சங்கத்தை உற்சாகப்படுத்தி இந்தக் கல்லூரியை 1952ம் ஆண்டில் தோற்றுவித்தது. மோகன் முல்ஜியின் உதார குணத்தைப் பின்பற்றி ஜெயினர்களும் ஜெயினர்களல்லாதவர்களும் இந்தக் கல்லூரியின் வளர்ச்சியில் கணிசமான அளவுக்கு நன்கொடைகள் அளிப்பது மூலம் அக்கறை காட்டத் தொடங்கினார்கள். இரண்டாண்டு காலம் சென்னை தியாகராயநகர்ப் பகுதியில் இயங்கி விட்டு 1954ம் ஆண்டு முதல் மீனம்பாக்கத்தில் எழுந்து நிற்கும் சொந்தக் கட்டடத்துக்கு இடம் மாறியது. புகுமுக வகுப்பைத் தவிர பொருளாதாரத்துக்கான மூன்று வருட பி. எஸ்ஸி. பட்ட பாடமும் பி.காம் பாடமும் இந்தக் கல்லூரியில் அளிக்கப்படுகின்றன.

ஆராய்ச்சிப் பாடங்களுக்கான வகுப்புகளின் தொடக்கம் கட்டட விஸ்தரிப்பின் திட்டத்துடன் இணைந்திருப்பதால் இன்னும் சில காலத்துக்குக் காத்துத்தான் இருக்க வேண்டும் போலிருக்கிறது. ''ஆனால் அந்த வகுப்புக்கான நுண்ணிய பரிசோதனைக் கருவிகளெல்லாம்கூட எங்களிடம் தயாராக இருக்கின்றன. இந்தக் கல்லூரி தோன்றிய நாளிலிருந்து நிர்வாகக் கமிட்டியின் காரியதரிசியாகப் பணியாற்றி வந்து சென்ற ஆண்டில்தான் காலமான திரு கும்பட் செலவுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் தரத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து விலையுயர்ந்த பரிசோதனைக் கருவிகளை வாங்கி வைக்க ஏற்பாடு செய்தார்'' என்றார் ஒரு பேராசிரியர்.

ஓர் உழைப்பாளியான ஏழைத் தாயார் அன்றாடம் வேலை செய்துதான் காலட்சேபம் நடத்தியாக வேண்டும் என்ற நிலை. பையன் எஸ். எஸ். எல். ஸி.யில் வெகு சுமாரான மார்க்குகள் மூலம்தான் வெற்றி பெற்றிருந்தான். அவனைக் கல்லூரிக்கு அனுப்ப வேண்டும் என்று ஆசை. ஆனால் கல்லூரி திறக்கப்படவிருந்த வேளையில் வெளியூரிலிருந்து அந்த அம்மையாரின் பெண்ணுக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டு அங்கே போக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

வெளியூருக்குப் புறப்படுவதற்கு முன் அந்த அம்மாள் நிர்வாகக் குழுவினரை அணுகித் தன் நிலையை விளக்கினாள். ''நீங்கள் ஊருக்குப் போகலாம். எங்களாலான உதவி செய்வோம்'' என்ற பதில் கிடைத்தது. அடுத்த வாரமே அந்த அம்மாவுக்கு ஒரு கடிதம் வந்தது. ''உங்கள் பையனைக் கல்லூரியில் சேர்த்து விட்டோம். அவனுக்குச் சம்பளச் சலுகையும் கிடைக்கும். ஆனால் அவனை ஊக்கத்துடன் படிக்கத் தூண்டுவது உங்கள் பொறுப்பு'' என்று எழுதியிருந்தது.

இவ்வாறு ஏழை மாணவர்களுக்கு உதவுவதுடன் சர்க்கார் காரியாலயங்களில் உள்ளது போல ஒவ்வொரு மாணவனுக்கும் ஒரு 'பெர்சனல் பைலை' திறந்து விடுகிறார்கள் நிர்வாகிகள். வருட ஆரம்பத்திலிருந்து முடிவு வரை அந்த மாணவன் எழுதும் லீவு லெட்டரிலிருந்து அவனுக்குக் கொடுக்கப்படும் எச்சரிக்கைக் கடிதம் வரை அதில் இடம் பெற்று விடுகின்றன.

உயிரியல் பாடங்களுக்கு இந்தக் கல்லூரியில் இடமில்லை. ஜெயினர் சங்கத்தினரால் ஸ்தாபிக்கப்பட்டது அல்லவா? 'ப்ளிட் பம்பினால் ஈயை விரட்டுவது கூட அதிகார பூர்வமாக இங்கு அனுமதிக்கப்படாத செயல்' என்றார் ஒரு மாணவர் வேடிக்கையாக.

''திறந்தவெளி அரங்கத்தை நிர்மாணித்து அதைக் கவர் வைத்து மூடி விட்டார்களே, ஏன்?''

''உள்ளே அந்தந்த மேக்கப் சாமான்களையும் பத்திரப்படுத்தி விருக்கிறோம்.''

''என்ன?''

''ஆம்! கட்டட வேலைக்கான ஒரு பகுதி சிமிண்டு! இப்போதைய சிமிண்டு நெருக்கடி நிலை மாறி நிறையக் கிடைக்க ஆரம்பித்தவுடன் எங்கள் கட்டடத் திட்டம் ஆரம்பமாகும். கிடைத்த கொஞ்சம் சிமிண்டும் காற்று ஈரத்தால் கெட்டுப் போய் விடாமல் அங்கு பத்திரப்படுத்தி இருக்கிறோம்.''

'இதென்ன? ஏதாவது எவர்சில்வர் டிபன் பாக்ஸ் எக்ஸிபிஷனுக்கு ஏற்பாடாகி விருக்கிறதா?' என்று கல்லூரி வாயிலில் காலடி எடுத்து வைத்தவுடன் தோன்றும். இந்தப் பக்கம் இருநூறு டிபன்பாக்ஸ் அந்தப் பக்கம் நூறு டிபன் பாக்ஸ் இருக்கும்! மாணவர்களுக்கு இதற்கென்று அறை ஒதுக்கி விருக்கிறோம். ஆனால் அவர்களுக்கு அவ்வளவு தூரம் போய் வைக்கச் சோம்பலாக இருக்கிறதோ, என்னவோ?

பிற்பகல் வகுப்புகளுக்கான மணி ஒலிக்கிறது. இரண்டு நிமிடங்கள் மாணவர்கள் சரசர வென்று நூற்றுக்கணக்கில் நடக்கும் காலடி ஓசை! மூன்றாவது நிமிடம் வராந்தாக்கள் வெறிச்சோடி ஒரே அமைதியில் ஆழ்ந்து விடுகின்றன. மாதிரிக்குக்கூட ஒரு பையன் வராந்தாவில் நடக்கவில்லை; வகுப்பிலிருந்து வெளி வரவில்லை. ஐந்தாவது நிமிடம் ஆசிரியர்கள் சாக்கட்டிகளால் கரும் பலகையில் எழுதும் சத்தம்கூட இனிய தாள வாத்தியக் கச்சேரியாகக் கேட்கிறது.

மாணவர்களின் பொறுப்புணர்ச்சியை இந்த அமைதி எடுத்துக் காட்டுகிறது!

# மக்ளீன்ஸ்

## உபயோகித்து அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்!





### இவ்விதம் சோதியுங்கள்

1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த பற்களை வெண்மையாக்குகிறது!

MTP/UP/-63-TM





# தூங்கும் நினைவுகள்

பொன்முடி

சிறுகதை

எல்லையற்ற வான வீதியில் போய்க் கொண்டிருக்கிற பகலும், வந்து கொண்டிருக்கிற இரவும் சந்திக்கிற மாலைக் கோலம் மறைந்த பின் நீலம் மெழுகினாற் போல் இருள் கவிந்து மெல்ல மூடும் முன்னிருட்டு வேளையில் எங்கிருந்து பார்த்தாலும் பிரகாசமாய்த் தெரியும் ஏதோ ஒரு நட்சத்திரத்தைப் போல் என்னுடைய ஞாபகத்தின் தூக்கத்துக்கும் — விழிப்புக்கும் — நடுவே அவள் மின்னிக் கொண்டிருந்தாள். ஞாபகத்தின் மிக மெல்லிய கவடுகளாய் அந்த நேரத்தின் நினைவுகளை என்னுள் நானே இசைத்துப் பார்த்துக்கொள்ளுகிறேன். இப்போது நான் இந்த உலகத்தையும் இதனுடைய அவலக் கவலைகளையும் கடந்து நிற்கிறேன். நானும் என்னுடைய கவலைகளும் சேர்ந்தே ஒரு பெரிய உலகமாகி விட்ட பின் இந்த வெறும் உலகத்தைப் பற்றி நான் எப்படிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியும்? சில மாலை நேரங்களில் மேலே வானத்து நீல முற்றத்தில் மலை மலையாக ரோஜாப் பூக்களை அள்ளிக் குவித்தாற் போல் செம் மேகங்கள் மிதக்குமே— அந்தச் செம்மேகங்களின் அழகினால் உலகத்துக்கு ஒரு துளி மழைத் தண்ணீர் கூடக் கிடைக்காது. 'அழகுக்கு ஒரே பயன் அது அழகாயிருக்கிறது என்பதுதானே தவிர வேறு பயன் இருக்க முடியாது — இருக்கக் கூடாது' — என்று உங்களில் யாராவது என்னோடு வாதுக்கு வரலாம். மூன்று கண்டிப்பான காரணங்களினால் உங்களுடைய வாதத்தை நான் ஏற்று எதிர்கொள்ளத் தயாராயில்லை. முதற் காரணம் வாதப் பிரதி வாதங்களைக் கடந்த நிலையில் நான் நிற்கிறேன். இரண்டாவது காரணம் அழகு சம்பந்தமான என் அபிப்பிராயங்கள் எல்லாம் எனது அநுபவங்களைச்சார்ந்து நானே படைத்துக் கொண்டு விட்ட தீர்மானங்கள். மூன்றாவது காரணம் யாருடைய பலமான வாதங்களாலும் என்னுடைய பலமில்லாத தீர்மானங்கள் மாறிவிடக் கூடாது என்ற பலவீனம். இந்தப் பலவீனம் என்னிடம் எப்படி வந்தது என்று நீங்கள் சந்தேகப்படலாம். என்னிடம் அதிகமான பலங்கள் இருப்பதாக எல்லாரும் நினைக்கிறார்கள்; புகழ்கிறார்கள்; இந்தப் புகழினாலும், பெருமையினாலுமே நான் பலவீனனாகி விட்டேன். கடைசியில் புகழும் மரத்துப் போய் விட்டது. எனக்குள் நானே பெருமைப்பட்டுப் பெருமைப்பட்டுக் கடைசியில் அந்தப் பெருமையும் சலித்துப் போய்விட்டது. இப்போதெல்லாம் நான் வீணாகிவிட்டதாக நினைத்துப் பாவித்து எனக்கு நானே அநுதாபப்பட்டுக் கொள்ளும் பரிதாபப் பிறவியாகி விட்டேன். நான் யார் என்பதைப் பற்றியும் என்னுடைய புகழ் பெருமைகள் என்னென்ன என்பதைப் பற்றியும் நானே மறந்துபோய்விட்டு — அறவே மறந்து போய் விட்டு — நிம்மதியான அந்த மறதியில் என்னை மறைத்துக் கொண்டு மூன்று வயதுக் குழந்தையைப் போல் கட்டை விரல் நகத்தைக் கடித்துக்கொண்டு இப்போதுதான் வடிவெடுத்து வந்த பேதைமையோடு இந்த உலகத்தைப் பார்க்க வேண்டும் போல ஆசையாக இருக்கிறது. ஏறக்குறைய நான் ஒரு 'ஸினிக்' (வறண்ட பிடிவாதக்காரன்) ஆகிவிட்டேனோ என்று உங்களுக்கு என்மேல் ஒரு சந்தேகம் வரலாம். உங்கள் சந்தேகத்தைப் பற்றி நான் ஒரு சிறிதும் கவலைப் படுவதற்குத் தயாராயில்லை. 'நான் இப்போது 'ஸினிக்' ஆகிவிட்டேன் என்பதை விட முக்கியமாக நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி இதற்கு முன்னால் நான் 'ஸினிக்' ஆகாமல் இருந்த காலமும் ஒன்று உண்டு என்பதுதான். ◄

இந்த விநாடியில் நான் முன்னும் பின்னும் யாருமில்லாத தனிமையிலேயே நிற்கிறேன். பதங்களே இல்லாத தனிக் கேள்விக் குறியைப் போல் — காரணங்களை யெல்லாம் மறைத்து விழுங்கிவிட்டு நிற்கும் அபூர்வமான காரியத்தைப் போல் — வாழ்க்கையில் நான் தனியாக நிற்கிறேன். நான் நினைத்துப் பெருமிதப்படுவதற்கும், கர்வப்படுவதற்கும் எவ்வளவோ சாதனைகள் இருக்கின்றன. அந்த நேரத்தின் நினைவுகளை என்னுள் நானே இசைத்துப் பார்த்துக்கொள்கிறேன். என்னுடைய ஞாபகத்தின் தூக்கத்துக்கும் விழிப்புக்கும் நடுவே அவளுடைய நினைப்பு மட்டும் சின்னஞ்சிறு மின்னலாய் மின்னி மின்னி மறைந்து கொண்டிருக்கிறது. பூவிதழின் மடிந்த விளிம்பைப் போல் மேல் நோக்கிச் செழித்த இமைகளை அவள் ஒவ்வொரு முறை மூடித் திறக்கும்போதும் மிக நளினமானதோர் இரகசியத்தை மெல்ல உதிர்த்து முடிப்பது போல அழகாயிருந்ததை நினைக்கிறேன். குமுறியிருந்து மேற்புறமாகச் சிலிர்த்துக்கொண்டு பொங்கும் நீரூற்றைப் போல் கலீரென்று அத்தனை நயமாகச் சிரிப்பதற்கு அவளால்தான் முடியும். அவளைப் பற்றி இப்படி ஆயிரம் ஆயிரம் நினைவுகள் என் அந்தரங்கத்தில் உறங்கிக் கொண்டிருக்கின்றன. உள்ளே இடங்கொள்ளாமல், பொங்கி வழியும் பேரெழிலாய் அவளுடைய சரீரத்தின் செழிப்பைப் பார்க்கிற கண்களே அங்கீகரித்து வியக்க முடியும். சண்பகப் பூ நிறத்துப் பாதங்களில் மெல்லிய வெள்ளிச் சரிகை இழை நெய்த அழகிய பாதரட்சைகளோடு வீசும் தென்றலைப் போலவும், வீதியில் உதிரும் தங்க மலர்களைப் போலவும் பள்ளிக்கூடத்து வாசற்படிகளில் அவளுடைய அந்தக் கால்கள் நடந்து சென்றபோது அவற்றை என்ன செய்யலாம் என்ன செய்யலாம் என்று நினைத்து அவை என்னை ஏங்க வைத்துவிட்ட தன்மையை நான் பல முறை எண்ணி உணர்ந்திருக்கிறேன்.

இப்படி ஒவ்வொன்றாய்க் கூட்டி நினைக்கும் போதெல்லாம் என் இதயம் மௌனமாக அழத் தொடங்குகிறது. என்னுடைய ஞாபகத்தின் ஒரு நுனியில் அளவில்லாத மகிழ்ச்சியும் மற்றொரு நுனியில் முடிவில்லாத துயரமுமாக நிரம்பியிருக்கின்றன. என்னுடைய கதை அல்லது வரலாற்றைப் பற்றி நானே அதிகமாகக் கவலைப் படவில்லை. ஆனால் நான் புகழ் அடைந்துவிட்டதன் காரணமாக மற்றவர்கள் அவற்றைப் பற்றி அதிகம் கவலையும் ஆர்வமும் காண்பிக்கத் தொடங்கி விட்டார்கள். புகழ் அடைவதில் உள்ள பெரிய தொல்லையை இவ்வளவு காலத்துக்குப் பிறகு இப்போது என்னால் மிகமிக



நன்றாகப் புரிந்து கொள்ள முடிகிறது. நம்முடைய கவலைகளையும், மகிழ்ச்சிகளையும் நாமே சொந்தமாக அடைய முடியாமல் பிறருடைய அபிப்பிராயங்களும், ஆர்வமுமே முற்றிலும் அவற்றைச் சூழ்ந்துவிடுகிற வாழ்க்கை எவ்வளவு போலியானது என்பதை இப்போது உணர்கிறேன். என்னுடைய கய சரித்தை ஓரிரண்டு வார்த்தைகளிலும் சொல்லி முடித்துவிடலாம். காதல், நிராசை, துக்கம், வறுமை, செல்வம், புகழ், பழி—என்று சில வார்த்தைகளை எழுதிவிட்டு — இவை என் வாழ்விலும் உண்டு — என்று கீழே ஒரு கையெழுத்துப் போட்டு விடலாம். ஆனால் அப்படிச் செய்வது பலரை ஏமாற்றுவதாகும். அதிர்ஷ்ட வசமாகவோ அல்லது துரதிர்ஷ்ட வசமாகவோ நான் புகழுக்குரியவனாகி விட்டதனால் என்னைப் பற்றிப் பலர் தெரிந்து கொள்ள ஆவலாயிருப்பார்கள். அவர்களுக்காக என் கதையைக் கொஞ்சம் விரிவாகவே எழுதுகிறேன்.

## காட்டு ரோஜா



இப்போது போல் நான் அவ்வளவு புகழ்பெறாத காலம் அது. என்னுடைய 'மனோரஞ்சிதமலர்கள்' என்ற முதல் கவிதைத் தொகுதி மட்டும் தான் அப்போது வெளிவந்திருந்தது. அதன் புகழ் மணம் தமிழ் நாடெல்லாம் நிரம்பியதே தவிர அதை எழுதிய ஆசிரியனுடைய வயிற்றை மட்டும் நிரப்பவில்லை. பணத்துக்கும் புகழுக்கும் தனித்துத் தனித்து ஏங்கிய பின் — கடைசியாக ஒரு குக்கிராமத்துப் பள்ளிக்கூட வாத்தியாராகப் போய்ச் சேர்ந்தேன். அந்த ஊரை நெருங்குவதற்கே பயந்தாற்போல் இரயில் பாதை அந்த ஊரிலிருந்து ஏழு மைலுக்கு அப்பாலும் பஸ் போகிற சாலை நான்கு மைலுக்கு இப்பாலும் விலகிப் போய்க் கொண்டிருந்தன. எட்டாவது வகுப்பு வரை இருக்கும் ஏதோ ஒரு நடுத்தரப் பள்ளிக்கூடம் அங்கே இருந்ததும், அதில் நான் ஓர் ஆசிரியனாக வேலை பார்க்கப் போனதும் என் வாழ்வில் மிகவும் சாதாரணமான இருப்பங்கள்தான். போய்ச் சேர்ந்த புதிதில் இரண்டு மூன்று நாட்களுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டு விட்டாற் போல உணர்ந்தேன். அந்தக் கிராமத்தின் செம்மண் படுகை நிலத்தில் வயல் வயலாக ரோஜாப் பூக்கள் பூத்துக் கொட்டின.



காலையில் ஐந்து — ஐந்தரை மணிக்கு எழுந்து ஆற்றங் கரையோரமாக உலாவப் போனால் ஆற்றின் இரு கரையிலும் பூமியின் கன்னங்கள் சிவந்திருப்பது போல் ரோஜா வயல்கள் பூத்துச் சொரிந்திருக்கும் காட்சியை ரசிப்பது என்னுடைய வழக்கமான பொழுது போக்குகளில் ஒன்றாகிவிட்டது. அந்தக் குளிர்ந்த வைகறைநேரமும்ரோஜாப்பூக்களின்வாசனையும்... அப்பப்பா!...அந்தச் சூழ்நிலையில் சிந்தித்துச் சிந்தித்துத்தான் நான் முழுமையான கவிஞனானேன். அந்த ஊரிலிருந்து பக்கத்து நகரங்களுக்கு ஏற்றுமதியான ஒரே ஒரு பொருள் ரோஜாப் பூத்தான்! அந்த மண்ணுக்கும் ரோஜாப் பூவுக்கும் அப்படி ஒரு ராசி. அந்தக் கிராமத்தில் ரோஜாப் பூக்களுக்கு அடுத்தபடி சுவாரஸ்யமான பொருள் என்னைப் பொறுத்தவரை நான் வாடிக்கைச் சாப்பாடு வைத்துக் கொண்டிருக்கும் தேவகி அம்மாளின் மகள் பங்கஜம்தான். பங்கஜத்தைப் போல் கலகலப்பாகப் பழகும் துறுதுறுப்பான வயசுப் பெண் ஒருத்தியை இந்த மாதிரி கிராமங்களில் சாதாரணமாகக் காண முடியாது. புத்தகங்களையும், கொள்கைகளையும் விமரிசனம் செய்வதனாலேயே பட்டணக்கரை மனிதர்களால் திருப்தி கொண்டுவிட முடியும். கிராமத்து மனிதர்களோ ஆட்களை விமர்சனம் செய்யாமல் திருப்தி அடையவே மாட்டார்கள். நான் அந்தக் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்த பத்துப் பதினைந்து நாட்களுக்கெல்லாம் என்னைப் பற்றிய முழுமையான விமரிசனம் வெளி வந்து விட்டது.

''புது வாத்தியார் கவி எழுதுகிறவர். காலையில் எழுந்திருந்ததும் ரோஜா வயல்களைச் சுற்றிச் சுற்றி வருகிறார். பள்ளிக்கூடம் விட்டதும் தேவகி அம்மாள் மகள் பங்கஜத்துடன் திண்ணையிலே உட்கார்ந்து தாயக் கட்டமோ, பதினெட்டாம் புள்ளியோ, சோழியோ பல்லாங்குழியோ ஏது வேண்டுமானாலும் விளையாடுகிறார். சில தினங்களில் வயல் வரப்புக்களில் எங்காவது ஒரு மூலையில் காகிதமும் பேனாவுமாக உட்கார்ந்து ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.....''

அந்தச் சிறிய கிராமத்தில் சாப்பாட்டு ஹோட்டல் என்று எதுவும் கிடையாது. 'பணம் கொடுத்து ஏற்பாடு செய்தால் மாதச் சாப்பாட்டுக்கு மொத்தமாகத் தேவகி அம்மாள் ஒப்புக் கொள்ளலாம் என்பதும், தங்கி வசிப்பதற்கு அந்த அம்மாளுடைய வீட்டு மாடி அறையையே கேட்கலாம் என்பதும் நான் வேலை பார்க்கப் போயிருந்த பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியரால் எனக்குக் கூறப்பட்ட யோசனைகள். அந்த யோசனையின்படியேதான் தேவகி அம்மாளுடைய வீட்டுக்குப் போய்ச் சேர்ந்திருந்தேன் நான். வெங்கோவிலின் வடக்குப் பக்கமாக—அதோ—அந்தத் தென்னை மரங்களின் தோகைகளுக்கு நடுவே மறைவில் நனைந்து, பச்சைப் பாசி பிடித்த கட்டிடம் ஒன்று தெரிகிறதே, அதுதான் தேவகி அம்மாளின் வீடு. பங்கஜம் தேவகி அம்மாளின் மகள். தேவகி அம்மாளைப் பற்றி அந்த ஊரில் பலவிதமான வதந்திகள். அவள் சிறு வயதில் தன் கணவனை அடித்துத் துரத்திவிட்டாள் என்று சிலரும் கணவன் அவளை விட்டு விட்டு யாரோ நாடகக்காரி ஒருத்தியோடு ஓடிப்போய்க் குடியும் கூத்துமாகச் சீரழிந்து மண்டையைப் போட்டுவிட்டான் என்று சிலரும் கணவன் விட்டுப் போன சில மாதங்களுக்குப் பிறகு பங்கஜம் அந்த அம்மாளுக்கு மகளாகப் பிறந்தாள் என்பதால் அவள் மேல் சந்தேகப்பட்டு, அவளைக் கெட்டவளாக நினைக்கிற சிலருமாக — அந்த ஊரில் நிரம்பி இருந்தார்கள். எனக்கு அந்த

அம்மாள் வீட்டில் சாப்பாடும் தங்கலும் வைத்துக்கொள்வதற்கு யோசனை கூறிய தலைமை ஆசிரியரே குறிப்பாக இந்த வசதிகளைப் பற்றியும் என்னிடம் சொல்லியிருந்தார்.

"நாலு பேர் நாலு விதமாகப் பேசிக்கொள்வார்கள். ஆனாலும் அந்த அம்மாளைத் தவிர உங்களிடம் பணம் வாங்கிக் கொண்டு நல்லபடியாக உங்களுக்குச் சாப்பாடு போட இந்த ஊர் மிட்டா — மிராசுகளில் — யாரும் தயாராயிருக்க மாட்டார்கள். அத்தனை பேரும் வறட்டுக் கௌரவம் பிடித்த ஆட்கள்" என்று அவர் கூறியிருந்தார். எனக்கென்னவோ தேவகி அம்மாளைப் பார்த்த முதல்நாழியிலிருந்து அந்த அம்மாள் மேல் அளவு கடந்த அநுதாபந்தான் ஏற்பட்டிருந்தது. இந்தத் தேசத்துப் பெண்களில் பெரும்பாலோர் தங்கள் மேல் அநியாயமாகச் சுமத்தப்படுகிற அபவாதங்களை உரத்த குரலில் மறுக்கவும் பயப்படுகிற அளவுக்கு மென்மையானவர்கள். அந்த மென்மையே வம்புக்காரர்களுக்கு வசதியாகி விடுகிறது. பங்கஜத்தைப் போல் பேரழகியான பெண் ஒருத்திக்குத் தாயாயிருக்கிறவள் எந்தக் காரணத்தைக் கொண்டும் கெட்டவளாயிருக்க முடியும் என்று நான் நம்பத் தயாராயில்லை. அந்த ஊருக்கு வந்த புதிதில் அந்த ஊரின் ரோஜா வயல்களையும், பங்கஜத்தின் அழகையும் இணைத்துக் 'காட்டு ரோஜா' என்ற தலைப்பில் ஒரு கவிதை எழுதியிருந்தேன் நான். அந்தப் பாடலில் ஒவ்வொரு கவிதைப் பகுதியின் முடிவிலும் 'ரோஜாப் பூக்கள் எங்கு அதிகமாகப் பூத்திருக்கின்றனவோ — அங்கு — உன் அழகும் மலர்ந்திருக்கிறது' என்று பொருள் படும் வரி அமைந்திருந்தது. பங்கஜத்தின் அழகு பரிபூரணமாக விகசிக்கும் நேரம் எது தெரியுமா?



சோழி விளையாடிக் கொண்டிருக்கும்போது — உள்ளங் கையினால் சோழிகளை அள்ளி அப்படி அள்ளிய சோழிகளை மேலே வீசிப் புறங்கையில் ஏந்தி, மெல்லிய நீண்ட பொன் நிறத்து விரல்களை மெதுவாக நெளியச் செய்து




"எனக்குக் கொடுத்த சீடைகளை நான் இப்படிப் பண்ணிண்டுட்டேன். அதைக் கடிக்கப் பிராணனை விடறதை; நாலு ராம நாமாவானும் சொல்லலாம்!"

தளர்த்தி ஒவ்வொரு சோழியாகத் தரையில் உதிர்த்து, அப்படி உதிர்ந்த சோழிகள் எல்லாமே ஒரேவிதமாகக் கவிழ்ந்து எட்டு விழுந்துவிட்டால் "மாமா! எட்டு விழுந்து விட்டதே" என்று கைகொட்டிச் சிரிப்பாளே பங்கஜம்;—அப்படிக் கைகொட்டிச் சிரிக்கும்போது பங்கஜத்தைப் பார்க்க வேண்டும். பங்கஜத்துக்குத் தனியாக ஓர் அலங்காரமும் கிடையாது. ஆனால் அவளே ஓர் அலங்காரம்தான். கழுத்தில் அந்தக் கழுத்தின் பொன் வண்ணத்தை எடுத்துக் காட்டுகிறாற் போல் முடிக்க முடிச்சாகப் போட்டு இறுக்கிய ஒரு கறுப்புப் பட்டுக் கயிறு. கைகளில் இரண்டும் இரண்டும் நாலு கரி வளையல்கள். பங்கஜம் என்ற பெயரை நிரூபிப்பது போல் தாமரையாக மலர்ந்த முகம். தலை கொள்ளாமல் கார்காலத்து மழையைப் போல் செழித்து இறங்கிய கூந்தல். இலட்சியகரமான அழகிய கண்கள்: பார்க்கிற கண்களில் அவள் நிச்சயமாக மங்கலமானதோர் ஞாபகமாகத் தங்குவாள் என்பதைப் பற்றிச் சந்தேகமே இல்லாத பேரழகு அவளிடம் வாய்த்திருந்தது. பங்கஜம் உள்ளூர்ப் பள்ளிக்கூடத்தில் எட்டாவது வகுப்பு வரை படித்திருந்தாள். அவளுடைய கையெழுத்து முத்து முத்தாகப் பெரிதாய் இருக்கும். அல்லது இதையே வேறு விதமாகச் சொன்னால் அவளிடம் முத்து முத்தாக இருக்கும் அம்சங்கள் இரண்டு. அதில் ஒன்று அவளுடைய சிரிப்பு: மற்றொன்று அவளுடைய கையெழுத்து. அவள் ஆளைக் கிறங்க வைத்துவிடுகிற சமயம் எது தெரியுமா? 'போங்க மாமா! நீங்க.... சும்மா.... புளுகறீங்க' என்று என் மேல் எதைப் பற்றியாவது குற்றம் சாட்டிவிட்டுத் தலையை ஒரு புறமாகச் சாய்த்துக் கண்களை வெட்டுகிறபோல் மூடித் திறப்பாள். அந்தச் சமயத்தில் அப்படியே அவள் முகத்தைப் பிடித்து அருகில் இழுத்துக்கொள்ள வேண்டும் போல் இருக்கும். என்னுடைய 'காட்டு ரோஜா' என்ற கவிதை பத்திரிகையில் பிரசுரமாகி, அந்தப் பத்திரிகை தபாலில் கிராமத்தைத் தேடி என் கைக்கு வந்து சேர்ந்த தினத்தன்று சாயங்காலம் சோழி விளையாடிக் கொண்டிருக்கும்போது பங்கஜத்திடம் அதைப் பற்றிச் சொன்னேன் நான்:

"பங்கஜம்! உன்னையும் இந்த ஊர் ரோஜாப் பூக்களையும் பற்றி நான் ஒரு பாட்டு எழுதியிருக்கிறேன்."

"போங்க மாமா...! நீங்க... சும்மா...? புளுகறீங்க...."

"நானா புளுகறேன்...? இதோ பார்! பத்திரிகையில் அச்சாகி வெளி வந்திருக்கிறதே...?" என்று பத்திரிகையைப் பிரித்து அந்தப் பா

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்கு அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-2 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ், பீசாம் (இந்தியா) பிரை. லிட்., பீசாம் ஹவுஸ், மாஹிம், பம்பாய்—16.




**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது




# Silvikrin

**சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி**

SP/1/P/7/63

டைப் பங்கஜத்தினிடம் காட்டினேன். அதைப் படித்துவிட்டு அவள் சொல்லிய வாக்கியம் மிகவும் குழந்தைத்தனமாக இருந்தது. ஆனால் அதில் அர்த்தம் அடங்கி யிருந்தது.

''மாமா!... நீங்க... ரொம்பப் பெரிய ஆளா யிருப்பீங்க போலிருக்கே....''

இதுவும் ஒருவிதமான பாராட்டுத்தான். ஆனால் உரிமையும் உறவும் நெருங்கிய பாராட்டு. பங்கஜத்திற்கு ஊர்ப் பெண்கள் வைத்திருந்த பேர் மிகவும் முரட்டுத்தனமானது. அவள் எந்த ஆண் பிள்ளையிடமும் பயப்படாமல் பேசுகிறாள் என்பதனாலும், கண்ணைக் கவரும்படியான அழகுடன் இருக்கிறாள் என்பதனாலும் 'இலங்கிணி' — 'சூர்ப்பனகை' என்றெல்லாம் பேர் சூட்டியிருந்தார்கள். ஆனால் இதே பங்கஜத்திற்குள் வாய்த்திருக்கிற இதயம் மகா காவியங்களில் வருகிற பெண்களின் இதயங்களை விடப் பெருமை வாய்ந்தது என்பதை நான் ஒரு சமயம் நன்றாகப் புரிந்துகொண்டேன்.

## கவிதா யோகம்



ங்கஜம் என்னிடம் பயப்படாமல் எல்லாவிதமான கேள்விகளையும் கேட்பாள். தன்னைப்போல் ஒரு பெண் என்னைப் போல் ஓர் ஆணிடம் கேட்கக் கூடாத கேள்விகளை யெல்லாம் கூடக் கேட்பாள். பதில் சொல்வதற்குக் கூசி நான் தட்டுத் தடுமாறும் படியான கேள்விகளை எல்லாம் கூடக் கூசாமல் கேட்டு விடுவாள். ஒரு சமயம் என்னுடைய 'மனோரஞ்சித மலர்கள்' என்ற கவிதைத் தொகுதியைப் படிக்கச் சொல்லி அவளிடம் கொடுத்திருந்தேன். அவள் அதைப் படித்து முடித்துவிட்டுச் சாயங்காலம் நான் பள்ளியிலிருந்து வீடு திரும்பி வரும் என்னிடம் சில கேள்விகளைக் கேட்டாள்:

''மாமா! உங்களுக்கு முப்பது — முப்பத்தஞ்சு வயசு இருக்குமா இல்லியா?''

''இருக்கும்! வயசைப் பற்றி என்ன விசாரணை வந்தது இப்போது?''

''நீங்க ஏன் இன்னும் கலியாணம் பண்ணிக்கவே இல்லே?''

சில விநாடிகள் பதில் பேச முடியாமல் அயர்ந்து போனேன் நான். அப்புறம் ஒருவிதமாகச் சமாளித்துக் கொண்டு வேடிக்கையாகப் பதில் சொல்வது போல அவளுக்குப் பதில் சொன்னேன். நான் சொல்லிய பதிலைக் கேட்டு அவள் சிரித்தாள்.

''பண்ணிக்கணும்! ஆனால் உன்னை மாதிரி ரொம்ப அழகாக ஒரு பெண் கிடைக்கிற வரை கலியாணமே வேண்டாம் என்று சபதம் செய்திருக்கிறேன்....''

''போங்க மாமா...நீங்க...சும்மா புளுகறீங்க! நான் நிஜமாகவே அழகுன்னு சொல்றீங்க? அழகா அலங்காரம் பண்ணிக்க எனக்கு என்ன இருக்கு? காதுலே போட்டுக்க ஜிமிக்கி இல்லே. கையிலே போட்டுக்கத் தங்க வளையில்லே.....தலைக்குத் தடவிக்கொள்ள நல்லபடி ஒரு கை தேங்காய் எண்ணெய் கூட இந்த வீட்டிலே கிடையாது....''

''இதெல்லாம் இல்லாமலே நீ அழகா யிருக்கே பங்கஜம்...''

''நீங்க சும்மா பொய் சொல்றீங்க.... நான் நிஜமாவே அழகுன்னு சினிமாவிலே சேர முடியுமா மாமா?''

அந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணின் பேதை மனத்தில் உறங்கிக் கிடக்கிற அற்பமான ஆசையை நான் அலட்சியம் செய்ய விரும்பவில்லை. அதனால் உற்சாகமாகவே அவளுக்குப் பதில் சொன்னேன்.

''உன்னைப் போல இத்தனை அழகு இப்போது சினிமாவிலே இருக்கிற பெண்களுக்குக் கூட இல்லே பங்கஜம்! அது பெரிய மாய உலகம்....''

இதைக் கேட்டுச் சிறிது நேரம் பேசாமல் இருந்து விட்டுப் பங்கஜம் என்னை வேறொரு கேள்வி கேட்டாள்:

''மாமா! நீங்க கொடுத்த பாட்டுப் புஸ்தகத்திலே 'மலர்ச் சிறை'ன்னு ஒரு பாட்டு இருக்கே, அந்தப் பாட்டுலே,

''நெஞ்ச மலரினைத் தொடுத்தோர்
நிர்மல மாலை சமைத்தான் — அந்த
நித்திய மாலையைப் படைத்தென்
நெஞ்சினைப் பிணைத்தாள்''

என்று பாடியிருக்கிறீர்களே....? அதுக்கென்ன அர்த்தம்?''

இப்போதும் பங்கஜத்துக்குப் பதில் சொல்லத் திணறினேன் நான்.

''சொல்லுங்க .... மாமா .... அதுக்கு என்ன அர்த்தம்?''

''தன்னுடைய இதயத்தையே பூவாக வைத்துக் கோத்து அவள் ஒரு பரிசுத்தமான மாலையைத் தொடுத்தாள். அழிவில்லாத அந்த மாலையைச் சூட்டி என் மனத்தைச் சிறைப்பிடித்தாள்' என்று அர்த்தம்'' என்பதாகப் பள்ளிக்கூடத்தில் பதவுரை, பொழிப்புரை சொல்லிக் கொடுப்பது போல் சொன்னேன். பங்கஜம் அவ்வளவில் என்னை விடாமல் மேலும் கேள்வியைத் தொடர்ந்தாள்:

''அது யார் மாமா ... அந்த அவள்?''

''இப்படியெல்லாம் குறும்புத்தனமாகக் கேட்கப்படாது! பாட்டிலே அப்படித்தான் வரும்...''

''வரட்டும்! ஆனா.... ஒருத்தரும் இல்லாமலே கும்மவாச்சும் அப்படி வந்துடுமா? உங்களுக்கோ கலியாணம் ஆகலே.... அல்லது சினிமாக்களிலே வருகிற மாதிரி நீங்க யாரையாவது காதலிச்சிருக்கணும்....''

''நீ நிறையச் சினிமா எல்லாம் பார்க்கிறே என்று தெரிகிறது....''

''ஒன்று விடாமல் பார்த்து விடுவேன் மாமா! சிவன் கோவிலுக்குப் பின்னாலே 'டூரிங் கொட்டகை' ஒன்று போன வருடம் பூரா இருந்தது. இந்த வருடமும் அடுத்த மாதத்திலே யிருந்து 'டூரிங் சினிமா' வரப் போறது!



அது சரி! எப்படியோ கேள்வி கேட்டுப் பேச்சை மாத்தப் பார்க்கறீங்களே....? 'நித்தியமாலையைப் படைத்தென் நெஞ்சினைப் பிணைத்தாள்' என்று பாடி யிருக்கீங்களே....அது யாரு?''

''பங்கஜம்! நீ ஒரு சுத்த அசடாயிருக்கியே! பாட்டுலே பாடணும் என்றால் நிஜமாகவே அப்படி யாராவது இருக்கணும் என்று அவசியமில்லே. அதெல்லாம் கற்பனை!''

நான் இவ்வளவு உறுதியாகச் சொல்லிய பின்பு தான் பங்கஜம் கேள்வி கேட்பதை நிறுத்தினாள். இன்னொரு நாள் திடீரென்று இருந்தாற் போலிருந்து, ''மாமா! நீங்க அந்தக் 'காட்டு ரோஜா' ங்கிற கவிதையிலே, ''ரோஜாப் பூக்கள் எங்கு அதிகமாகப் பூத்திருக்கின்றனவோ அங்கு உன் அழகும் மலர்ந்திருக்கிறது' என்கிற அர்த்தத் திலே பாடியிருக்கிறீங்களே; அது நிச்சயமா என்னைப் பற்றித்தானே? இல்லே....? அதுவும் கற்பனை தானோ?'' என்று என்னைக் கேட்டாள் பங்கஜம். அவள் எந்த விதமான உள் நோக்கத் தோடு இதைக் கேட்கிறாள் என்று புரிந்துகொள்ள முடியாமல் சிறிது நேரம் திகைத்தபின், ''அதைப் பாடுவதற்கு நீ தூண்டுதலாக இருந்தாய்! ஆனால் அதில் வருகிற மற்ற விஷயங்கள் எல்லாம் கற் பனை'' என்றேன்.

''பூக்கள் மலர்ந்த பெருங் காட்டில்
புன்னகை பூக்கும் முகங் காட்டி—நான்
பாக்கள் புனையும் நயம் கூட்டிப்
பாதச் சிலம்பொலி பாடிவர — உன்
காதிற் குண்டலம் ஆடிவரக்
காட்டிற் பூத்த கவிப் பொருளே...''

என்று பாடியிருக்கீங்களே.... அது?''

''அதுவும் கற்பனை தான்.''

இதைக் கேட்டுப் பங்கஜத்தின் கண்களில் நீர் கலங்கி விட்டது. அவளுடைய ரோஜா மொட்டு உதடுகள் துடித்தன. அவள் பெரிதாக அழுது விடுவாள் போல் இருந்தது...... 'பெண் பிள் ளையே! இந்தப் பேதை வயசிலேயே உன் இத



''ஹலோ! ஆறு மாசமா? ரொம்ப தேங்ஸ்...இதே மாதிரி வருடா வருடம் போவஸ் விஷயத்தை முன் கூட்டியே உங்க 'ஓர்க்கர்ஸ் ஒய்ப்ஸ்'கிட்டே சொல்லிடுங்க.''

யத்தை ஆழம் காண முடியாத சமுத்திரமாகப் படைத்து வைத்திருக்கிற விந்தையே விந்தை' என்று எனக்குள் வியந்து கொண்டே அவளைச் சமாதானப்படுத்தினேன் நான்:

''அதுக்கில்லே பங்கஜம்! 'பாதச் சிலம்பொலி—காதில் குண்டலம்' — என்றெல்லாம் பாட்டில் பாடி யிருக்கிறது. நீயோ கால்களிலே சிலம்பு இல்லாம லும், காதிலே குண்டலங்கள் இல்லாமலும், இயற்கையாகவே பிரமாத அழகாயிருக்கே !....

அதனாலேதான் அது கற்பனை'' என்று விளக்கிச் சொன்னேனோ இல்லையோ பங்கஜம் சிரித்து விட் டாள். ஒரு பக்குவமான இரசிகனின் கண்களோடு ஒவ்வொரு நாளும் அவளைக் கவனித்துக் கொண் டிருந்தேன் நான்.

இது நடந்து இரண்டு மூன்று தினங்களுக்குப் பின் ஒரு நாள் சாயங்காலம் சோழி விளையாடிக் கொண்டிருக்கும்போது நடு விளையாட்டில் ஆட் டத்தை நிறுத்தி விட்டு, ''மாமா! நான் என் மனசிலே ஒன்று நினைச்சிருக்கேன். அது பலிக் குமா, இல்லையா என்று தெரியறதுக்காக இப்போ கண்ணை மூடிக் கொண்டு சோழியை உருட்டறேன். 'எட்டு' விழுகிறதா — இல்லையா என்று எனக்காக நீங்க பாருங்க....'' என்பதாகச் சொல்லிக் கண் களை மூடிக் கொண்டு சோழிகளை உருட்டினாள் பங்கஜம். எட்டு விழுவதற்கு ஒரு சோழி மட்டும் கவிழ வில்லை. அவள் என்ன நினைத்துக் கொண்டு—எந்தப் பெரிய நம்பிக்கையை மனத்தில் உருவாக் கிக்கொண்டு — இதைச் செய்தாளோ? வீணாக அவளுடைய நம்பிக்கை கெட வேண்டாமென்று அந்த ஒரு சோழியை நானாகவே ஓசைப்படாமல் என் கையால் கவிழ்த்து விட்டு, ''பங்கஜம்! உனக்குத்தான் யோகம்! எட்டு விழுந்து விட்டது'' என்று உற்சாகமாகக் குரல் கொடுத்தேன்; அவள் கண்களைத் திறந்து பார்த்து அப்படியே நம்பி விட்டாள். 'போங்க மாமா! நீங்க....; சும்மா புளுகறீங்க...' என்ற அவளுடைய வழக்க மான மறுப்புக்கூட இல்லை.

''எட்டு விழுந்து விட்டது மாமா! எங்கோ ஒரு மூலையில் நான் பண்ணின புண்ணியமும் கொஞ் சம் இருக்கு'' என்று அவள் மகிழ்ச்சி நிறைந்த குரலில் கூறினாள். அந்த மகிழ்ச்சியை அப்போது நான் பரிபூரணமான திருப்தி யோடு இரசித்தேன்.

''அப்படி என்ன பெரிய காரி யம் பங்கஜம்? எனக்குக் கூடத் தெரியக் கூடாத இரகசி யமோ?'' என்று நான் சிரித்துக் கொண்டே வினவிய போது



# இருமலை அகற்றச்

சாப்பிடுங்கள்

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்

—வெறும் மருந்துமட்டுமல்ல, நம்பிக்கைக்குப் பாத்திரமான டானிக்குமாகும்!




WCRY.3 TAM.

வாழையடி வாழையாகக் குடும்பத்தினர் நல்லதென நம்பிக்கைகொள்ளச் செய்யும் பல நல்ல காரணங்களுள் நாலு இதோ.

1. இருமலை இமைப்பொழுதில் கச்சிதமாய்க் கரைக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

2. கபம் அறுத்து, நுரையீரலைச் சுத்தப் படுத்தும் கிரியோஸோட், க்வயகால் அடங்கியது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்.

3. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நோய் நிவாரணியும், நம்பிக்கைக்குகந்த டானிக்கும் ஆகும். நோயை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு உதவுகிறது.

4. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் பசியைத் தூண்டி, ஜீரண சக்தியை வளர்ப்பதுடன், ரத்தத்தைச் சுத்தப்படுத்தி, தாதுப் பொருள் நஷ்டத்துக்கு ஈடுசெய்கிறது.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் | சிவப்பு லேபில்



வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்டபொறுப்புடன் யு. எஸ். ஏயில் இணைக்கப்பெற்றது )

அவன் சரியாகப் பதில் சொல்லாமல் மழுப்பி விட்டான். இது நிகழ்ந்த மறு மாதத்திலே எதிர்பாராத விதமாக ஒரு நாள் நடுப் பகல் தபாலில் வந்த ஒரு பதினைந்து காசுக் கடித உறை என் வாழ்க்கையையே கலைமாக மாற்றி விட்டது. என்னைத் தேடி வந்த அதிர்ஷ்டம் அந்த ஊரை விட்டே நான் புறப்படும்படி செய்து விட்டது. இலட்சிய நோக்கமும் நல்லதை எங்கிருந்தாலும் தேடிக் கண்டுபிடித்துப் பயன்படுத்தக் கூடிய தாராள மனப்பான்மையும் உள்ள சினிமா டைரக்டர் ஒருவர் என்னுடைய 'மனோரஞ்சித மலர்கள்' என்ற கவிதைத் தொகுதியைப் படித்து விட்டுத் தம்முடைய படங்களுக்கு எல்லாம் நான் பாடல்கள் எழுதும் பொறுப்பை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று அன்புடனே கோரியிருந்தார்.

## புகழ் மயக்கம்


ன் அந்தக் குக்கிராமத்தை விட்டுப் புறப்பட வேண்டியதாயிற்று. காரியங்கள் மிக வேகமாக நடந்தன. என்னுடைய நலனையும், எதிர்கால முன்னேற்றத்தையும் மனத்தில் குறிக்கொண்டு, அந்த டைரக்டர் + கதாசிரியர் + தயாரிப்பாளர் — மூன்றுமாகிய இலட்சியவாதிக்குச் சில நிபந்தனைகளை எழுதி அந்த நிபந்தனைகளுக்கு இணங்கி—'அதன்படி என்னிடம் திரைப்பாடல்கள் பெற்றுக்கொள்ளச் சம்மதமா?' என்று கேட்டுக் கடிதம் அனுப்பினேன். 'பூர்ண சம்மதம்! உடனே புறப்பட்டு வாருங்கள்' என்று பதில் கடிதம் வந்தது அவரிடமிருந்து. பள்ளிக்கூடத்தில் தலைமையாசிரியரிடம் சொல்லி இராஜிநாமாக் கடிதத்தைக் கொடுத்தபோது, "எங்கேயாவது நன்றாயிருக்க வேண்டியதுதானே? எப்போதாவது நீங்கள் அளவற்ற பேரும் புகழும் அடைந்து தேசமெல்லாம் உங்களைக் கொண்டாடினால் இந்தக் குக்கிராமத்திலே நீங்கள் சிறிது காலம் இருந்திருப்பதை நினைத்து நாங்களும் பெருமைப்பட முடியும்" என்று அவர் சந்தோஷமாக விடையளித்தார். நான் கிராமத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன்தினம் பள்ளிக்கூடத்து ஆசிரியர்களும், தலைமை ஆசிரியரும் எனக்கு ஒரு பிரிவுபசார விருந்தும் கொடுத்தாயிற்று. முதல் நாள் மாலையே தேவகியம்மாளிடம் நான் எனது மாதாந்திரச் சாப்பாட்டுக் கணக்கு வழக்கையும் தீர்த்துப் பணம் கொடுத்து விட்டேன். அப்போது பங்கஜமும் தன்னுடைய இலட்சணமான கண்களில் நீர் கலங்க அம்மாவின் அருகில் நின்று கொண்டிருந்தாள்.

"அடி அசடே! நீ ஏதுக்குடி அழறே? மாமா.... இந்தக் குக்கிராமத்திலே மாட்டிக்கொண்டு முன்னுக்கு வர வழியில்லாமல் போகாதபடி இந்த மட்டிலாவது தெய்வம் கண் திறந்ததே என்று இருப்பியோ" என்று தன் மகள் கண் கலங்குவதைப் பார்த்துச் செல்லமாகக் கடிந்து கொண்டாள் தேவகி அம்மாள். அந்த அம்மாள் சமையலறைப் பக்கம் நகர்ந்ததும் நான் மாடிக்கு வந்தேன். நிறைய வேலை இருந்தது. பயணத்துக்குத் தயாராக வேண்டும்.

நாளைக்குப் பகல் இரண்டரை மணிக்கு ஏழு மைல் கட்டை வண்டியில் பயணம் போய் அப்புறம் இரயிலேற வேண்டும். புத்தகங்களையும், துணிமணிகளையும் பெட்டியில் அடுக்கத் தொடங்கியபோது அறை வாசலில் நிழல் தட்டியது. யாரோ வந்து நிற்பது போல் உணர்ந்து நிமிர்ந்து திரும்பிப் பார்த்தால் பங்கஜம் நின்று கொண்டிருந்தாள். அவளுடைய முகத்திலும் கண்களிலும் அழுகை வெளிப்படாத மௌனமாய் அடங்கி நின்றது. அந்தப் பேதையின் அந்தரங்கம் தெரிந்திருந்தும் தெரியாததுபோல் புத்தகங்களை வேகமாக அடுக்கிக்கொண்டிருந்தேன் நான். 'பெண் பிள்ளையே! இந்தப் பேதை வயதில் உன் இதயத்தை ஆழங்காண முடியாத சமுத்திரமாகப் படைத்து வைத்திருக்கிற வித்தையே வித்தை' என்று என் மனம் எண்ணியது. பெட்டியில் நான் கடைசியாக வைப்பதற்கிருந்த புத்தகத்தை ஒரு நிமிஷம் ஏதோ நினைத்துத் தயங்கியவனாக அப்படியே வெளியில் திரும்ப எடுத்து முதல் பக்கத்தைப் பிரித்து, "ரோஜாப் பூக்கள் எங்கு அதிகமாகப் பூத்திருக்கின்றனவோ அங்கு உன் அழகும் மலர்ந்திருக்கிறது" என்று பேனாவினால் எழுதிக் கையொப்பமிட்டேன். என்னிடம் அப்போது கைவசமிருந்த ஒரே பிரதியான அந்த 'மனோரஞ்சித மலர்களை' நான் மனப்பூர்வமான பிரியத்தோடு பங்கஜத்துக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டேன். அவளுக்கு அப்போது என் மேலிருந்த கோபத்தில் அதை வாங்கிக் கொள்ளவே மறுத்து விடுவாளோ என்று கூட நான் பயந்தேன். ஆனால் அவள் அப்படிச் செய்யவில்லை. தயங்கியபடியே அதை வாங்கிக் கொண்டாள். சிறிது நேரம் மௌனமாயிருந்த பின் மெல்ல ஒவ்வொரு வார்த்தையாக ஞாபகப்படுத்திக் கொண்டு கூட்டிச் சேர்த்துப் பேசுகிறாற் போல், இழுத்து நிறுத்திப் பேசினாள்:

"ஒரேயடியா... ஊருக்குப் போறேளே இருக்கு.... அம்மாவிடம் சாப்பாட்டுக் கணக்கு வழக்கெல்லாம் கூடத் தீர்த்தாச்சு. ஆனா..... நம்ம கணக்கு... இன்னும் தீரலே...."

"அதென்னது உன் கணக்கு....?"

"அதுக்குள்ளே மறந்தே போயாச்சா? சோழி விளையாட்டிலே தினம் தினம் நிறையத் தோற்றுப் போயிருக்கேளே... மாமா? ஞாபகமில்லையா?"

"ஐயோ! அது மட்டும் நடக்காத காரியம் பங்கஜம்! உன்னோடு விளையாடி ஜயிக்கிறது இந்த யுகத்திலே முடியாத காரியம்... அதனாலே உன் கணக்கை மட்டும் தீர்க்க வழி இல்லே...."

"தீர்க்கத்தான் முடியாது! கணக்குப் பாக்கி இருக்குன்னு மனசிலே ஞாபகமாவது இருக்குமோ இல்லையோ?"



''பேஷா இருக்கும்! பங்கஜத்தை மறக்க முடியுமா?'' என்று சொல்லிவிட்டு அவளைக் கொஞ்சம் குஷிப்படுத்தி-சிரிக்க வைக்கவேண்டு மென்பதற்காக என்னிடமிருந்த 'ஆட்டோகி ராப்பை' நீட்டி, ''இதில் நீ ஏதாவது எழுதிக் கையெழுத்துப் போடேன்'' என்றேன்.

''நானு? நான் என்னத்தைப் பிரமாதமா எழுதிடப் போறேன் மாமா? நீங்கதான் பெரிய கவிஞர்!... உங்ககிட்ட மற்றவர்கள் இப்படி நோட்டை நீட்டிக் கையெழுத்துக்குத் தொங்க ணும்.... நான் யாரு? வெறும் பட்டிக்காடு...'' என்று வாயினால் மறுத்துக் கொண்டே கையினால் ஆட்டோகிராப்பை வாங்கி நிதானமாகக் கீழே உட்கார்ந்து கொண்டு பேனாவையும் என்னிடமே இரவல் கேட்டு அவள் அதில் ஏதோ எழுதத் தொடங்கி விட்டாள். அரை மணி நேரத்துக் குப் பின்புதான் அவள் என்னிடம் 'ஆட்டோ கிராப்பை'யும் பேனாவையும் திருப்பிக் கொடுத் தாள். 'என்ன எழுதி யிருக்கிறாள் என்று அறிந்து கொள்ளும் ஆவலோடு நான் 'ஆட்டோகிராப்பை' பிரித்துப் பார்த்தேன். முத்து முத்தாக அச்சுக் குண்டான பெரிய எழுத்துக்களில் தெளிவாகக் கீழ்க் கண்டபடி வரைந்திருந்தாள் பங்கஜம்.

'மாமா நன்றாகக் கவி எழுதுவார். எங்க ஊரில் வயல்லேதான் ரோஜாப் பூ பூக்கிறது. ஆனா இந்த மாமாவோ இவரோட மனசிலேயே ரோஜாப் பூவைப் பூக்க வைக்கிறார். இவரோட 'காட்டு ரோஜா' என்ற பாட்டு எனக்கு ரொம்பப் பிடிச் சிருக்கு. இந்த மாமா அரை மணி நேரத்திலே நூறு பாட்டுக்கூட எழுதிடுவார். ஆனா ஆறு நாளானாலும் சோழி விளையாட்டுலே ஒரு எட்டுப் போட மட்டும் வராது. மாமா எங்க ஊரை விட்டே போறார். எனக்கு அழுகை அழுகையா வருது. அவருக்குப் பேரும் புக ழும் நெறைய வரணும்னு வேண்டிக்கிறேன்.

இப்படிக்குப் பங்கஜம்'



என்று அதில் எழுதியிருந்தாள். அவள் எழுதி யிருந்தது எனக்கு மிகவும் பிடித்தது. அதை



''பருமனைக் குறைக்க இங்கு யாரோ ஒரு வைத்தியர் இருக்கிறாராமே!''

''ஆமாம், நான்தான் அந்த டாக்டர்.''

''நீங்களா?''

''ஏன் திகைக்கிறீர்? ஊரார் பருமனைக் குறைப்பதற்குத்தான் எனக்கு நேரம் சரியா இருக்கு. நான் என்ன செய்வேன்?''

இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பப் படித்த பின்பே பெட்டியில் வைத்தேன் நான். கடைசி யாகப் பங்கஜமும் நானும் அன்று சாயங்காலம் சிறிது நேரம் திண்ணையில் சோழி விளையாடி னோம். அன்றும் எனக்குச் சரியாக எட்டுப்போட வரவில்லை.

மறு நாள் காலை கடைசி முறையாக அந்த ஊரின் ரோஜா வயல்களிடையே ஆசை தீர உலாவிவிட்டு நான் வீடு திரும்பியபோது வாசலில் தயாராகக் காத்திருந்த பங்கஜம்,

''மாமா! எனக்காக ஒரு நிமிஷம் என்னோட மாடிக்கு வர முடியுமா?'' என்றாள். அவளுடைய ஆவலையும் பரபரப்பையும் பார்த்து ஆச்சரியப் பட்டுக்கொண்டே அவளைப் பின்தொடர்ந்து மாடிக்குப் போனேன் நான்.

அறைக்குள் நுழைந்ததும் அவசர அவசரமாக நடுங்கும் கைகளால் ஒரு சிறிய ரோஜாப்பூ ஆரத்தை எடுத்து நான் யோசிக்கவும் அவகாசம் தராமல் என் கழுத்தில் போட்டுவிட்டாள் பங்கஜம். நான் திகைத்துப் போனேன்.

''காலம்பர நாலரை மணிக்கு இருட்டோட இருட்டா எழுந்திருந்து போய் ஆற்றங்கரை யோரத்து ரோஜா வயல்லே பூத் திருடிக்கொண்டு வந்து உங்களுக்காக நானே தொடுத்தது மாமா'' என்று வார்த்தைகளைச் சொல்லும்போது மேலே பேச முடியாமல் அவள் கோவென்று அழுது விடுவாள் போலிருந்தது. அவள் செய்த காரி யத்தைப் பார்த்து எனக்குப் பயம், வியப்பு, வேதனை எல்லாம் ஒருங்கே ஏற்பட்டன. ஆனால் அவளோ நிஷ்களங்கமான பேதை மனத்தோடு அந்த மாலையை என் கழுத்தில் போட்டுவிட்டு நின்றாள். அந்தப் பேதைமை நிறைந்த பக்தி யையும் நான் மனப்பூர்வமாக இரசித்தேன்.

''அந்த 'மலர்ச் சிறை'ங்கிற கவிதையிலே நீங்க பாடியிருக்கிற வரி ஞாபகமிருக்கா மாமா?

நெஞ்ச மலரினைத் தொடுத்தோர்
நிர்மல மாலை சமைத்தாள் — அந்த
நித்திய மாலையைப் படைத்தென்
நெஞ்சினைப் பிணித்தாள்''

என்று அவள் அந்தப் பாட்டையும் சொல்லி விட்டு அழுதபோது அவளுடைய மனத்தில் நான் யாராக வரிக்கப்பட்டு நிற்கிறேன் என்ற உண் மையைப் புரிந்து கொண்டு மெய் சிலிர்த்தேன்: 'நெஞ்சினைப் பிணைத்தாள்' என்பதுதான் என் பாட்டு. அவளோ இப்போது அதைத் தப்பாக மாற்றி 'நெஞ்சினைப் பிணித்தாள்' என்று இன்னும் அர்த்த நிறைவுள்ளதாகக் கூறினாள்: விடைபெறுகிற நேரத்தில் என்னால் அவள் மறக்க முடியாத ஞாபகமாகி விட்டாள்.

''மாமா! உங்களுக்குப் பேரும் புகழும் வந்த பின் எத்தனையோபேர் ரோஜாப்பூ மாலை போட வருவாங்க.....ஆனால்...இத்தனை கஷ்டப்பட்டு ஒரு

மாலையை உங்களுக்காக யாராலேயும் தொடுக்க முடியாது'' என்று சொல்லி அவள் கைகூப்பிய போது நானும் எதை நினைத்தோ கண் கலங்கி னேன். அவளுடைய அந்த ரோஜாப் பூமாலையை என் பெட்டியில் பத்திரமாக வைத்தேன். நாளைக் காலையில் பட்டினத்தில் போய் இறங்கும்போது அது வாடிவிடலாம். அதைப் பற்றிய ஞாபகமோ என்னுள்ளே என்றும் வாட முடியாதென்று எனக் குத் தோன்றியது. நான் என்னுடைய இரயிலில் பட்டினத்துக்கு வந்துகொண்டிருந்தபோது என் மனத்தில் பங்கஜமும், 'எங்க ஊரில் வயல்லே தான் ரோஜாப்பூப் பூக்கிறது. ஆனால் இந்த மாமா வுக்கோ இவரோட மனசிலேயே ரோஜாப் பூப் பூக்கிறது' என்று அவள் எழுதியிருந்த வாக்கியமும் நினைவு வந்து கொண்டேயிருந்தன.

அதன்பின் பட்டண வாசத்தில் வாழ்க்கை ஆரம்பமாகி ஓடிய வேகத்தைப் பற்றி இப் போது நினைத்தால்கூட மலைப்பாகத்தான் இருக் கிறது. நான் பாடல்கள் எழுதிய முதல் படத் துக்கு அபாரமான பணமும் புகழும் வந்தன. அவ்வளவுதான்! ஜனங்களும் படாதிபதிகளு மாகச் சேர்ந்து என்னை அதிர்ஷ்டச் சிறையில் பிடித்துத் தள்ளினார்கள்.

காலம் ஓடியது. — புகழையும் பணத்தையும் துரத்திக்கொண்டு நானும் ஓடினேன். என்னைத் துரத்திக் கொண்டு மனிதர்கள் கரகோஷத்தோடு ஓடிவந்தார்கள். மனத்தின் ஒரு மூலையில் மட்டும் நான் யாரையோ ஏமாற்றிவிட்டு வந்துவிட்ட தாக—யாரையோ நிரந்தரமாக அழவிட்டு வந்து விட்டதாக ஒரு தீராத குறை — தணியாத நிராசை இருந்தது. அந்த நிராசையின் மறுபுறத் தில் பங்கஜமும் ஓர் ஆசையா யிருந்தாள். என் னுடைய நிராசைதான் என்னை வளர்த்துப் பெரிய கவிஞனாக்கி யிருந்தது. என்னுடைய தாபம்,—எனக்கு மிகவும் வேண்டிய யாரையோ நான் வெகு தூரத்தில் அழவிட்டுவிட்டு வந்திருக் கிற சோகம் என்னைத் தூண்டிப் பாட வைத்துக் கொண்டிருந்தது. நான் புகழ்பெற்ற அந்தரங்கம் இதுதான். ஆமாம்! இதுவேதான்!

## பாத கமலங்கள்



னிதர்களும், புகழும், பணமும் சூழ அவற்றின் நடுவே சிக்கிக் கொண் டால் நினைப்பைத் தவிர வேறெத னுலும் அந்தரங்கமாகவோ, சுதந்திரமாகவோ வாழ முடிவ தில்லை. பங்கஜத்துக்கு ஒரு கடிதம் எழுத வேண்டும் என்று ஒவ்வொரு நாளும் நினைத்து அப்படி என்னைப் போல் ஓர் ஆண் மகன் அவளுக் குக் கடிதம் எழுதுவதனுல் ஏற்கெனவே அப வாதங்களினுல் தலை குனிந்து போயிருக்கும் அந்தச் சிறிய குடும்பத்தின் இளந் தளிரான அவளுக்குக் கலியாணம் ஆகாமலோ, ஊரார் முன் தலை காட்ட முடியாமலோ கெட்ட பேர் வந்து விடுமோ என்று எண்ணிப் பயந்து நினைப்பைச் செயலாக்கா மல் அடக்கிக் கொள்வேன். **'நினைத்து நினைத்து மலர் தொடுத்தேன்—அந்த—நினைப்பினைக் கண்ணீர் தொடுத்திருக்கும்'** என்ற பாட்டு — நான் எழுதிச் சமீபத்தில் வெளியான ஒரு படத்தின் மூலம் பிர பலமாகிச் சந்து பொந்துகளில் எல்லாம் ஒலிக் கிறது. உண்மையில் அந்தப் பாட்டு என் கற்பனை யில் எப்படிப் பிறந்தது தெரியுமா?

''பேரும் புகழும் வந்தப்புறம் — உங்களுக்கு எத்தனையோ பேர் ரோஜாப் பூ மாலை போட..... வருவாங்க.....ஆனால் இத்தனை கஷ்டப்பட்டு ஒரு மாலையை உங்களுக்காக....யாராலேயும் தொடுக்க முடியாது'' என்று பங்கஜம் என் கழுத்தில் ஒரு மாலையைப் போட்டு விட்டு அந்த ஊரை விட்டு நான் புறப்படுகிற கடைசி தினத்தன்று கண் கலங்கி நின்றுளே — அந்த ஞாபகம்தான் என் கற்பனையில் இப்படி ஒரு பாட்டைப் படைத்தது. கருணானந்தா பிக்சர்ஸ் — முதலாளி ஏற்பாடு செய்து கொடுத்த ஏர்கண்டிஷன் அறையிலோ, பெங்களூரின் குளிர்ந்த சூழ்நிலையில் ஓட்டல் அறை யின் இள நீல விளக்கொளியிலோ, தரையோடு ஒட்டினாற்போல் சர்ப்பம் சீறுவது மாதிரிச் சீறிக் கொண்டு ஓடும் இந்தப் புதுமாடல் காரில் பயணம் செய்யும் போதோ, அப்படி ஒரு பாட்டுப் பிறந்து விட வில்லை. 'எங்களுரிலே வயலிலே மட்டும் தான் ரோஜாப் பூப் பூக்கிறது! இந்த மாமாவோ இவரோட மனசிலேயே ரோஜாப் பூப் பூக்க வைக் கிறர்' என்று எழுதினளே — அந்த ஏழைப் பெண் ணின் நினைவுதான் என் இதயத்தில் கவிதாயோக மாகக் கற்பனை நிதியாய் நிரம்பித் தங்கி என் கவிதைகளில் இலட்சுமீகரம் பொங்க வைத்தது!

ரோஜாத் தோட்டமான 'அந்தக் குக்கிராமத் துக்கு ஒரு முறை நேரிலாவது போய் விட்டு வர வேண்டும்' என்று பல முறை நினைத்து — இரண்டு மூன்றுண்டுகளுக்குப் பிறகு இப்போதெல்லாம் அப் படி நினைக்கவும் சோம்பல் வந்து விட்டது. எப்போ தாவது மனம் அலைவுற்றுத் தவிக்கிற சில வேளை களில் அந்த முந்நூற்றைம்பது மைல் தொலைவை யும் மனோ வேகத்திலேயே கடந்து அங்கே ஓடிப் போய் அந்த ரோஜா வயல்களினிடையே ஒரு நாள் போது முழுவதும் உலாவ நினைத்து — வெறும் நினைப்பளவிலேயே ஓய்வதுண்டு. ஆறு மாதங் களில் பதினறு படங்களுக்கு — (ஒரு படம் ஒன்றுக்கு ஐந்து பாட்டு என்று வைத்துக் கொண்டாலும்) எண்பது பாடல்களுக்கு மேல் எழுதியாக வேண் டும். பொறுப்பு ஒரு பெரிய பந்தமாக இருந்து தொல்லைப் படுத்துகிறது. !எப்போதும் என்னைச் சுற்றி மனிதர்கள் இருக்கிருர்கள். மனிதர்கள் இல்லாதபோது காரியங்கள் இருக்கின்றன. நடுவில் நான் முயற்சி செய்யாமலே பங்கஜத்தைப் பற்றி ஒரு விஷயம் தெரிந்தது. ஏதோ பள்ளிக்கூடக் கட்டிட நிதிக்காகப் பணம் செழிக்கும் பண்ணை யான சினிமா உலகத்தைத் தேடிக் கொண்டு அந்தப் பழைய தலைமையாசிரியர் என்னிடம் வந்து சேர்ந்தார். ரோஜா வயல்கள் பூத்துக் குலுங்கும் அந்த அழகிய ஊரைக் கௌர விக்க வேண்டும் என்பதற்காக —



நான் என் சொந்த நன்கொடையாக இருபத்தையாயிரமும், இன்னும் சிலர் மூலம் இருபத்தையாயிரமுமாக அரை லட்ச ரூபாய் பள்ளிக் கூடக் கட்டிட நிதிக்காக வசூல் செய்து கொடுத்தேன். ''உங்களுக்கு வாடிக்கைச் சாப்பாடு போட்டுக் கொண்டிருந்தாளே; அந்தத் தேவகியம்மாள் சிவன் கோவில் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டு விட்டாள்! பாவம்.... ஊர் அவளைப் படாத பாடு படுத்திவிட்டது! அவளுடைய பெண்ணுக்குக் கலியாணமே ஆகலே!.... ஊரில் ஒரு சிறு வயசுப் பெண் பார்க்க இலட்சணமாக இருந்து விட்டால் வம்புக்குக் கேட்பானேன்? யாரோ தெருவிலே போற காலிகள் ரெண்டு பேர் சிவன் கோவில் நாயனக்காரனுக்கும் — இந்தப் பெண்ணுக்கும் முடிச்சுப் போட்டு அநியாயமாகக் கதை கிளப்பி விட்டான்கள். தேவகி அம்மாள் வாழ்க்கையில் ரொம்ப அடிபட்டவள். புண்பட்ட மனசு தாங்கலே. ஆரம்பத்திலேயிருந்து புண்பட்ட மனசில்லையா? ''சிவன் கோவில் பக்கம் போகாதே! யாரிட்டவும் வாயாடாதே. இனிமே ஓரிங் கொட்டகைப் பக்கம் போனியோ உன் காலை ஒடிச்சிப்புடுவேன்'' என்று இட்டிக் கூப்பாடு போட்டு வீட்டு வாசலில் நடுத் தெருவில் நிறுத்திப் பெண்ணை அடிஅடியென்று அடித்துக் கொலை பண்ணிடறாப்போல வெளுத்து வாங்கிறு.... மறு நாள் காலையிலே பார்த்தா அந்தம்மா பொணம் சிவன் கோவில் கிணற்றிலே மிதந்தது....'' என்று அவர் அந்த விவரத்தைச் சொன்ன போது இந்தத் தேசத்திலுள்ள இரண்டும் கெட்டான் கிராமங்களின் மேலெல்லாம் எனக்குக் கோபம் கோபமாக வந்தது. நான் மிக மிக வருத்தப்பட்டேன்.



''பங்கஜம் என்ன ஆனாள்? எனக்குத் தெரிந்தமட்டும் அவள் அப்படி எல்லாம் தப்பாகப் போகிற பெண் இல்லையே?'' என்று நான் அவரைக் கேட்டேன். ''ஊர்ப் பொதுவிலே ஏதோ வசூல் பண்ணித் தேவகி அம்மாளுக்கு அநாதைக் கொள்ளி போட்டோம். அந்தப் பெண் பங்கஜம் மூன்று மாதம் எங்க வீட்டிலேதான் இருந்தது. அந்தம்மாள் குடியிருந்த வீடு பழைய கடனுக்காக ஏலத்திலே போயிட்டுது. பணத்தைக் கடன் கொடுத்தவர்கள் பங்கு போட்டுக் கொண்டு போய் விட்டார்கள். பங்கஜத்தை 'டீச்சர்ஸ் டிரெயினி'ங்குக்குச் சிபாரிசு பண்ணி அனுப்பினேன். இடம் கிடைக்கவில்லை. நல்ல வேளையாக அதே 'டிரெயினிங் ஸெண்டர்'லே 'மியூஸிக் டீச்சர்ஸ் டிப்ளமோ கோர்ஸ்' என்று ஒரு பகுதி இருந்தது. பங்கஜத்துக்கு இனிமையான குரல் இருந்ததனால் அந்தப் பாட்டு வாத்தியார் பயிற்சி வகுப்பில் உடனே அவளை டிரெயினிங்குக்குச் சேர்த்துக் கொண்டுவிட்டார்கள். 'டிரெயினிங்' கூட முடிந்து போச்சு. கடலூர்லே ஏதோ ஒரு பெண்கள் உயர்தர ஆரம்பப் பாடசாலையில் பாட்டு வாத்தியாரம்மாவா வேலை பார்த்துக் கொண்டிருக்காள்....'' என்று மேலும் தமக்குத் தெரிந்த விவரங்களைத் தெரிவித்து விட்டுப் போனார் அந்தத் தலைமை ஆசிரியர். எனக்கு அப்போதே பங்கஜத்தைப் பார்க்க வேண்டும் போல ஆசையாயிருந்தது. மறு நாள் நான் கடலூருக்குப் போனேன். காலையில் ஆறு மணிக்குப் பட்டணத்தில் புறப்பட்டவன் 9 — மணி 55 நிமிஷத்துக்கு — அதாவது அந்தப் பள்ளிக்கூடத்தின் வகுப்புகள் ஆரம்பமாவதற்கு ஐந்து நிமிஷங்களுக்கு முன்னால் காரைப் பள்ளிக்கூடத்திலிருந்து சிறிது தொலைவு தள்ளி நிறுத்தி விட்டு அதன் பிரதான வாயில் படிக்கட்டருகே யாரையோ தேடி வந்திருக்கும் யாரோ போல நான் நிற்பதும் உலாவுவதுமாக இருந்தேன். பக்கத்தில் வந்து தயங்கிய ஒரு பெண் குழந்தையிடம், ''பாப்பா! உங்க பாட்டு வாத்தியாரம்மா வந்தாச்சா?'' என்று கேட்ட போது, ''இன்னும் இல்லே! வர நேரந்தான்..... இப்ப வந்திடுவாங்க'' என்று பதில் சொல்லியது. நான் எதிரேயுள்ள வீதியில் கண் பார்வையைப் பதித்தேன். அவள் வந்தாள். அதே அழகு! ஆனால் கொஞ்சம் பேதைமை மாறிய தோற்றம்! பங்கஜம் தன்னுடைய நடையையே தனக்கோர் சங்கீதமாக்கிக் கொண்டாற் போலத் தனியாய் அசைய அசைய நடந்து வந்தாள். அருகில் வந்ததும் அவளுடைய முகத்தைப் பார்ப்பதற்கு முன் கறுப்பு நிறத்தில் வெள்ளிச் சரிகை இழை தெய்த பாதரட்சைகளோடு வீதியில் உதிரும் தங்க மலர்களைப் போல் அவள் அடியெடுத்து வைத்த அந்தச் சிறிய பட்டுப் பாதங்களைத்தான் முதல் முதலில் பார்த்தேன் நான். பள்ளிக்கூடத்து வாசலில் அவளோடு இன்னும் இரண்டு மூன்று வாத்தியாரம்மாக்கள் உடன் சேர்ந்து கொண்டு விடவே — நான் அங்கேயே அவளைப் பார்த்துப் பேச முடியாமல் போயிற்று. பேசியிருக்கலாம்! ஆனால் மனம் உந்தியதே தவிரக் கால்கள் அருகே நெருங்க மறுத்து விட்டன. ஆசை கூச்சத்துக்குப் பின்னால் போய் ஒளிந்து கொண்டது. பத்துப் பதினைந்து நிமிஷங்களுக்குப் பின் வகுப்புக்கள் ஆரம்பமான போது — எங்கோ ஒரு மூலையிலிருந்து 'பராத்பரா — பரமேசுவரா' என்று தெய்வீகமான வாசஸ்பதி ராகப் பாடல் ஒன்று என் செவிகளை எட்டியது! நான் அப்படியே அந்த வகுப்புக்குள் ஓடிப் போய், ''பங்கஜம்! இதோ.... யார் வந்திருக்கேனென்று பாரு..... மனசிலேயே ரோஜாப் பூப் பூக்கிற மாமா....'' என்று சொல்ல வேண்டும் போல உணர்ந்தேன். ஆனால் செய்யவில்லை. நினைத்ததைச் செய்ய முடியாத கோழையாக அப்படியே திரும்பி விட்டேன். அவள் அன்று அந்த நேரத்தில் பாடிய கீதம் அதற்குப் பின் அவளைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் என் மனத்தில் ஒலிக்கிறது. அந்தக் கீதத்தை என்னுள் இசைத்துக் கொண்டால் அது அவளுடைய உருவகமாக முடிகிறது. நான் கடலூருக்குப் போய் விட்டு வந்த அடுத்த மாதம் ஒரு பிரபல படத் தயாரிப்பாளரின் படத்துக்கு எழுதிய பாடல்களில் '**பாதையில் நடந்திடும்போதே — காதல் செழித்திடும் — பாத கமலங்கள் — நடக்கும் பாதையெல்லாம் நவரசம் கொழித்திடும் பாத கமலங்கள்**' என்று தொடங்கி ஒரு பாட்டு அற்புதமாக வாய்த்திருந்தது. மியூஸிக் டைரக்டர்கள் அந்தப் பாட்டுக்கு மிக இனிய 'மெட்டும்' போட்டு விட்டார்கள். படத்தினுள் அந்தப் பாடல்

சிறு வயதிலேயே புகட்டுங்கள்...
சிறந்த முறையில் புகட்டுங்கள்...
காலையில் முதல் வேலையாக ஒரு முறை
இறுதியாக இரவில் ஒரு முறை
வாய்கொப்பளிக்க

# லிஸ்டரின்!

—வாழ்நாள் முழுதும்
அவர்களுக்குப் பாதுகாப்பு!

பழக்கம் படிவதற்கு வாகானது இளமைப் பருவம்! லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தைப் புகட்டுவதற்கு இதைவிட வாய்ப்பான சமயமும் உண்டோ! அன்றாடம் அதிகாலை ஒரு தடவை, இரவு ஒரு தடவை லிஸ்டரின் கொண்டு வாய் கொப்பளித்தால் கிருமிகளினின்று நாள் முழுதும் காத்துக்கொள்ளலாம். பட்ட மாத்திரத்திலே கிருமிகளைக் கொன்று மூச்சிலே இனிமை தவழச் செய்வது லிஸ்டரின் ஆண்டிஸெப்டிக் (நச்சுமுறி மருந்து).

திடமுடன் முன்யோசனையைக் கைக்கொள்ளுங்கள்! தினம் இருமுறை லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தை இப்போதே துவக்குங்கள்!

**வாய்நிறைந்த சுகாதாரத் தூய்மைக்கு வழி: லிஸ்டரின்; இன்றும் என்றும் உங்கள் துணை!**




வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).

WL. 17029 TM

வாய்த்திருந்த சிறப்பை மனத்தில் நினைத்து அதிர்ஷ்ட இலட்சணமான ஏழு எழுத்து வராவிட்டாலும் பரவாயில்லை என்று துணிவுடன் 'பாத கமலங்கள்' என்றே படத்துக்குப் பெயர் சூட்டி விட்டார் தயாரிப்பாளர். நான் பங்கஜத்தின் பாத கமலங்களைப் பார்த்த விநாடியில் மின்னலாக மனத்தில் உதித்த ஓர் அழகுணர்ச்சிதான் எனக்குள் அந்தப் பாடலைப் படைத்துக் கொடுத்தது என்பது என் அந்தரங்கம் மட்டுமே அறிந்த உண்மை.

## எட்டு விழவில்லை



பாத கமலங்கள்—படம் வெற்றிகரமாக ஓடிய மறு வருடம் பாளையக்காரர்களுடைய வரலாற்றைப் பின்னணியாகக் கொண்ட சரித்திரப் படம் ஒன்றிற்குப் பாடல் எழுதிக் கொண்டிருந்தேன் நான். அந்தச் சமயத்தில் — 'காவடிச் சிந்து' மெட்டில் சில பாடல்கள் எழுதுவதற்காகத் தமிழில் வெளி வந்திருக்கிற அத்தனை பழைய காவடிச் சிந்து நூல்களையும் தேடிக் கண்டுபிடித்து வாங்கி வரப் பழைய புத்தகக் கடைகளைத் தொடர்ந்து முற்றுகையிட்டுக் கொண்டிருந்தேன். அப்படிப் போய்க் கொண்டிருந்த நாட்களில் ஒரு நாள் ஏதோ ஒரு பழைய புத்தகக் கடையிலிருந்து மன வருத்தமும் கோபமுமாக வீடு திரும்ப நேர்ந்தது. அந்தக் கோபத்துக்குக் காரணம் வேறு யாருமில்லை. பங்கஜம்தான்! நான் அவளுக்குப் பிரியமாக அன்பளிப்புச் செய்து விட்டு வந்திருந்த 'மனோரஞ்சித மலர்கள்' என்ற புத்தகம் — என்னுடைய கையெழுத்துடனும் நானே எழுதிக் கொடுத்து விட்டு வந்திருந்த அந்த வாக்கியத்துடனும் பழைய புத்தகக் கடையில் வந்து கிடந்தது. அல்லியரசாணி மாலைக்கும் — புலந்திரன் தூதுக்கும் நடுவில் நீலப் பட்டு உறை போட்டுத் தைத்த அந்த 'மனோரஞ்சித மலர்கள்' என் கைக்குக் கிடைத்ததோ இல்லையோ — எனக்குப் பங்கஜத்தின் மேல் தாங்க முடியாத கோபம் வந்தது. நான் அவளிடம் அந்தப் புத்தகத்தைக் கொடுத்த போது வெறும் 'காலிகோ' பைண்டு செய்த புத்தகமாகத்தான் கொடுத்திருந்தேன். அதற்குப்பின் இந்தப் பட்டு உறையை அவளாகத் தைத்துப் போட்டிருக்க வேண்டும்! நான் பழைய புத்தகக் கடையிலிருந்து அன்று வீட்டுக்குத் திரும்பியதும் கோபமாக அந்தப் பட்டு உறையைக் கிழித்தெறிய முற்பட்ட போது காலிகோ பைண்டு அட்டைக்கும்—பட்டு உறைக்கும் நடுவிலிருந்து ஒரு பழுப்பு நிறக் கவர் கீழே விழுந்தது. என் பெயரும் அதன் கீழே நான் முதன் முதலாகப் பாட்டு எழுதி வெளி வந்த திரைப் படக் கம்பெனியின் விலாசமும் எழுதித் தபாலில் போடத் தயாராக வைக்கப்பட்டு — எப்படியோ முடியாமற் போய் விட்டதனால் — அந்த இடத்திலேயே அடைபட்டுப் பழுப்பேறிப் போன இந்தக் கடிதம்—நாலைந்து ஆண்டுகளுக்குப் பின் இப்போதுதான் எனக்குக் கிடைக்கிறது!

''கண்ணூர் மாமாவுக்குப் பங்கஜம் அநேக கோடி வணக்கங்கள். இங்கு அம்மாவும் நானும் சௌக்கியம். நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களா என்று நான் இந்தக் கடிதத்தில் விசாரிக்க வேண்டிய அவசியமில்லை. ஏனென்றால் நீங்கள் நிச்சயம் சௌக்கியமாகத்தான் இருப்பீர்கள் என்று எனக்குத் தெரியும். 'நினைத்து நினைத்து மலர் தொடுத்தேன்' என்ற உங்கள் பாட்டை டூரிங் சினிமாக் கொட்டகையிலே கேட்ட போது எனக்கு அழுகையே வந்து விட்டது மாமா! நீங்க பாட்டு எழுதியிருக்கிற அந்த முதல் படம் பெரிய பெரிய ஊரிலே எல்லாம் ரொம்ப நாள் ஓடிப்பிட்டுக் கடைசியா இங்கேயும் 'டூரிங்' கொட்டகையைத் தேடிக் கொண்டு வந்திருக்கு. நீங்க கையெழுத்துப் போட்டுக் கொடுத்திட்டுப் போயிருக்கிங்களே — புஸ்தகம் — அதை ரொம்ப அழகா வைச்சுக்கணும்னு.... எப்பவோ ஜாக்கெட்டுக்காக வாங்கிப் புதுசா உள்ளே பெட்டியிலே கிடந்த நீலப் பட்டுத் துண்டுலே உறை தைத்து விட்டேன். புஸ்தகம் இப்போ பார்க்க இலட்சணமாக இருக்கு. அப்படியே கண்ணிலே ஒத்திக்கலாம் போல அழகாயிருக்கு மாமா! சில சமயம் உங்களை அதிகமா நினைத்துத் தவிக்கிற போது அதைக் கண்களில் ஒத்திக் கொள்ளவும் செய்கிறேன். ஒரு நாளைக்கு — கடிகாரத்தின் பிரகாரம் — இருபத்தி நாலு மணி நேரம் இருக்கு! சாப்பிடற போதும், தூங்கற போதும், குளிக்கிற போதும் தவிர மற்ற நாழிகையிலே உங்க புஸ்தகம் என்னோடதான் இருக்கு மாமா! அல்லது உங்க புஸ்தகத்தோடதான் நான் இருக்கேன். அம்மா—இப்போதெல்லாம் என்னை ரொம்பக் கோபித்துக் கொண்டு திட்டுகிறாள். சினிமாக் கொட்டகைப் பக்கமே தலை வைத்துப் படுக்கக் கூடாது என்கிறாள். இந்தச் சிவன் கோவில்லே மீனாட்சி சுந்தரம்னு ஒரு நாயனக்காரர் இருக்கார். எனக்குத் தான் பாட்டுன்னு ரொம்பப் பிரியம்னு உங்களுக்குத் தெரியுமே! கோவிலுக்குப் போறப்போ — வருகிறப்போ அந்த நாயனக்காரர் கிட்டே ரெண்டு வார்த்தை நின்னு பேசுவேன். நான் பார்க்க அழகாகவும் இருக்கேனா? இதை வச்சு ஊர்லே கதை கட்டிவிட்டாங்க. வரவர எனக்கு இந்தக் கிராமமே பிடிக்கலே. இங்கே இப்போ தெல்லாம் ரோஜாப் பூவோட சேர்ந்து வம்புகளும் அதிகமாகப் பூக்கின்றன. ரொம்ப வெறுத்துப் போயிருக்கேன். ஒண்ணுமே பிடிக்கலே. என்ன வாழ்க்கை இது! வெறும் பட்டிக்காடு.

''அடியே உங் கொட்டத்தை ஒடுக்கணுமானா வீட்டிலே இருக்கிற கதைப் பொஸ்தகத்தை எல்லாம் வாரி நெருப்பு வச்சுப்பிடணும். அதைப் படிச்சுப் படிச்சுத்தான் நீ குட்டிச்சுவராப் போறே. வீட்டு எல்லைக்குள்ளே பேனா — காகிதம், பென்சில் ஒண்ணும் இருக்கப்படாது. நீ அடிக்கடி அந்த மேனக்கார வீட்ட ஏதோ கடிதாக எழுதிக் கொடுக்கிறியாமே? பாழாப் போற சனியனே! இருக்கிற கெட்ட பேர் போறும். இன்னும் வேறே பேர் தேடிக்கணுமா?''



என்று அம்மாவே என்னைப் பற்றி மட்டமா நினைக்கிறா மாமா. இந்த உலகத்திலே மனிதர்கள் ஏன்தான் இத்தனை அசிங்கமாயிருக்காளோ?

நான் எனக்கு ஏதோ பொழுது போகணும்கிறதுக்காக உங்க ''மனோரஞ்சித மலர்கள்'' கவிதைத் தொகுதியிலே இருந்து ஒவ்வொரு பாட்டாகத் துண்டுக் காகிதத்தில் எழுதிக் கொண்டு போய்—அந்த நாயனக்காரர்கிட்டே என்ன ராகத்திலே எதைப் பாடலாமின்னு கேட்பேன். புஸ்தகத்தையே அவரிட்டக் கொடுத்துக் கேட்கலாமே என்பீர்கள்! நீங்கள் கொடுத்த அந்தப் புஸ்தகத்தை இன்னொருத்தர் தொடறதே எனக்குப் பிடிக்காது மாமா. இப்படி ஏதோ — உங்க கவிதைக்கு ராகத்தையும் தாளத்தையும் விசாரிக்கப் போக, நான் நான் தவறாமல் நாயனக்காரருக்குக் காதல் கடிதம் எழுதறதாக வம்பு பேசத் தொடங்கி அந்த வம்பு — எங்க அம்மா — காது வரை வந்து — பேறு — பெண்ணில் எல்லாத்தையும் அடுப்பிலே தூக்கிப் போட்டுட்டா! இதையெல்லாம் படிச்சு நீங்க ரொம்ப வருத்தப்படுவீங்க...... என்ன செய்யலாம்? பங்கஜத்தின் தலைவிதி அப்படி! 'பங்கஜம் என்றால் சேற்றில் பிறந்த மலர்' என்று ஒரு நாள் அர்த்தம் சொல்லிச் சிரித்தீர்களே — மாமா—அது நினைவிருக்கா? இப்போது அந்த மலரையே சேற்றில் அமுக்கி விடுவார்கள் போலிருக்கு...நான் பிறந்த வேளை நல்லதில்லையோ என்னவோ?

இப்போது எனக்கு இன்னொன்று ஞாபகம் வருகிறது மாமா. அன்றொரு நாள் நான் கண்ணை மூடிக் கொண்டு எட்டுப் போடுவதற்காகச் சோழிகளை உருட்டி விட்டுப் பக்கத்திலிருந்த உங்களை எனக்காக ஆருடம் பார்க்கச் சொன்னேனே....? அன்று நீங்கள் ''பங்கஜம்! எந்தக் காரியத்துக்கு இத்தனை பெரிய ஆருடம் பார்க்கிறாய்?'' என்று கேலியாகக்கூட என்னைக் கேட்டீர்கள். நான் உங்களுக்குப் பதில் சொல்லாமல் அன்றைக்குச் சிரித்து மழுப்பி ஏமாற்றி விட்டேன். இன்றும்கூட அதை உங்களுக்கு எழுதக் கூச்சமாகத்தான் இருக்கு. ஆனால் எழுதி விடத்தான் போகிறேன். மாமா! இதைப் படித்து விட்டு நீங்கள் என்னைப் பைத்தியமென்று நினைத்தாலும் எனக்குக் கவலையில்லை. 'என்னை நீங்கள் கலியாணம் பண்ணிக்கொண்டு அந்தக்கிராமத்திலிருந்து அழைத்துக் கொண்டு போயிடறதாக நான் அதுக்கு முந்தின நாள் ராத்திரி சொப்பனம் கண்டேன்.' அந்தச் சொப்பனம் பலிக்குமோ இல்லையோ' — என்பதற்காகத்தான் அன்னிக்கு நான் சோழி உருட்டி எட்டுப் போட்டேன். ஆனால் அந்தச் சோழிகளும் ஆருடமும்கூட என்னை ஏமாற்றி விட்டதாக இப்போது தான் தெரியறது மாமா. உண்மையிலே—சோழியில் எட்டுப் போட்டு இது வரை நான் பார்த்த ஆருடம் எதுவும் அநியாயமா இப்படிப் பொய்த்ததில்லை. ஒரு வேளை எட்டு — நன்றாக விழாமல்— ஏதாவது ஒரு சோழி நிமிர்ந்திருந்து உங்கள் கண்ணையும் — என் கண்ணையும்கூட ஏமாற்றியிருக்குமோ என்னவோ?......''



இதற்கு மேல் அந்தக் கடிதம் முடியாமல் தாளும் கடிதத்தின் முழுமையும் குறைப்பட்டு அரை குறையாயிருந்தது. அம்மாவுக்குப் பயந்து பாக்கிக் கடிதத்தை அப்புறம் எழுதலாமென்று அவள் புத்தக உறைக்குள் இதை வைத்து விட்டிருக்க வேண்டும். மறுபடி அவள் இதை எடுத்து எழுதுவதற்குள் அவளுடைய அம்மாவே வீட்டிலிருந்த இந்தப் புத்தகத்தையும் — மற்றப் புத்தகங்களையும் அவளுக்குத் தெரியாமல் பழைய பேப்பர்க்காரனிடம் வீசைக் கணக்கில் நிறுத்து விற்றிருக்கவேண்டும் என்று' என்ன நடந்திருக்க முடியும் என்பதைச் சுலபமாக என்னால் அநுமானம் செய்ய முடிந்தது. பழைய புத்தகக் கடையில் அதைக் கண்ட போது வந்த கோபம் இப்போது என்னிடமில்லை. பங்கஜத்தின் சத்தியமான நினைப்பு வீண் போகாமல் எப்படியோ, எங்கேயோ சுற்றி நெடு நாட்களுக்குப் பிறகு அந்தக் கடிதமும், புத்தகமும் இன்று என் கைக்கே வந்து விட்டன. சோழியில் அவள் எட்டுப் போட்டது எதற்காக என்பதும் எனக்கு இப்போது தெரிந்து விட்டது! ஆனால் உண்மையில் அன்றும் எட்டு விழ வில்லையே? அவளுடைய நம்பிக்கை உடையக் கூடாது என்பதற்காக நான்தானே பொய்யாகச் சோழியைக் கவிழ்த்து வைத்தேன்? அப்படி நான் பொய்ம்மை புரிந்தபோதே சோழியையும் அவள் நம்பிக்கையையும் ஒன்றாகச் சேர்த்துக் கவிழ்த்து விட்டு விட்டேனோ. என்னவோ? அதை நினைத்தால் நானும் விதியும் சேர்ந்து அவளை ஏமாற்றி விட்டதாகவே தோன்றுகிறது. முதலில் கிழித்தெறிந்த அதே நீலப் பட்டு உறையை இப்போது இரண்டு கைகளாலும் எடுத்துக் கண்களில் ஒத்திக் கொள்ள வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இதை இன்னொருத்தர் கையால் தொடவே சகிக்காத பங்கஜம் இந்தப் புஸ்தகம் காணாமல் போய் இதைத் தன் தாய் பழைய பேப்பர்க்காரனிடம் நிறுத்துப் போட்டு விட்ட செய்தி தெரிந்த அன்று எவ்வளவு துடிதுடித்துப் போயிருப்பாள்? என்று நினைத்துப் பார்க்க முயன்றேன் நான். கடலூரில் அவள் அருகில் செல்லாமலே நான் எட்டி நின்று அவளைப் பார்த்து இப்போது ஓர் ஆண்டுக்கு மேல் ஆகி விட்டது. அவள் இப்போதும் கடலூரில்தான் இருக்கிறாளா இல்லையா என்பது தெரியவில்லை. அன்று பகலில் நான் ஒரு காரியம் செய்தேன். கடலூரில் எனக்கு வேண்டிய நண்பரான ஓர் இலக்கியப் பிரமுகருக்கு 'டிரங் கால்' செய்து பங்கஜம் என்கிற பெண் — அதே பழைய பள்ளிக்கூடத்தில் இன்னும் பாட்டு வாத்தியாரம்மாவாக இருக்கிறாளா? இல்லையா என்று விசாரித்துச் சாயங்காலத்துக்குள் எனக்கு மறுபடியும் ஃபோனில் பதில் தெரிவிக்கச் சொன்னேன்.

அன்று சாயங்காலமே தொலை பேசி மூலம் கடலூரிலிருந்து எனக்குப் பதில் கிடைத்தது....''அந்தப் பாட்டு வாத்தியாரம்மா....இப்போது கடலூரில் இல்லை.... சிதம்பரத்தில் யாரோ ஒரு புரொபஸரைக் கலியாணம் செய்து கொண்டு கணவனோடு அங்கே குடியேறி விட்டதனால் கடலூரில் பள்ளிக்கூடத்து வேலையை விட்டு விட்டாளாம். அந்தப் புரொபஸர் பங்கஜத்தின் அழகையும் இனிய சங்கீதத்தையும் பார்த்து ஆசைப்பட்டு அவளை மிகவும் விரும்பிப் பிரியப்பட்டுத் திருமணம் செய்து கொண்டானாம்.''



ந்தத் தகவல் தெரிந்ததும் அந்தப் பழைய அன்பளிப்புப் புத்தகத்தை அவளிடம் திரும்ப அனுப்பி வைக்கிற எண்ணத்தை நான் உடனே விட்டு விட்டேன். பங்கஜத்தின் கணவன் புயலாக மாறி அவளைச் சந்தேகப்படுவதற்கு இந்த 'மனோரஞ்சித மலர்கள்' தூண்டுதலாக இருக்கக் கூடாது என்பதுதான் என் மன மாற்றத்துக்குக் காரணம்! நியாயம்தானே! பங்கஜத்தின் கணவனும் சந்தேகமும் சபலங்களும் உள்ள சாதாரண மனிதர்களில் ஒருவனாகத்தான் இருக்க முடியும்.

பங்கஜம் ஒரு காலத்தில் என்னைக் காதலித்தாள். ஆனால் நான் ஒரு போதும் அவளைக் காதலித்ததில்லை! திகைக்க வேண்டாம். காதலைவிட ஒரு பெண்ணை — அதிகபட்சமாகக் கௌரவிப்பதற்கு வேறு ஓர் உறவும் இந்த உலகில் இருக்க முடியாதென்று நான் நினைக்கவில்லை! பங்கஜத்தைப் போல் ஒரு கவிப் பொருளை எவனாவது ஒரு சாமானியமான மனிதன் கழுத்தில் தாலி கட்டித் தொட்டுக் கொஞ்சி விளையாடுவதையும், அவள் தாயாகிப் பாட்டியாகிக் கொள்ளுப் பாட்டியாகி மூத்து விடுகிறாள் என்பதையும் கற்பனை செய்து பார்ப்பது கூடச் சித்திரவதையைவிட அருவருப்பான காரியம் என்று நினைக்கிறவன் நான். அவளுடைய அழகின் பேதைமையை ஒரு நித்தியமான சாசுவத நிதியாக்கி—அந்தக் கவிதா நிதியிலிருந்து அல்லது அந்தக் கவிதா மூலதனத்திலிருந்து நான் இன்னும் எவ்வளவோ பாடுவதற்கு நினைத்திருக்கிறேன். எனவேதான் காதலைவிட அதிகமானதும் — ஆனால் காதலைப் போல் அவளுடைய அழகை விரும்பக் கூடியதுமாகிய ஒரு பெரிய மதிப்பு அவளிடம் எனக்கு உண்டு. அது இந்த உலகத்து நடைமுறைப் பாஷையால் விளக்கிச் சொல்ல முடியாத ஒரு விஷயம் என்பதற்காக மட்டுமே நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்!

''கூட்டங்களில் யாராவது உங்களுக்கு ரோஜாப் பூ மாலை போட வந்தால் நீங்கள் ஏன் அழுவது போல் கண்கலங்கி விடுகிறீர்கள்?'' என்று என்னுடைய நண்பர் ஒருவர் அடிக்கடி என்னை ஒரு கேள்வி கேட்கிறார். அவருக்கு நான் இன்னும் பிடி கொடுத்துப் பதில் சொல்லவில்லை; சொல்லவும் விரும்பவில்லை. ''சரசுவதி பூஜை வருகிறது! உங்களுடைய பழைமையான புத்தகங்களை அடுக்கி வைத்திருக்கும் அந்த டிரங்குப் பெட்டியில் ஒரு மூலையில் ஒரு வாடிய ரோஜா ஆரம் சருகு சருகாகக் கிடக்கிறதே? அதை அங்கிருந்து எடுத்தெறிந்து விட்டுச் சுத்தம் செய்து புத்தகங்களை மறுபடியும் அதில் அடுக்கட்டுமா?'' என்று என்னுடைய காரியதரிசி ஒரு வாரத்துக்கு முன்னால் என்னை ஒரு கேள்வி கேட்டான்.

''அசட்டுப் பயலே! என்னுடைய சரஸ்வதியே அதில்தான் இருக்கிறாளடா!'' என்று சூடாக அவனுக்குப் பதில் சொல்ல வேண்டும் என்று நினைத்து — அந்த நினைப்பை மனத்துக்குள்ளேயே கௌரவித்து விட்டு, ''அப்படிச் செய்து விடாதே! அந்த இடத்தில் அது முன் போலவே இருக்கட்டும்'' என்று மட்டும் அவனுக்குப் பதில் சொன்னேன்.

மின்னலுக்கு எங்காவது வயசு உண்டா? அந்த ஒளிக்கு மூப்பு உண்டா? கிடையாதுதானே? பங்கஜம் என்னுடைய ஞாபகத்தின் தூக்கத்துக்கும் விழிப்புக்கும் நடுவே ஒரு மின்னலாகவே யிருக்கிறாள். ''மாமா! நீங்க.... சும்மா.... புளுகு நீங்க......'' என்று பல ஆண்டுகளுக்கு முன் பட்டிக்காட்டுப் பேதையாய்த் தலையை ஒரு புறமாகச் சாய்த்து இமைகளை மூடித் திறப்பதிலேயே ஒரு நளினமான இரகசியத்தை உதிர்க்கிற மாதிரிப் பார்த்த பழைய பங்கஜமாகத்தான் இன்றும் அவள் என் நினைவில் மின்னிக் கொண்டிருக்கிறாள். அன்று போலவே அவளை — அவளுடைய நினைவை நான் ஒரு பக்குவமான இரசிகனாக இருந்து இன்றும் சிந்திக்கிறேன். அந்த நேரத்தின் கீதங்களை என்னுள் நானே இப்போதும் இசைத்துப் பார்த்துக் கொள்கிறேன். அழகைக் கௌரவிக்க வேண்டும் என்று நான் சொல்கிற தத்துவம் பலருக்குப் புரியவில்லை. அதனால் என்னை ஒரு 'ஸினிக்' என்கிறார்கள். மழை பெய்யாத செம் மேகங்களைப் போல் வரண்ட அழகை இரசிக்கிறவர்கள்தான் உலகில் அதிகமாக இருக்கிறார்கள். பங்கஜத்தை மனைவியாக அடைவதன் மூலம் ஓர் ஆண் பிள்ளை சந்தோஷப்படுவதும் அப்படித்தானே? நீங்கள் 'அப்படி இல்லை' என்று என்னைக் கடுமையாக மறுத்து வாதிடுவீர்கள். ஆனால் அதைப் பற்றி நான் கவலைப்பட்டு எதிர்த்து விவாதிக்கவோ முரண்படவோ தயாராயில்லை. என்னுடைய பாடல்களில் நிராசையும்—ஏக்கமுமே அதிகம் நிரம்பி யிருப்பதாகப் பலர் குறை சொல்லுகிறார்கள். நிராசையில்தான் — அதன் மறுபுறம் தான் என் ஆசை இருக்கிறது! அதிருப்தியில்தான் அதன் மறுபுறம்தான் என்னுடைய திருப்தி இருக்கிறது. ஏக்கத்தின் மறுபுறத்தில்தான் என்னுடைய சந்தோஷம் இருக்கிறது. ஆனால் நான் உங்களிடம் ஒரு விஷயத்தை மட்டும் இன்னும் இப்போதும் வற்புறுத்திச் சொல்ல முடியும். காதலிப்பதற்கும் அதிகமான கௌரவத்தை ஓர் ஆண் மகன் ஒரு பெண்ணுக்கு — ஓர் அழகிய பெண்ணுக்கு அளிக்க முடியும் என்பதை நீங்கள் நம்புவதாயிருந்தால் — அல்லது அப்படி நம்புகிற மனப் பக்குவத்தை உங்களால் இனி மேலாவது அடைய முடியுமானால் — என்னுள் தூங்கிக் கொண்டிருக்கிற நினைவுகளையும் நீங்கள் மதிக்க முடியும். அவை நினைவுகள்தான்! ஆனால் ஒரு சாதாரண மனிதன் ஒரு சாதாரணப் பெண்ணைப் பற்றி நினைக்கிற வெறும் நினைவுகள் இல்லை! என்னுடைய அந்த நினைவுகளுக்குத் தனிப்பட்டதோர் கௌரவத்தை நான் கண்டிப்பாக உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேன்.



# குளுகுளுப்பான ஆனந்தம்
## பின்னியின்
# மொஹோலின் மற்றும்
# WB 275 X டிரில்

மொஹோலின் ஷர்ட்டிங் அணியும்போது, குளுமையான காற்று உங்கள் சருமத்தைத் தழுவும்—ஆனந்தத்தை நீங்கள் நன்கு அனுபவிக்கலாம். இதற்கெனவே பிரத்தியேகமாய் தயாராகிறது இந்த ஷர்ட்டிங். இப்போது பல நிறங்களிலும் கிடைக்கிறது. WB 275 X வெள்ளை டிரில் நிஜார் அணியும் போதும் அதே குளுமையான சுகத்தை அனுபவிக்கிறீர்கள். 'மர்ஸரைஸ்ட்' செய்த WB 275 X டிரில் 'ஸான்போரைஸ்ட்' செய்ததும்கூட. இவ்விரண்டு துணிகளும் உங்கள் பணத்திற்கு முழு மதிப்பு அளிப்பவை—அதில் சந்தேகமேயில்லை.



குளிர்ச்சியளிக்கும் மொஹோலின் துணியின் தோற்றம்.




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் எங்கள் அனுமதி பெற்ற பின்னி விற்பனையாளரிடமிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்குங்கள்.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட், பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட் ஸ்தாபனத்தின் ஒரு கிளை

# நிமிஷக் கதைகள்



அந்த ஆஸ்பத்திரி வாசலில் ஒரு கார் அவசரம் அவசரமாக வந்து நின்றது. அதிலிருந்து சட்டென்று கதவைத் திறந்து இறங்கிப் பட்டென்று சாத்திக் கொண்டு ஒரு வாலிபன் ஓடினான். மாடிப் படிகளை மூன்றும் நான்குமாகக் கடந்து 'அவசரக் கேஸ்' என்று போட்டிருக்கும் அறை வாசலை அடைந்தான். சாத்தியிருந்த அறைக் கதவை மூச்சு வாங்கத் திறந்தான். நர்ஸைப்பார்த்து. "என் மனைவிக்கு... என் மனைவிக்குக் குழந்தை பிறக்கப் போகிறது. பிரசவ வேதனை கண்டுவிட்டது!" என்று பதற்றம் பொங்கச் சொன்னான்.

"அப்படியானால் உடனே அழைத்து வாருங்கள்!" என்றாள் நர்ஸ்.

"அவளுக்கு இது மாதம் இல்லை. அடுத்ததுதான் மாதம். இருந்தாலும் எத்தனை சீக்கிரம் ஆஸ்பத்திரிக்கு வர முடியும் என்பதை ஒத்திகை பார்த்துக் கொள்ளத்தான் வந்தேன். வீட்டிலிருந்து புறப்பட்டு அரை மணி நேரம் ஆகிறது. பரவாயில்லையே!" என்று கேட்டான் வாலிபன்.

"டாக்டர்! என்னை நானே கொன்று கொள்ளுகிறாற் போல் ஓர் உணர்ச்சி அடிக்கடி ஏற்படுகிறது. அதற்கு என்ன செய்யலாம்?"

"அந்தக் காரியத்தைப் பேசாமல் என் பொறுப்பில் விட்டு விடுங்கள். நான் பார்த்துக்கொள்ளுகிறேன்."



கணவன் அன்றும் வெறுங் கையோடு வந்ததைக் கண்ட மனைவிக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. "எட்டு நாட்களாகச் சொல்லுகிறேன். எனக்குப் பிறந்த நாள் வருகிறது என்று! ஆனால் நீங்கள் காதில் போட்டுக் கொண்டால்தானே?" என்றாள்.

"என்ன செய்யணுங்கிறே?"

"எனக்குப் பிறந்த நாளுக்கென்று ஒரு பரிசு வாங்கி வரக் கூடாதா?"

"வாங்கி வரலாம்தான். ஆனால் காரணமாகத்தான் வாங்கி வரவில்லை."

"என்ன காரணமோ?"

"உனக்குப் பிறந்த நாள் என்று நான் பரிசு வாங்கி வந்து விட்டால் போன வருஷத்துக்கு இந்த வருஷம் உனக்கு ஒரு வயது கூட ஆகி விட்டது என்று ஆகிவிடுகிறது. உனக்கு ஆட்சேபனை இல்லையென்றால் சொல். நாளையே நல்ல பரிசாக ஒன்று வாங்கி வந்து விடுகிறேன்!"

கணவன் இப்படிச் சொன்ன பின் அவன் சதாபிஷேகம் பண்ணிக் கொண்ட பின்பும் கூட மனைவி பிறந்த நாள் பரிசைப் பற்றி நினைவுபடுத்தவில்லை என்று கேள்வி.



வேலு ராணுவத்தில் ஜீப் ஓட்டி. அவன் மேஜர் துரை ஒருவருக்குக் கார் ஓட்டியாக பணியாற்றி வந்தான். மேஜர் துரையின் சுபாவங்களெல்லாம் அவனுக்கு அத்துபடி.

வேகமாக ஜீப் போய்க்கொண்டிருந்த பொழுது மேஜர் துரையின் பார்வை எங்கோ பதிந்தது. சட்டென்று காரைத் திருப்பி ஓட்டுமாறு உத்தரவிட்டார்.

மேஜர் துரையின் கருத்தைக் கவர்ந்த இடத்தைக் கவனித்த வேலு திடீர் பிரேக் போட்டு வண்டியை நிறுத்தினான். நின்ற இயந்திரம் மீண்டும் இயங்கச் சிறிது நேரம் பிடித்தது.

அவன் வண்டியைத் திருப்பி ஓட்டுவதற்குள் மேஜர் துரையின் கவனத்தைக் கவர்ந்த பொருள் கண் பார்வையிலிருந்து மறைந்து விட்டது. அவருக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "நீ சுத்த உருப்படாதவன். அவசரக் காரியத்துக்குப் பயன்படவே மாட்டாய்!" என்று கடிந்தார்.

வேலு பதில் பேசவில்லை. ஆனால் அவன் முகத்தில் மட்டும் மேஜரின் கழுகுப் பார்வையிலிருந்து ஓர் இளம் பெண்ணைக் காப்பாற்றிவிட்ட பெருமிதம் நிலவிப் பளிச்சிட்டது.



மகாகவி மில்டன் குருடாகிவிட்ட பின், நண்பர் ஒருவர் அவரது மனைவியின் அழகைப் பற்றி வர்ணித்தார். 'உன் மனைவி ரோஜா மலரைப் போன்று மணமும் குணமும் படைத்து எழில் பரப்புகிறாள்' என்றார்.

"அப்படியா?" என்று கேட்ட மில்டன் சர்வ சாதாரணமாகச் சொன்ன பதில் இதுதான்: "நண்பா! நிறத்தையும் எழிலையும் காணும் தன்மை என்னிடமிருந்து விடைபெற்று விட்டது. ஆனால் நீ சொன்னாயே, அந்த ரோஜாவின் முட்கள் என்னைத் தினம் தினம் குத்தித் துளைக்கின்றன!" இந்தச் சொற்கள் அவர் மனைவியை முட்களாகக் குத்தியிருக்குமோ?



# அபூமலையின் அதிசயக் கோயில்கள்

தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

ஓர் அரசகுமாரனுக்குப் பக்கத்து ராஜ்யத்தில் உள்ள ராஜகுமாரியை மணம் பேசுகின்றனர். திருமணம் நிச்சயமாகிறது. திருமண ஏற்பாடுகளும் சிறப்பாக நடக்கின்றன. ராஜகுமாரி இருக்கும் நகரை நோக்கி ராஜகுமாரன் புறப்படுகிறான். அவன் ஒரு பெரிய யானை மீது அமைக்கப்பட்டிருக்கும் அம்பாரியில் வீற்றிருக்கிறான். மந்திரி பிரதானியர் எல்லாம் முன் நடக்கின்றனர். கோலாகலமாக மாப்பிள்ளை அழைத்துச் செல்லப்படுகிறார். மங்கள வாத்தியங்கள் முழங்குகின்றன. பெண்களின் வாழ்த்தொலி வானையே பிளக்கின்றது. பெண் இருக்கும் நகரை இந்த மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் நெருங்குகிறது. அந்தச் சமயத்தில் ஒரு சிறு ஆட்டு மந்தையைச் சிலர் ஓட்டிச் செல்வதை யானை மீது ஊர்ந்து வரும் ராஜகும்மாரன் பார்க்கிறான். 'இந்த மந்தை எங்கே செல்கிறது. எதற்காகச் செல்கிறது?' என்று கேட்கிறான் ராஜகுமாரன். பக்கத்தில் வந்தவர்களில் ஒருவர் 'இந்த ஆடுகள் மணப் பெண் இருக்கும் அரண்மனைக்கே செல்கின்றன. அங்கு அவைகளைக் கொன்று கறி சமைத்து, திருமணம் காண வந்தவர்களுக்குச் சிறந்த விருந்தொன்று நடத்தப்படும்' என்கிறார். அவ்வளவுதான்; யானை மீதிருந்து மணமகன் கீழே குதித்து விடுகிறான். தன் திருமணத்துக்காக இத்தனை ஆடுகள் பலியாவதா? இப்படித்தான் உலகம் உயிர் வதை மூலமாக முன்னேறுகிறதா என்று எண்ணிய வனாய் அந்த உலக வாழ்வையே துறக்கத் தீர்மானித்து விடுகிறான்.

'விடு விடு'வென்று காட்டுக்கே ஓடுகிறான். உலக இன்பங்களை வெறுத்துக் கடுந் துறவு பூணுகிறான்; அருந்தவமே ஆற்றுகிறான். ராஜகுமாரன் இப்படித் துறவு பூண ஓடிய விவரத்தை மணமகளாக இருந்த ராஜகுமாரி கேள்விப் படுகிறாள். அவள் இதயத்திலும் கருணை பிறக்கிறது. அவளுமே ஓடுகிறாள் ராஜகுமாரன் இருந்த காட்டுக்கு. அங்கேயே ராஜகுமாரனுடன் சேர்ந்திருந்து தவம் இயற்றுகிறாள். பின்னர் இருவரும் தங்கள் தபோ பலத்தால் அழியாத சாம்ராஜ்யமாகிய முக்திப் பேறு பெறுகின்றனர்.

இப்படி ஒரு கதை. இப்படித் துறவு பூண்ட ராஜகுமாரன்தான் நேமிநாதன். அவனுடன் சேர்ந்து துறவியான ராஜகுமாரிதான் ராஜுலம். இது நடந்தது குஜராத்திலுள்ள கிர்னார் காட்டில் என்று ஜைன இலக்கியம் கூறுகிறது. இந்த நேமிநாதரே ஜைன தீர்த்தங்கரரில் ஒருவர். அந்தத் தீர்த்தங்கரருக்கு அழகிய கோயில் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. அந்தக் கோயில் இருக்கும் இடம் ஒரு மலைச் சிகரம். அதனை அன்று அற்புத சிகரம் என்றனர். இன்றோ அற்புதம் என்ற பெயர் குறுகி அபூசிகரம் என்றிருக்கிறது. அந்த அற்புத சிகரத்தில் இரண்டு பிரபல சிற்பக் களஞ்சியமான கோயில்கள் இருக்கின்றன. அந்தக் கோயிலில் ஒன்றே நேமிநாதர் கோயில். இன்னொரு கோயில் அந்த நேமிநாதருக்கும் முந்திய தீர்த்தங்கரரான ஆதிநாதர் கோயில். இனி அபூமலைச் சிகரத்தை நோக்கி நாம் நடக்கலாம்.

அபூசிகரம் இன்றைய ராஜஸ்தான் ராஜ்யத்தில் ஆரவல்லி மலைத் தொடரில் இருக்கிறது. கடல் மட்டத்துக்கு மேல் சுமார் நாலாயிரம் அடி உயரத்திலுள்ள அபூசிகரம் செல்ல நாம் அகமதாபாத்திலிருந்து டில்லி செல்லும் ரயில் பாதையில், அபூரோட் என்ற ஸ்டேஷனில் இறங்க வேண்டும். அந்த ஸ்டேஷனில் இறங்கிக் காரிலோ பஸ்ஸிலோ பதினெட்டு மைல் மலை மேல் சென்றால், அபூநகரம் வந்து சேருவோம். அடர்ந்த காடுகள், பசும் புல் தரைகள், அருவி பாயும் ஆறுகளைக் கடந்து இந்தப் பாதை செல்கிறது. ரோடு அவ்வளவு சிறப்பாக இல்லாவிட்டாலும், வசதியாகச் சென்று அடைதல் கூடும்.

அபூ சிகரத்தில் உள்ள அதிசயக் கோயில்களையும் அற்புதச் சிற்பங்களையும் சென்று



காணுமுன் அபூவின் பழைய வரலாற்றையும் கொஞ்சம் தெரிந்து கொள்ளுதல் நல்லதல்லவா? அபூ மலையைப் பற்றி இரண்டு வரலாறுகள் இருக்கின்றன. இரண்டுமே பழைய புராண வரலாறுகள்தாம். ஆதி காலத்தில் அபூ ஓர் அடர்ந்த காடாக இருந்திருக்கிறது. இங்கு பல முனிவர்கள் இருந்து தவம் செய்திருக்கின்றனர். அப்படித் தவம் செய்த முனிவர்களில் ஒருவர் வசிஷ்டர். அவருடைய பசுவான நந்தினி ஒரு நாள் ஒரு பெரிய பள்ளத்தில் விழுந்து விடுகிறது. அந்தப் பள்ளத்திலிருந்து பசுவை வெளியேற்றுவது மிக்க சிரமமான காரியமாக இருந்திருக்கிறது. பசுவை வெளியேற்றிய பின் வசிஷ்டர் சிவனைப் பிரார்த்திக்கிறார். அந்தக் கிடுகிடு பாதாளத்தை நிரப்பி விடும்படி வேண்டியிருக்கிறார். வசிஷ்டர் விரும்பியபடி சிவபெருமானும் அற்புதன் என்ற பெயர் படைத்த ஒரு பெரிய நாக சர்ப்பத்தை நிரப்பும்படி உத்தர விட்டிருக்கிறார். உத்தரவுப்படியே அற்புதனும் பல மலைகளைப் பெயர்த்தெடுத்து அந்தப் பள்ளத்தில் போட்டு நிரப்பியிருக்கிறான். அப்போது அந்தப் பிரதேசமே கிடுகிடுத்திருக்கிறது. சிவபெருமான் ராவணன் கைலை மலையை அசைத்த போது செய்தது போல் தன் பெரு விரலை ஊன்றி மலையின் அசைவை நிறுத்தியிருக்கிறார். அப்படி அற்புதன் செய்த சேவையினால் ஏற்பட்ட மலைக் குன்றையே அற்புதக் குன்று என்று நாமகரணம் செய்திருக்கின்றார் சிவபெருமான். — இது ஒரு கதை.

மற்றொரு கதையோ —

இந்தக் காட்டில்தான் கௌதம முனிவர் அவரது துணைவியான அகல்யையுடன் வாழ்ந்து வந்திருக்கிறார். இந்தக் கௌதமரது சிஷ்யனாய் உதங்கர் வந்திருக்கிறார். அவருடனேயே தங்கிக் குருகுல வாசம் செய்திருக்கிறார். பதினாறு வருஷ காலம் இப்படித் தங்கியிருந்து பூரண ஞானம் பெற்றுத் தம் இருப்பிடத்துக்குத் திரும்ப எண்ணுகிறார் உதங்கர். இப்படித் திரும்பும் போது குருவினிடம் தாம் என்ன தட்சிணை கொடுக்க வேண்டும் என்று கேட்டிருக்கிறார். குரு பத்தினியான அகலிகையோ குருவையும் முந்திக் கொண்டு — சௌதேச முனிவரது மனைவி அணிந்திருக்கும் குண்டலங்களைக் கொணர்ந்து கொடுக்கும்படி கேட்டிருக்கிறாள். உதங்கரும் மிக்க சிரமத்துடன் சௌதேசரது மனைவியை அணுகி அவளது குண்டலங்களைப் பெற்றுத் திரும்பியிருக்கிறார். திரும்பும் வழியில் களைப்பு மிகுதியால் ஒரு மரத்தடியில் தங்கி அயர்ந்து தூங்கியிருக்கிறார். அந்தச் சமயம் அம்மரத்தில் இருந்த நாகசர்ப்பம் ஒன்று இறங்கி வந்து குண்டலங்களை எடுத்துச் சென்றிருக்கிறது. சிரமத்தோடு கொண்டு வந்த குண்டலங்களை இழந்து விட்டோமே; என்று உதங்கர் வருந்தி, மலைகளுக்கெல்லாம் அரசனை இமவானிடமே முறையிட்டிருக்கிறார். இமவானும் தனது புத்திரர்களில் ஒருவனான நாக அற்புதனிடம், குண்டலங்களை அந்தப் பாம்பினிடமிருந்து மீட்டுத் தரச் சொல்லியிருக்கிறான். தந்தையின் கட்டளைப்படியே அற்புதன் குண்டலங்களை மீட்டு உதங்கரிடம் சேர்த்திருக்கிறான். உதங்கரும் குருபத்தினி கேட்ட குருதக்ஷிணையைக் கொடுத்து விட்டுத் தம் இடம் திரும்பியிருக்கிறார். உதங்கன் குண்டலங்களைப் பெற உதவிய அற்புதன் பெயராலே அந்த மலைச் சிகரம் அற்புத சிகரம் என்று அழைக்கப்பட்டிருக்கிறது. அற்புதம் அபூ என்று பின்னர் குறுகியுமிருக்கிறது.

அபூ நகரத்தைச் சென்றடைந்ததும் நம் கண் முன் வருவது ஒரு பெரிய ஏரிதான். அதை நக்கி ஏரி என்கின்றனர். அதற்கும் ஒரு கதை வழங்குகிறது.

பாஷ்கலி என்று ஓர் அசுரன். அசுரன் என்றாலே தேவர்களுக்கு இடுக்கண் செய்திருப்பான் என்பதுதான் தெரியுமே. அந்த அசுரனது கொடுமைகளைத் தாங்க இயலாது தேவர்கள் பிரமனிடம் முறையிட்டிருக்கின்றனர். பிரம்மனும் அவர்களை இந்த அற்புத மலையில் தங்கியிருக்கச் சொல்லியிருக்கிறார். அப்படி இத் தலத்துக்கு வந்த தேவர்கள்,



அசுரனின் பார்வையிலிருந்து ஒதுங்கியிருக்க, தங்கள் நகத்தாலே பூமியைக் கீறி ஏற்படுத்திய ஏரிதான் நக்கி என்று பெயர் பெற்றிருக்கிறது. ஏரியின் தென்புறத்தில் ரகுநாத்ஜி கோயில் இருக்கிறது. பதினைன்காம் நூற்றாண்டில் ராமானந்தர் என்பவரால் இந்த ரகுநாதர் ஆலயம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

இந்த ஏரிக் கரையிலிருந்து நான்கு ஐந்து மைல் வடமேற்கே சென்றால் அற்புத தேவி கோயில் அசலேசுவரர் கோயில், அனுமான் ஆசிரமம், வசிஷ்டர் ஆசிரமம் முதலியவைகளைக் காணலாம். வசிஷ்டர் ஆசிரமத்தில் உள்ள கோயிலில், ராமனும் லக்ஷ்மணனும் இருபுறமும் இருக்க இடையே வசிஷ்டர் வீற்றிருக்கும் கோலத்தில் இருக்கிறார். ஆனால் நாம் வந்தது இந்தக் கோயில்களைக் காண அல்லவே. அற்புத மலையிலுள்ள அதிசயக் கோயில்களைக் காண அல்லவா என்று ஞாபகப்படுத்திக் கொண்டு கொஞ்சம் கிழக்கு நோக்கி நடந்தால் டில்வாடா என்ற பகுதிக்கு வந்து சேருவோம். கோயிலின் வெளித் தோற்றத்தைக் கண்டால் அது நமக்கு மிகவும் ஏமாற்றத்தையே அளிக்கும். ஆனால் அந்த வாயிலைக் கடந்து உள்ளே நுழைந்ததும், நாம் இந்த உலகில் தான் இருக்கிறோமா இல்லை அதிசயமான தேவர் உலகத்துக்கே வந்து விட்டோமா என்று தோன்றும். அப்படி நம்மை அதிசயிக்க வைக்கும் கோயில்தான் ஆதிநாதர் கோயில். என்றாலும் அந்தக் கோயில் ஆதிநாதர் பெயரால் வழங்கப்பட வில்லை. அந்தக் கோயிலைக் கட்டிய விமலஷா என்பவர் பெயரால் விமலவாசிஹி என்றே அழைக்கப்படுகிறது. கோயில் முழுதும் ஒரே சலவைக் கல்மயம். கோயில் வாயிலிலேயே இந்தக் கோயில் முதலாம் பீமதேவரது ஆஸ்தானத்தில் இருந்த அமைச்சன் விமலஷாவினால் 1032-ம் ஆண்டு, பதினெட்டு கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டதென்று குறிப்பு காணப்படுகிறது.

இக்கோயிலை விமலஷா கட்டுவதற்குக் காரணம் என்ன? விமலஷாவின் வழிபாடு தெய்வம் அம்பாஜி. அப்படியிருந்தும் ஜைனர்களின் இருபத்திமூன்றாவது தீர்த்தங்கரரான பார்சவநாதருக்கு 360 கோயில்கள் கட்டியிருக்கிறான் இந்த விமலஷா. இதனால் அம்பாஜி கடும் கோபம் அடைகிறாள். அவள் கோபத்துக்கு அஞ்சி விமலஷா ஓடி ஒளிகிறான். அம்பாஜியும் அவன் கட்டிய கோயில்களை அழித்து விடுகிறாள். கடைசியில் அந்த அம்பாஜி கட்டளை இட்டபடியே டில்வாடாவில் முதல் தீர்த்தங்கரராகிய ஆதிநாதருக்கு இந்தக் கோயில் கட்டியிருக்கிறான். கோயில் உள் புறத்தில் ஒரு சுற்று மண்டபம் வராந்தாவாக அமைந்திருக்கிறது. அதன் நீளம் 140 அடி அகலம் 90 அடி. அந்த மண்டபத்தைத் தாங்கி நிற்பவை சிறந்த சிற்ப வேலைப்பாடு அமைந்த சலவைக் கல் தூண்கள். இந்த மண்டபத்தைச் சுற்றி 52 தீர்த்தங்கரரின் வடிவங்கள் அமைக்கப்பட்ட பல சிறு கோயில்கள். அங்கும் சுவர், விதானம், தூண் தரை எல்லாம் சலவைக் கல்தான். தீர்த்தங்கரர் எல்லோருமே ஒரே அச்சில் வார்த்தவர்கள் போல்தானிருப்பார்கள். அவர்களது பாதங்களினடியில் செதுக்கியிருக்கும் பதுமம் முதலியவைகளைக் கொண்டுதான் அவர்கள் யார் என்று தெரிந்து கொள்ள வேணும்.

இந்தக் கோயில் கட்டக் காரணமாயிருந்த அம்பாஜிக்கு, கோயிலின் தென் மேற்கு மூலையில் ஒரு சந்நிதி. இவற்றைப் பார்த்து விட்டுத்தான் முற்றத்துக்குள் இறங்க வேண்டும். முற்றம் திறந்தவெளி முற்றமல்ல. நாற்பது தூண்களால் தாங்கப்பட்ட மண்டபம் அது. அந்த மண்டபத்துக்கு நடுநாயகமாய் எட்டு சிறந்த வேலைப்பாடமைந்த தூண்கள் தாங்கி நிற்கும் விதானம் ஒன்று. அந்த விதானத்தில் லஸ்தர் குளோப்புகள் எல்லாம் சலவைக் கல்லில் செய்திருக்கிறார்கள். அந்த விதானத்தில் சரஸ்வதி லட்சுமி போன்ற வடிவங்கள். இந்த மண்டபத்தைக் கடந்துதான் ஆதிநாதர் இருக்கும் கருவறை. அந்தக் கருவறையின் முகப்பிலே ஒரு சிறு மண்டபம். அங்கும் பல தூண்கள், விதானம் எல்லாம் சிற்ப வேலைகள் நிறைந்த சலவைக் கற்களால் ஆனவை. இக்கோயிலை விட்டு வெளியே வந்தால் வாயிலில் ஒரு சிறு கோயில். அதனை 'ஹத்திகானா' என்று அழைக்கின்றனர். அங்கு பத்து யானைகள் சலவைக் கற்களால் ஆனதாயிருக்கின்றன. இவற்றுக்கெல்லாம் நடுநாயகமாய் ஒரு பெரிய யானை மீது ஏறியிருப்பவர்தான் விமலஷாவின் வடிவம் என்பர்.

இந்த டில்வாடா என்னும் பகுதியில் இருக்கும் ஜைனக் கோயில்கள் இன்னும் நான்கு என்றாலும் அதில் முக்கியமானது ஒன்றே ஒன்றுதான். அதுதான் 'லூணவாசிஹி' என்னும் நேமிநாதர் கோயில். அவரே இருபத்திரண்டாவது தீர்த்தங்கரர் என்று ஜைன சரித்திரம் கூறுகிறது. இக்கோயிலைக் கட்டியவர்கள் வாஸ்துபாலா, தேஜ் பாலா என்னும் சகோதரர்கள். இவர்கள் இக்கோயிலைப் பன்னிரண்டு கோடி ரூபாயில் 1231ம் வருஷம் கட்டி முடித்திருக்கின்றனர். தங்கள் தமையனை லூணா என்பவன் பெயரைக் கோயிலுக்குச் சூட்டியிருக்கின்றனர். இந்தக் கோயில் அமைப்பும் அந்த விமலவாசிஹி கோயிலைப் போலத்தான் என்றாலும் இங்கு சிறப்பாயிருப்பது வட்ட வடிவமான விதானம்தான். இன்னும் தூண்கள் மேலே அமைத்திருக்கும் தோரணங்கள் ஏதோ துணியால் கட்டப்பட்டவை தானோ என்று தோன்றும். கூர்ந்து நோக்கினால் அவையும் சலவைக் கல்லால் ஆனவை என்று அறிவோம். இங்கு நேமிநாதர் சந்நிதியை அடுத்த மண்டபத்தில் இரண்டு பக்கத்தில் இரண்டு மாடங்கள் அமைத்து அதில் இரு தீர்த்தங்கரரைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அவைகளை தூராணி, ஜிதானி ஆலயம் என்கின்றனர். இவைகள் ஒவ்வொன்றையும் கட்ட ஒன்றே கால் லட்சம் ரூபாய் ஆயிற்றாம். அந்தத் தொகை முழுவதையும், வாஸ்துபாலா, தேஜபாலா சகோதரர்களின் மனைவியரே கொடுத்தார்களாம்.

அற்புத மலையில் உள்ள அதிசயமான கலைக் கோயில்களைக் கண்டபின், 'அதிசயம் கண்டாமே, அதிசயம் கண்டாமே' என்று கூத்தாடி மகிழலாம் அல்லவா?

ரொட்டி
பிஸ்கெட்
கேக்
பன்
சப்பாத்தி
பூரி



இல்லாளுக்குத்தான் சூரியன் மார்க்—மைதா, சூஜி, ஆட்டா ஆகியவைகளைக் கொண்டு விதவிதமான நாவூறும் உணவுப் பொருட்கள் தயார் செய்ய எவ்வளவு பிரியம்!

சூரியன் மார்க்—மைதா, சூஜி & ஆட்டா வைட்டமின்கள், ப்ரோடீன், கார்போஹைட்ரேட்டுகள் ஆகிய உணவுச் சத்துக்கள் நிறைந்தவை. சுகாதார முறையில் கைபடாமல் தயாரிக்கப்படுபவை.



**சூரியன் மார்க்**
**மைதா, சூஜி, ஆட்டா**

# செஞ்சுரி ப்ளவர் மில்ஸ் லிட்.

சென்னை-1 மில்ஸ்: பெரம்பூர்
போன்: 21043, 21044, 21045. தந்தி: "MATHOORAN"

EP-CFM-4

## அத்தியாயம் இருபத்துமூன்று

# திடீர் விஜயம்



சுகந்த கனவுகளில் மனத்தைச் சுகிக்க விட்டவாறு திருப்பருத்திக் குன்றும்வார் கோயிலைச் சார்ந்த குரா மரத்தடியில் நின்று, வீதியின் கடைக்கோடிக்குச் சென்று விட்ட உத்தமசீலியையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன், ''மாமன்னர் அவர்களுக்கு என் மனம் கனிந்த வாழ்த்துக்கள்!'' என்ற இதமான குரல் கேட்டுச் சட்டென்று திரும்பினான்.

அருகப் பெருமானைத் தரிசித்ததால் ஏற்பட்ட ஆனந்த மலர்ச்சியுடன் அப்போதுதான் கோயிலிலிருந்து வெளியேறிய திரமிள சமண சங்கத் தலைவரான சமந்தபத்திரர் மகிழ்ச்சி மேவிய புன்முறுவலோடு அவனை நோக்கி வந்தார்.

கண்ணின் வழியாக நெஞ்சத்தில் புகுந்து நறுமணம் பரப்பிக் கொண்டிருந்த இனிய உணர்ச்சிகளைக் கலைத்துக் கொண்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன், ''வாருங்கள், அடிகளே! நன்னலம் தானே?'' என்று அகமும் முகமும் மலர வரவேற்றான்.

யானைத் தந்தம் போன்ற அவனது அழகிய கரங்களை மிருதுவாகப் பற்றித் தம் கண்களில் ஒற்றிக் கொண்ட சமந்தபத்திரர், ''மன்னரவர்களை இந்தப் புனிதமான இடத்தில் சந்திக்க நேர்ந்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்'' என்றார். அவருடைய மனத்தில், 'முன்னறிவிப்போ பக்கத்துணை பாதுகாப்போ இன்றித் திடீரென இவ்வூருக்கு இவர் விஜயம் செய்யக் காரணம் என்னவாயிருக்கும்?' என்ற கேள்வி எழுந்தது.

அதைப் புரிந்து கொண்டவன் போல் மெல்லச் சிரித்த பரமேசுவரவர்மன், ''அடிகளார் என்

# பத்தினிக் கோட்டம்

## ஜெகசிற்பியன்

வருகையைப் பற்றிப் பெரிதாக ஏதும் நினைக்க வேண்டாம். பெருவளநல்லூரிலிருந்து காஞ்சிக்குப் போகிற வழியில் தங்களையும், சேதியக் கலைஞர் பரவாதிமல்லரையும் சந்திக்க வேண்டும் என்று விரும்பினேன். அவ்விருப்பத்தில் ஒன்று எளிதாகவும் விரைவாகவும் இப்போது நிறைவேறி விட்டது'' என்றான். ''ஆம், அடிகளே! தாங்களும் தங்களைச் சார்ந்த சமணப் பெரியார்களும் பல்லவ நாட்டின் விடுதலைக்காக ஆற்றிய பெருந் தொண்டுகளையும், மகத்தான தியாகங்களையும் முத்தரையரின் வாயிலாகக் கேள்விப்பட்டு மனம் பூரித்தேன். எதிரிகளால் ஏற்படவிருந்த உயிரபாயத்துக்களையும் பொருட்படுத்தாமல் சிரவண பெள்குளத்து அகளங்க அடிகளுடன் தாங்களும் சேர்ந்து விடுதலைப் போருக்கான எழுச்சியை என் நாட்டு மக்களிடையே ஊட்டினீர்கள் என்பதை அறிந்து இதயம் நெகிழ்ந்துமகிழ்ந்தேன். அந்தப் பயன் கருதாப் பணிகளுக்கெல்லாம் எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளவே இங்கு வந்திருக்கிறேன்.''



அவனுடைய அன்பு மொழிகளைக் கேட்டுச் சமந்தபத்திரரின் உள்ளம் குளிர்ந்தது. ஆயினும் அவனது திடீர் விஜயத்துக்கு அவன் சொன்னது மட்டுமே காரணமாயிருக்கும் என்று அவர் கருதவில்லை. ஏனென்றால், விடுதலைப் போருக்குப் பின் பல்லவ நாட்டில் ஏற்பட்டுள்ள குழப்ப நிலையையும் அதற்குரிய காரணங்களையும் அவர் நன்கு அறிந்தே இருந்தார். எனவே, பல்லவ மன்னனின் இப்போதைய ஒவ்வொரு செயலும் பொருள் படைத்ததாகவே இருக்கும் என்றும், அந்த வகையில் இங்கு அவன் வந்திருப்பதற்கு வேறு முக்கிய காரணமும் இருக்கலாம் என்றும் அவருக்குத் தோன்றியது. இவ்வூகத்தைச் சிறிதும் வெளியே காட்டிக் கொள்ளாமல், ''மன்னர் அவர்களின் பேரன்புக்கு என் மனப் பூர்வமான நன்றி!'' என்றார் இனிய மென்குரலில்.

சற்று முன் உத்தமசீலி சென்ற வீதிப் பக்கம் தன் பார்வையை ஓட்டிப் பார்த்து விட்டுத் திரும்பிய பரமேசுவரவர்மன், ''அடிகளாரிடம் ஒரு விஷயம். நமது சேதியக் கலைஞர் இப்போது இவ்வூரில்தானே தங்கியிருக்கிறார்?'' என்று தன்னை மீறிய ஆவலுடன் வினவினான்.

''ஆம், அரசே! எங்கள் சங்கப் பள்ளியைச் சார்ந்த ஒரு தனி இல்லத்தில்தான் தங்கியிருக்கிறார். ஆனால் தற்சமயம் அவர் இவ்வூரில் இல்லை. கூரத்தில் நிர்மாணமாகிக் கொண்டிருக்கும் அவரது புதிய இல்லத்தைப் பார்வையிடுவதற்காகப் போயிருக்கிறார்'' என்று சொன்ன சமந்தபத்திரர் புன்முறுவலுடன் மேலும் கூறினார்: ''ஆந்திர இளவரசி உத்தமசீலியார் கூட அவரைப் பார்ப்பதற்காக இவ்வூருக்கு வந்து அவருடைய இல்லத்தில்தான் தங்கியிருக்கிறார். அதனால் அவர் இன்றோ நாளையோ திரும்பி வந்துவிடலாம்.''

இதைக் கேட்டுத் தன் மனத்திலிருந்த பெருங் கவலை நீங்கினாற்போல் முகம் மலர்ந்த பரமேசுவரவர்மன், பதிலேதும் சொல்லாமல் மெல்லத் தலையசைத்துக் கொண்டான்.

சமந்தபத்திரர் அவனைக் கூர்ந்து நோக்கியவாறு, ''மன்னர் அவர்களுக்கு இன்னொரு

விஷயமும் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். அதாவது, ஆந்திர இளவரசியாருடன் சோழஇளவரசி இளங்கோப்பிச்சியும் இப்போது இங்குதான் இருக்கிறார்'' என்று இழுத்தாற்போல் கூறினார்.

இதையும் மௌனமாகக் கேட்டுக் கொண்ட பரமேசுவரவர்மனின் வதனத்தில் ஓர் ஆழ்ந்த அமைதி நிலவியது. ஆயினும் அவன் எதைப் பற்றியோ தீவிரமாகச் சிந்திக்கிறான் என்பதற்கு அறிகுறியாக அவனது புருவக்கோடுகள் நெளிந்து வளைந்தன.

சில விநாடிகளுக்குப் பின் ''வாருங்கள் அடிகளே, போவோம்!'' என்றவாறு தன் புரவியை நடத்தி அழைத்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அவன் இப்போது உத்தமசீலி தங்கியிருக்கும் இல்லத்துக்குப் போகிறானா, அல்லது சமண சங்கப் பள்ளிக்கு வருகிறானா என்ற விவரம் புரியாமல் அவனோடு சேர்ந்து நடந்தார் சமந்தபத்திரர்.

* * *

**கா**ஞ்சியிலிருந்து சுமார் மூன்று குரோசத் தொலைவுக்கு அப்பால் வளம் கொழிக்கும் சிற்றூராக அமைந்து, சாந்தி தேவனின் தவச் சாலை போல் விளங்கி வந்த கூரம், கடந்த சில மாதங்களாகத் திருவிழாக் கோலம் பூண்ட மாதிரி சுறுசுறுப்பும் உற்சாகமுமாகக் காணப்பட்டது. அவ்வூர் மக்கள் ஒவ்வொருவரும் தமக்கு ஏதோ கிடைக்கப் பெறாத பெரும் பேறு ஒன்று கிடைத்து விட்டாற் போன்ற மகிழ்ச்சிப் பெருமிதத்தில் திளைத்துக் கொண்டிருந்தனர்.

பல்லவ நாட்டின் கீர்த்தி வாய்ந்த சேதியக் கலைஞரான பரவாதிமல்லர் தம் வாசஸ்தலமாக இந்தச் சின்னஞ் சிறு கிராமத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறார் என்னும் விஷயமே அவர்களை அவ்வாறு குதூகலக் களிப்பில் குளிப்பாட்டி விட்டிருந்தது!

கூரம் கிராமத்தின் மேலண்டைப் புறத்தே இயற்கை வனப்பு நிறைந்த ஓரிடம். அங்கே கீற்றோலைகளால் வேயப் பெற்ற உயரமான கூரைப் பந்தல் ஒன்று காணப்பட்டது. அந்தப் பந்தலைச் சுற்றிச் சிறு சிறு கூடாரங்கள் போடப்பட்டிருந்தன. அவற்றில் நூற்றுக்கணக்கான சிற்பிகள் அமர்ந்து எழில் மிக்க சிற்பங்களையும், 'கலைச் சிறப்பு' வாய்ந்த கல்தூண்களையும் செதுக்கி உருவாக்குவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். மற்றோர் இடத்தில் கல்தச்சர்கள் வரிசை வரிசையாக உட்கார்ந்து கருங்கற்களை அழகிய சதுரப் பலகைகளாக இழைத்து மலை போல் அடுக்கிக் கொண்டிருந்தனர். பிறிதோர் இடத்தில் விதான ஓடுகள் அறுத்துச் சூளையிடும் பணி வெகு சுறுசுறுப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இவ்வளவும் சேதியக் கலைஞரின் இல்லத்தை அமைப்பதற்குத் தேவைப்படும் உபகரணங்களா? அப்படியானால் அந்த இல்லம் எங்கே உருவாகிக்கொண்டிருக்கிறது?

அதோ, உயரமாகத் தென்படும் அவ்வோலைக் கூரைப் பந்தலின் உள்ளே தான்.

இது என்ன, விந்தை! வெளியிலிருந்து பார்த்தால் ஒன்றுமே தெரிய

## கடையும் காரணமும்

''**வா**, மணி! வா! என்ன ரொம்ப நாட்களாகக் கண்ணிலேயே காணோம் உன்னை!'' — கடைக்காரர் தம் நண்பனை வரவேற்றார்.

''நம்ம பிழைப்புத்தான் ஊர் சுற்றிப் பிழைப்பாகப் போய் விட்டதே! ஒரு தடவை புறப்பட்டால் எப்பொழுது திரும்பி வருகிறேன் என்று எப்படிச் சொல்ல முடியும்? —ஆமாம், உன் தொழில் எப்படி நடக்கிறது? புது வியாபாரம் பலம்தானே?'' என்று கேட்டான் மணி.



''அதை ஏன் கேட்கிறாய் போ, படுமோசம்! வரும்படி மிகவும் குறைவு. கடை வாடகைக்கே கட்டமாட்டேன் என்கிறது!'' என்றார் கடைக்காரர்!

''சொல்றேனேன்னு கோவிக்கக்காதே! நீ லாபம் வரக் கூடிய தொழிலாகவா தொடங்கி யிருக்கிறாய்?''

''ஏன் இந்தத் தொழிலுக்கு என்ன குறைச்சல்?''

''வர்றவங்களுக்கெல்லாம் நீ செருப்பைக் காட்டினால் எப்படி அப்பா நுழைவார்கள் உன் கடைக்குள்ளே?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் மணி. அவன் நண்பர் வைத்திருந்தது செருப்புக் கடை என்று சொல்லவும் வேண்டுமா?

# ஜலதோஷம், ஜுரம் போன்ற உணர்ச்சி இவைகளிலிருந்து

ஜலதோஷம் ஜுரம் ஆகியவைகளின் முதல் அறிகுறி தென்பட்டவுடனேயே 'ஆஸ்ப்ரோ'வை உட்கொள்ளுங்கள். தலைவலி, பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், தொண்டைப்புண், நரம்புவலி, மற்றும் இதர வலிகளும் நோவுகளுங்கூட ஆஸ்ப்ரோவின் அபாயமற்ற செயல்திறனால் குணமாகின்றன.

'ஆஸ்ப்ரோ'வினுள்ள தீவிர சக்திப்பொருள் மற்றெதையும்விட அபாயமில்லாமல் வலியைப் போக்கக்கூடியது என மருத்துவக்கலை நிரூபித்துள்ளது.

ஒரு தூய மருந்து என்பதால் உலகெங்குமுள்ள லக்ஷக்கணக்கான நோயாளிகளுக்கு, அதிக நிவாரணமளிக்க வைத்தியர்களால் தினந்தோறும் உபயோகிக்கப்படுகிறது. 'ஆஸ்ப்ரோ' எந்தவித அபாயகரமான மருந்துகளும் கலவாதது. ஆகவே நீண்டகாலம் அபாயமின்றி உபயோகிக்கக்கூடியது. 'ஆஸ்ப்ரோ' லக்ஷக்கணக்கானவர்கள் உபயோகிக்கும் குடும்ப மருந்து—உலகிலேயே அதிகம் விற்பனையாகும் வலிநிவாரணி. வை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்.

## துரிதமாகவும் பூர்ணமாகவும் நிவாரணம் பெற

# 'ஆஸ்ப்ரோ'

'ஆஸ்ப்ரோ' வேலைசெய்யும் மூன்று விதங்கள்










## 'ஆஸ்ப்ரோ'

## எவ்வகையிலும் அபாயமற்றது — சிறந்தது

ஒரு நிக்கோலஸ் தயாரிப்பு

லில்லையே? ஆமாம்; உள்ளே உருவாகிக் கொண்டிருக்கும் அந்த இல்லம் முழுமையாகிறவரை யாரும் பார்க்கக் கூடாது என்பதற்காகவே அதனைச் சுற்றி அவ்வளவு உயரமான கூரைப் பந்தல் வேய்ந்து மறைக்கப்பட்டிருந்தது!

இதுகாறும் எளியதோர் இல்லத்தில் இருந்து எளிய வாழ்க்கையே வாழ்ந்து வந்தவரான பரவாதிமல்லர் இப்போது ஏன் இவ்வளவு பிரம்மாண்டமான திட்டத்துடன் கூடிய பெரிய மாளிகையைக் கட்டுவதில் முனைந்திருக்கிறார்? அதுவும் பல்லவ மன்னனிடம் முற்றூட்டாகப் பெற்ற நிலத்தில், பல்லவ அரசாங்கத்தின் நிதி உதவியோடு தம் சொந்த உபயோகத்துக்காக எழுப்பப் பெறும் இல்லத்தைப் பிறர் பார்க்காதவாறு இத்தனை இரகசியமாக அவர் மூடி மறைத்து வைத்திருக்கிறார்?

இதிலே இன்னோர் அதிசயம் இருந்தது. அதாவது, இந்நாள்வரை இறைவனுக்குரிய அரண்மனைகளாகட்டும், மக்களுக்குரிய மாட மாளிகை கூடகோபுரங்களாகட்டும் — இவை எல்லாமே மரம், மண், செங்கல், சுண்ணம் முதலானவற்றைக் கொண்டு கட்டப்பெறுவதுதான் வழக்கம். குடைவரைக் கோயில் வகையைத் தவிர மற்றச் சேதியக் கலை வகைகள் அனைத்துக்கும் இந்தப் பொருட்களையே உபயோகப் படுத்தப்பட்டு வந்தன. ஆனால் இங்கோ, மரம் இல்லை, மண் இல்லை, செங்கல் இல்லை; எல்லாம் கல், கருங்கல்!

நிஜமாகவே பரவாதிமல்லர் தம் குடியிருப்புக்கான இல்லத்தைத்தான் அமைக்கிறாரா? அல்லது ஏதேனும் மந்திர மாயப் பரிசோதனை நடத்திக் கொண்டிருக்கிறாரா?

## அத்தியாயம் இருபத்திநான்கு

# புதிய கிருகம்

“ஆமாம், புஷ்பசேனரே! இது நமக்கு ஒரு சோதனைதான். இந்தப் புதிய சோதனையில் நாம் பெறும் வெற்றி தோல்வியைக் கொண்டே நமது திறமை மட்டுமல்ல; தமிழகத்தின் எதிர்காலச் சேதியக் கலையின் தலைவிதியும் நிர்ணயமாக இருக்கிறது. எனவே, இதன் ஒவ்வோர் அணுவிலும் தம்முடைய உயிர்த் திறனைச் செலுத்தி இப்பெரும் பணியை நம் பிறவிக் கடமையாக ஆற்றி முடிக்க முயல வேண்டும்......”

அந்த உயரமான கூரைப் பந்தலின் அருகில் இருந்த சிறியதொரு கூடாரத்தினுள் சிந்தனை வயப்பட்டவராய் உலாவிக்கொண்டே இவ்வாறு சொல்லி நிறுத்திய சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் தம் எதிரில் பணிவும் பக்தியுமாகக் கை கட்டி நின்றுகொண்டிருந்த ஓர் அழகிய வாலிபரை ஏறிட்டு நோக்கினார்.

அவருடைய பிரதம சீடரான புஷ்பசேனர் என்னும் அந்த வாலிபர், “கலைஞர் பெருமானின் ஆலோசனைகளை அணுவும் பிறழாமல் ஏற்று இவ்வற்புத 'கிருகத்தை'க் கட்டி முடிக்க, நான் வணங்கும் கலைத் தேவியின் பெயரால் இன்று சபதம் ஏற்கிறேன்!” என்று உணர்ச்சிப் பெருக்குடன் கரகரத்தார்.

“மகிழ்ச்சி! மெத்த மகிழ்ச்சி!” எனப் பெருமிதப் புன்னகையுடன் தலையசைத்துக் கொண்ட பரவாதிமல்லர் தம் கையில் சுருட்டி வைத்திருந்த ஒரு நீண்ட பட்டுச் சீலையைப் புஷ்பசேனரிடம் கொடுத்து, “இந்தாருங்கள், கலைஞரே! இதுதான் எனது பல்லாண்டுக் காலப் பெருங் கனவின் மூல பொக்கிஷம். நாம் அமைத்து வரும் புதிய கிருகத்தின் முழுத் தோற்றமும், அதற்குரிய எல்லாச் சேதியக் குறிப்புக்களும் இந்தப் பட்டுச் சீலையிலே அடக்கமாகியுள்ளன. இதை உங்கள் உயிர் போலப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டு, இதிலே காட்டியுள்ள அளவுகள், வடிவங்கள், கணக்குகள் ஆகியவற்றில் மயிரிழைப் பிசகும் நேராமல் அவற்றை அப்படியே சேதிய உருவாக்கி முடிக்கவேண்டியது உங்கள் பொறுப்பு. அவ்வப்போது ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்தி செய்ய நான் தயாராக இருப்பேன். எனினும் இப்போதைக்கு இந்த மூல சித்திரச் சீலையில் குறிப்பிடப் படாத ஒரு முக்கிய விஷயத்தை மட்டும் சுருக்கமாகக் கூறுகிறேன், கவனமாகக் கேளுங்கள்” என்றவர் சில விநாடி சிந்தனைக்குப் பின் தெளிவான குரலில் மேலும் சொன்னார்:

“நாம் எடுக்கவிருக்கும் இந்தக் கிருகத்தின் அமைப்பு முறை தமிழ் நாட்டுக்குத்தான் புதிதே தவிர சளுக்கிய நாட்டில் பிறந்தவர்களான நமக்குப் புதிதல்ல. வாதாபியிலும் வேறு பல இடங்களிலும் சளுக்கிய சித்ரரசனை மங்களேசன் என்பான் எடுப்பித்த இம்மாதிரி கிருகங்கள் பலவற்றை நாம் பார்த்திருக்கிறோம். குறிப்பாக நான்

அவற்றில் பங்கு பெற்றுப் பணியாற்றியும் இருக்கிறேன். அந்த அநுபவத்தால் ஏற்பட்ட ஓர் அற்புதக் கனவை என் தாய்நாடாகக் கொண்டு விட்ட இந்தப் பல்லவ நாட்டில் நிறைவேற்றி வைத்துவிட வேண்டும் என்பது எனது நெடுநாளைய விருப்பமாயிருந்து வந்தது. அவ்விருப்பம் நிறைவு பெற இப்போதுதான் எனக்கு வாய்ப்பும் வசதியும் கிடைத்துள்ளன. வாதாபியில் இருக்கும் இம்மாதிரி கிருகங்களில் பெரும்பாலானவை 'ருத்ர காந்தப் பாணி'யில் அமைந்தவை. ஒரு சில கிருகங்கள் மட்டுமே 'பிரம்ம காந்தப் பாணி'யில் எடுப்பிக்கப் பெற்றுள்ளன. ருத்ர காந்தம் என்பது கிருகத்தின் எல்லா அம்சங்களையும் வட்ட வடிவத்தில் அமைப்பதாகும்; பிரம்ம காந்தம் என்பது சதுர வடிவில் சமைப்பதாகும். எனக்குப் பிரம்மகாந்தப் பாணியில்தான் நாட்டமும் பயிற்சியும் மிகுதி. எனவே தான் இந்தக் கிருகத்தைப் பிரம்ம காந்தப் பாணியில் — அடிமுதல் சிகரம் வரை எல்லா அம்சங்களிலும் ஒரு சதுரத் தன்மை பொருந்துமாறு — அமைக்க விரும்புகிறேன். இதை நீங்கள் மனத்தில் கொண்டு இனி வேலைகளைத் தொடர்ந்து நடத்தலாம்.''

ஆசானின் கட்டளையைத் தலை தாழ்த்தி ஏற்றுக்கொண்டார் சீடர்.

ஏதோ நினைவு வரப் பெற்றவர் போல் சட்டென்று நிமிர்ந்த பரவாதி மல்லர் உறுதியான குரலில், ''புஷ்பசேனரே! ஒரு முக்கிய விஷயத்தை மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். உங்களிடம் நான் கொடுத்திருக்கும் இந்த மூல சித்திரச் சீலை உங்களைத் தவிர வேறு யார் கண்ணிலுமே படக் கூடாது. நாம் நிர்மாணிக்கும் புதிய கிருகத்தின் தோற்றத்தை — அது உருவாகி முடியும் வரையில் — யாருமே அறியக் கூடாது. உங்களுக்குத் துணையாக இங்கே பணிபுரியும் சிற்பிகளோ, கல்தச்சர்களோ, எடுபிடி சிற்றாட்களோ இந்த இரகசியத்தை எக்காரணத்தைக் கொண்டும் யாரிடமும் தெரிவிக்கக் கூடாது. இது என் கண்டிப்பான உத்தரவு'' என்றார்.

''அப்படியே ஆகட்டும், ஐயா !'' என்று மிகுந்த பணிவுடன் பதிலிறுத்தார் புஷ்பசேனர்.

''சரி; நான் ஓர் அவசர காரியமாகத் திருப்பருத்திக் குன்றத்துக்குப் போய் வருகிறேன். கவனப் பொறுப்போடு காரியத்தைத் தொடருங்கள்'' என்றவாறு அந்தக் கூடாரத்தை விட்டு வெளியேறினார் பரவாதிமல்லர்.

புள்ளினங்களின் அநுராக ஒலி கேட்டுத் துயில் நீங்கி எழுந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி தன் அருகே இருந்த மற்றொரு மஞ்சத்தைப் பார்த்தாள். அதிலே துயின்று கொண்டிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சியைக் காணோம். அதிகாலையிலேயே அவள் எழுந்து அந்த இல்லத்துக்குப் பின்புறத்தே ஓடும் வேகவதி ஆற்றில் நீராடிவரப் போய்விட்டாள் போலும்!

எழுந்திருக்கும் போதே என்றுமில்லாத விதமாக இன்று ஏதோ ஒருவித உற்சாகமும் மகிழ்ச்சியும் தன் மனத்தில் நிறைந்திருப்பதை உணர்ந்து வியந்து நின்ற உத்தமசீலி, தானும் ஆற்றங்கரைக்குப் போய் இளங்கோப்பிச்சியுடன் சேர்ந்து நீராடிவிட்டு வர வெளியே வந்தாள். அங்கே அத்தனை அதிகாலையில் நாகோதரன் வந்து நின்று கொண்டிருந்ததைக் கண்டு அவளுக்கு ஒரே வியப்பாகி விட்டது.

''என்ன, நாகோதரா! ஏதேனும் விசேஷச் சேதி உண்டா?'' என்று தன் விற்புருவங்களை வளைத்துக் கொண்டு கேட்டாள்.

''ஆம், அம்மணி! மகிழ்ச்சிக்குரிய பல சேதிகளுடன் தங்களைக் காண வந்திருக்கிறேன்'' என்றான் நாகோதரன் முக மலர்ச்சியுடன்.

வாசற் கூடத்தின் அழகிய தூண் ஒன்றில் சாய்ந்தவாறு அவனைக் கூர்ந்து நோக்கினாள் உத்தமசீலி.

''பல்லவ மன்னர் முன்னறிவிப்பு ஏதுமின்றித் திடீரென்று நேற்று மாலை இந்தத் திருப்பருத்திக் குன்றத்துக்கு விஜயம் செய்திருக்கிறார், தாயே!''

''என்ன? என்ன?'' என்று தன்னை மீறிய துடிப்புடன் ஒரு துள்ளுத் துள்ளி நிமிர்ந்தாள் உத்தமசீலி.

''ஆம், இளவரசி! நமது ஞானத் தலைவர் சமந்தபத்திரரின் சங்கப்பள்ளியில்தான் அவர் இப்போது தங்கியிருக்கிறார்'' என்றான் நாகோதரன்.

உத்தமசீலியின் நெஞ்சம் ஒரேயடியாக விம்மிப் பூரித்தது. அளவுகடந்த மகிழ்ச்சியின் பாரத்தைத் தாள மாட்டாமல் மாதவிக் கொடியென ஒசிந்து வளைந்த அவள், தன்னை மீறிய உணர்ச்சியலைகளின் இன்பக் கொந்தளிப்பால் தான் என்ன செய்கிறோம் என்பதையும் உணராமல், முத்துச் சிலம்பு முரல்வதுபோல் கலகலவெனச் சிரித்துக் கொண்டே சாய்ந்திருந்த தூணை வேகமாக ஒரு சுற்றுச் சுற்றிச் சுழன்று வந்து நின்றாள். (தொடரும்)

## நாற்பத்துநான்காவது அத்தியாயம்

# பொன் விலங்கு

## மணிவண்ணன்

இந்திர நீலப் பூக்களைப் போன்ற அந்தக் கருநீல விழிகளில் தானே இமையாமல் பார்க்கப்படும் ஒரே பொருளாகி விட்டதை எண்ணி அதற்காகவே பெருமைப்படலாம் போலவும் தோன்றியது சத்தியமூர்த்திக்கு. அந்தப் பெருமையால் ஏற்பட்ட மகிழ்ச்சியை அவளுடைய துயரம் நிறைந்த வேண்டுகோள் நினைவு வந்து அழ வைத்தது. மைதீட்டாமலே மைதீட்டினாற் போல் கரியதாயிருந்த அந்த நீலக் கரு விழிகளில் நினைத்தபடி வாழ முடியாமற் போய்விட்ட நிராசைகள் தெரிந்தன. தேர்ந்து பழகிய நாட்டியராணியாகிய அந்தக் கலையரசியின் நிராசையிலும் கூட ஓர் அழகிய பாவம் இருந்தது. அவளுடைய அந்த வனப்பு வாய்ந்த மூக்கின் நுனியில் அழகு நிறைகிற இடம் இதுவே என்று ஒரு முற்றுப் புள்ளி வைத்த மாதிரியும், அழகு இங்கேதான் தனது பரிபூர்ணத் தன்மையை அடைகிறது என்று தீர்மானமாக முடித்த முடிவு மாதிரியும் ஓர் எழில் கொஞ்சித் தெரிந்தது. முதல் முதலாக அவளை இப்போதுதான் பார்க்கிற புதுமையாய்க் கருதிப் பார்க்கலானான் சத்தியமூர்த்தி. இந்த எழில் வெள்ளம் இதற்குரியவனாலேயே தனக்கு ஆத்ம சமர்ப்பணம் செய்யப் பட்டிருக்கிறது என்று நினைப்பதில் அவன் மனம் கர்வப்பட்டது. மாலையினிடையே ஓடும் நார்த் தொடுப்பைப் போல் தன்னுடைய எல்லா எண்ணங்களுக்கும் நடுவே ஓர் இன்றியமையாத உறவாக அவளும் இணைந்திருப்பதை அவனால் உணர முடிந்தது. மூலமாக நடுநிற்கும் அந்த நினைவு தன்னைப் பிணித்திருந்த தன் காரணமாக அதிலிருந்து விடுபட முடியாமலும், விடுபட விரும்பாமலும் கட்டுண்டிருந்தான் அவன். பொற் கிண்ணத்தில் ஒளி நிழல் படிவது போல் மோகினியின் அழகிய சிவந்த முகத்தில் தெரியும் அந்த நேரத்து உணர்வுகளை மதித்து அவள் கேட்ட வாக்குறுதியை அவளுக்குக் கொடுத்தான் சத்தியமூர்த்தி.

''உன்னை நன்றாக வாழ வைக்கவேண்டும் மோகினி! ஆனால் இப்போது நானும் ஒரு விதத்தில் அதைச் செய்ய முடியாத பலவீனனாயிருக்கிறேன். உண்மைதான் என்னுடைய பெரிய பலம். உண்மையை நம்புவதும் தொழுவதுமே என்னுடைய மதம். ஆனால் இன்றைய சமூக வாழ்வின் குழப்பங்களுக்கிடையே அதுவே என்னுடைய பலவீனமாகவும் இருக்கிறது. ஜமீன்தாரிடமும், கண்ணாயிரத்திடமும் பண பலமும், ஆள் பலமும் இருக்கின்றன. என்னுடைய மனோ பலத்தினால் நான் வெற்றி பெற அதிக நாள் ஆகும். அதுவரை உனக்குப் பொறுமையும், தைரியமும் இருக்குமானால், இந்தப் பரந்த உலகில் நீயும் நானும் எங்காவது என்றாவது கணவன் மனைவியாக—ஊரறிய மணந்து வாழலாம்'' என்று சத்தியமூர்த்தி கூறிக்கொண்டே வந்த போது அவள் தன் கண்களில் மறுபடியும் நீர்மல்கக் குறுக்கிட்டுப் பேசினாள்:

''இப்போதே நான் உங்களை மணந்து உங்களோடுதான் வாழ்கிறேன். நீங்களே என் இதயத்தில் தெய்வமாக இருக்கிறீர்கள். உங்களை நினைத்து வாழ்வதாகப் பாவித்தபடியே இறந்து போய் விட்டாலும் கூட என்னால் திருப்தி அடைய முடியும். ஆனால் என்னுடைய அந்த வேண்டுகோளை நீங்கள் எப்படியும் நிறைவேற்றுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அந்த நம்பிக்கையோடுதான் நான் என்னுடைய கடைசி மூச்சைக் காற்றில் கலக்க விடுவேன்.''

''அசடே! உன்னுடைய இந்த அமங்கலமான பேச்சை முதலில் விட்டுவிடு. சாவைப் பற்றிப் பேசாவிட்டால் உனக்குப் பொழுது போகாதோ?''

''சிலபேருக்கு வாழ்வே மகிழ்ச்சி நிறைந்த பொழுது போக்கு உள்ளதாயிருக்கிறது! அதுபோல் எனக்குத் துயரமும், துயரச் சொற்களுமே பொழுது போக்காயிருக்கின்றன'' என்றாள் அவள். இந்தச் சமயத்தில் தனக்குப் பின்னால் யாரோ வந்து நின்றுகொண்டு அப்படி நிற்பதை உணர்த்துகிறாற்போல் கனைப்புக் குரல் கொடுக்கவே சத்தியமூர்த்தி திரும்பிப் பார்த்தான். அவன் தந்தை அங்கே வந்து நின்று கொண்டிருந்தார்.

கை நிறைய ஒரு கட்டு டைல்களோடும், கணக்குப் புத்தகங்களோடும் சத்தியமூர்த்தி அப்போது அங்கு வந்து

நின்று மோகினியோடு பேசிக்கொண்டிருப்பதைப் பொறுத்துக்கொள்ள முடியாமல் முகம் நிறைய ஆத்திரத்தோடும் நின்றார் அவன் தந்தை. 'புத்தி கெட்டவனே! நீ ஏன் இங்கு வந்து இவளைப் பார்த்துப்



பேசிக் கொண்டிருக்கிறாய்?" என்று அவனைக் கடுமையான சீற்றத்தோடு கேட்பது போல் இருந்தது அவருடைய பார்வை. சத்தியமூர்த்தியின் மேல் அப்போது அவருக்கு எவ்வளவு வெறுப்பும், ஆத்திரமும் இருந்தன என்பதை நிரூபிப்பவர் போல் — வராந்தாவின் சுவர் ஓரத்தில் வேகமாக நடந்து போய்த் தோட்டத்தில் காறித் துப்பினார். அப்புறம் அவனோடு பேசினால் எவ்வளவு ஆத்திரத்தைக் கொட்டியிருக்க முடியுமோ — அதைவிட அதிக ஆத்திரத்தோடு அவனை எரித்துச் சாம்பலாக்கி விடுவது போல் ஒரு பார்வை பார்த்து விட்டு உள்ளே போனார். அவர் உள்ளே போன சிறிது நேரத்துக்கெல்லாம் யாரோ வேலைக்காரனைப் போல் தோன்றிய முரட்டு ஆள் ஒருவன் சத்தியமூர்த்தியிடம் வந்து, ''நீங்கள் என்ன காரியமாக வந்திருக்கிறீர்கள்? யாரைப் பார்க்க வேண்டும்?'' என்று ஆளைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளாத குறையாகக் கேள்விகளைக் கேட்டான். அதோடு உள்ளேயிருந்து' யாரோ சொல்லி அனுப்பியதற்காக அந்தக் காரியத்தைச் செய்கிறவன் போல மோகினி நின்று அவனோடு பேசிக் கொண்டிருந்த ஜன்னல் கதவையும் மூடுவதற்குத் தயாரானான் வேலையாள். இப்போது தான் அங்கிருந்து புறப்பட வேண்டிய நேரம் வந்து விட்டதைச் சத்தியமூர்த்தி புரிந்து கொண்டான்.

''கடைசியில் என்னை இந்த நரகத்திலேயே விட்டு விட்டுப் புறப்படுகிறீர்களே?'' என்று கேட்பது போல் நீர் மல்கும் கண்களால் மோகினி அவனை நிமிர்ந்து பார்த்தாள். எதிரே தெரியும் தோற்றத்தை நன்றாகக் காண முடியாமல் மறைக்கும் ஜன்னல் கம்பிகளின் மறுபுறத்தில் இருந்த அவளைப் போல் வாய்விட்டு அழமுடியாமல் இதயத்தினால் அழுதுகொண்டு நின்றான் சத்தியமூர்த்தி.

''தைரியமாயிரு! உன்னுடைய தாய்மையைக் காப்பாற்றிக் கொள். உடம்பைத்தான் மனிதர்களால் சிறைப்படுத்த முடியும். இதயத்தையும், எண்ணங்களையும் சிறைப்படுத்த முடியாது. விரும்பியதை அடையமுடியாமற் போவதும், விரும்பாததை அடைந்து விடுவதும் தான் துர்ப்பாக்கியசாலிகளின் வாழ்க்கையாக இருக்கிறது. ஆனால் நீயும் நானும் துர்ப்பாக்கியசாலிகள் இல்லை. மாலையில் மலர்களைப் போல் நம்முடைய எண்ணங்கள் ஒன்றாகத் தொடுக்கப்பட்டிருக்கின்றன.''

''அந்த மாலையிலும் நீங்கள்தான் பூ! நான் வெறும் நார்..''

''இருக்கலாம், மோகினி! ஆனால் பூவைக் கட்டிப்பிணைப்பது நார்தானே?''

அவர்கள் இருவரும் மேலே பேசிக் கொண்டிருந்தவற்றைப் பேசிக்கொள்ள முடியாமல் ஜன்னல் கதவுகள் அடைக்கப்பட்டன. 'இன்னும் அதிகமான மரியாதைக் குறைவு எதுவும் நிகழ்வதற்குள் இங்கிருந்து வெளியேறி விடுவது நல்லதென்று' சத்தியமூர்த்தி அங்கிருந்து மெல்ல நடந்தான். அப்பால் இருப்பதைத் தெரிய விடாத அந்த ஜன்னலின் மூடிய கண்ணாடிக் கதவுகளைத் திரும்பிப் பார்த்தபோது உள்ளே சிறைப்பட்டிருக்கும் சோகங்களை அவை அவனுடைய கண் பார்வையிலிருந்து மறைத்தன. விமான விபத்தில் பூபதி மரணம் அடைந்துவிட்டதைத் தெரிந்து கொண்டதும் தாங்க முடியாத சோகத்தோடு அவன் அந்த மாளிகைக்கு வந்தான். திரும்பும் பொழுதோ பூபதியைப் பறி கொடுத்த சோகத்தை விட மோகினியைச் சந்தித்த சூழ்நிலையின் சோகங்களில் அவன் மனம் அழுந்திப் போயிருந்தது. 'அவளைப் பின் தங்கவிட்டு விட்டுத் தான் மேலே நடந்து போகிறோம்' என்ற நினைவினாலேயே அவனுடைய நடை தளர்ந்திருந்தது. ஜமீன்தாரின் நேர்மையற்ற வாழ்க்கையையும் ஒழுக்க நியாயங்களை மதிக்காத உன்மத்தம் பிடித்த போக்கையும் கண்டு ஒரு சாதாரணத் தோட்டக்காரனிடம் இருக்கிற குமுறலும் கொதிப்பும் கூடத் தன் தந்தையிடம் இல்லாமல் போயிற்றே என்று சத்தியமூர்த்தி வருந்தினான். என்ன மடமையான சமூக வாழ்க்கை இது? கோவிலில் அரை மணி நேரம் தெய்வத்தைத் தொழுகிறவர்கள்—அதே கோவிலுக்கு வெளியே வந்து இருபத்து நான்கு மணி நேரமும் ஒழுக்கமோ, நற்குணமோ இல்லாத வெறும் பணக்காரர்களைத் தொழுது வயிற்றைக் கழுவ வேண்டியிருக்கிறது. 'துர்த் தேவதைகளை வழிபடுகிறவர்களுக்கு உடனடியாகப் பலிக்கிற சில மந்திர தந்திர சாதனைகள் கிடைப்பதுபோல் இந்தக் குணக்கேடான வெறும் பணக்காரர்களைத் தொழுகிறவர்களுக்கும் சில நிலையில்லாத சௌகரியங்கள் கிடைக்கின்றன' என்று மனம் வெறுத்த நிலையில் சிந்தித்துக் கொண்டே சென்றான் அவன்.... இரயில்வே மேற்பாலத்து இறக்கத்தில் பஸ் நிலையத்தருகே ஒரு சிறுவன் செய்தித் தாளின் மாலைப் பதிப்பை விற்றுக் கொண்டே எதிரே வந்தான். விமான விபத்தைப் பற்றி அறிந்து கொள்வதற்காகச் சத்தியமூர்த்தி அவனிடம் ஒரு செய்தித் தாள் விலைக்கு வாங்கினான்.

விமான விபத்தைப் பற்றிய செய்திகள் விவரமாக வெளியாகியிருந்தன. விபத்தில் மரணமடைந்தவர்களின் பிரேதங்களை அடையாளம் கண்டு

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ் வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.



எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.








மகிழ்ச்சிதரும் நறுமணம் உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

பிடித்து எடுக்கவும் முடியாத அளவுக்குச் சேதம் நேர்ந்திருப்பதாகச் செய்தி பிரசுரிக்கப்பட்டிருந்தது. விமானத்தில் சென்று அகால மரணமடைந்தவர்களைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புக்களும் புகைப்படங்களும் — அவர்களில் மிக முக்கியமானவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளும் கூட அந்தச் செய்தித் தாளில் வெளியிடப்பட்டிருந்தன. தொழிலதிபரும், கல்வித் துறைக்கு எண்ணற்ற நிறுவனங்கள் மூலமாகவும், தம்முடைய கல்லூரி மூலமாகவும் பணி புரிந்திருப்பவருமாகிய பூபதி-பத்மஸ்ரீ விருது பெறுவதற்கு டில்லி போய்க் கொண்டிருந்த போது விபத்துக்குள்ளாகி இறந்துவிட்டதைப் பற்றிப் பத்திரிகை ஆசிரியர் விமான விபத்தைப் பற்றித் தனியே எழுதியிருந்த தலையங்கத்தில் வருத்தப் பட்டிருந்தார். விபத்து நடந்த இடத்துக்குப் பூபதியின் மகள் பாரதியும், மஞ்சள்பட்டி ஜமீன்தாரும், கண்ணாயிரமும் புறப்பட்டுப் போகிறார்கள் என்ற செய்திகூடப் பத்திரிகையில்வந்திருந்தது. மறுநாள் மல்லிகைப் பந்தலுக்குப் போய் ஸ்தாபகர் தின விழாவுக்கு ஏற்பாடு செய்வதற்குப் பதில் தானே அநுதாபக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டியிருப்பதை நினைத்து விதியின் கொடுமைக்கு மனம் கலங்கினான் சத்தியமூர்த்தி. இரவு வீட்டுக்குப் போய்த் தன் தந்தையைச் சந்தித்தபோது அந்தச் சந்திப்பையே வெறுக்கும் மன நிலையோடு இருந்தான் அவன். தந்தையோ அவனிடம் நேரில் பேச விரும்பாமல் தாயிடம் அவனைப் பற்றிக் குறை சொல்லிக் கோபித்துக் கொண்டிருந்தார்.

பாரதியை மதுரையிலேயே சந்தித்து அவளுடைய தந்தையின் மரணத்துக்குத் துக்கம் விசாரித்து அநுதாபம் தெரிவிக்க எண்ணியிருந்தான் அவன். இப்போதோ அவள் விபத்து நடந்த இடத்துக்குக் கண்ணாயிரத்தோடும், ஜமீன்தாரோடும் புறப்பட்டுப் போய் விட்டதாகத் தெரிந்ததனால் அவன் தன்னுடைய தீர்மானத்தை மாற்றிக் கொண்டு மல்லிகைப்பந்தலுக்குப் புறப்பட வேண்டியிருந்தது. சரசுவதி பூஜையன்றைக்கு மாலை இரயிலில் அவன் மல்லிகைப் பந்தலுக்குப் புறப்பட்டு விட்டான். இரயிலில் அவன் இருந்த பகுதியில் உடன் வந்தவர்கள்கூட அந்தப் பயங்கரமான விமான விபத்தைப் பற்றியே பேசிக் கொண்டு வந்தார்கள். மோகினியின் துயரங்கள், பூபதியின் அகால மரணம், தன் தந்தையின் போக்கு, எல்லாவற்றையும் நினைத்து நினைத்து, உற்சாகம் இழந்த நிலையில் பயணம் செய்தான் அவன். மல்லிகைப் பந்தல் ரோடு நிலையத்தில் பஸ் மாறி மலைக்குப் போய்ச் சேர்ந்தபோது மழை பிடித்துக் கொண்டது. மல்லிகைப் பந்தல் பஸ் நிலையத்தில் முழங்கால் நனைகிற அளவு தண்ணீர் பெருகி யிருந்தது. மழை சிறிது நின்றதும் ஒரு ரிக்ஷாவைப் பிடித்து 'லேக் அவென்யூ'வுக்குப் போய்ச் சேரும்போது இரவு பதினொரு மணியாகி விட்டது. குமரப்பன் அறையில் விழித்துக் கொண்டுதான் இருந்தான். உறங்கிக் கொண்டிருந்த தாவர இயல் விரிவுரையாளர் சுந்தரேசனுக்கு இடையூறில்லாமல் — மேஜை விளக்கை மட்டும் போட்டுக் கொண்டு பம்பாயிலிருந்து வெளி வரும் ஆங்கில வார இதழ் ஒன்றிற்குத் தான் வழக்கமாக வரைந்து அனுப்பும் 'கார்ட்டூனை' வரைந்து கொண்டிருந்தான் குமரப்பன். சத்தியமூர்த்தியைப் பார்த்ததும் குமரப்பன் முதல் கேள்வியாகப் பூபதியின் மரணத்தைப் பற்றித்தான் விசாரித்தான். "பெரிய மனிதர்களிலும், பணக்காரர்களிலும் கொஞ்சம் விதிவிலக்காயிருந்த ஒரே நல்ல மனிதனும் போய்ச் சேர்ந்து விட்டானடா சத்தியம்!"— என்று குமரப்பன் வருத்தப்பட்டான்.

"பூபதி இறந்து போய்விட்டார் என்பதை நினைத்துக்கொண்டு அந்த வேதனையோடு இந்த அழகிய மலைநாட்டு நகரத்தையும் இதன் தெருக்களையும் பார்த்தால் இந்த ஊரே இருந்தாற்போல் இருந்து மங்கலம் இழந்து விதவையாகி விட்டாற் போலத் தோன்றுகிறது குமரப்பன்! பஸ்ஸிலிருந்து கீழே இறங்கும் போதே மிகவும் வேண்டியவர் யாரையோ இழந்து விட்டது போல் மனம் தவித்தது" என்று சத்தியமூர்த்தி நண்பனிடம் கூறினான். நண்பர்கள் இருவரும் சிறிது நேரம் பூபதியின் பெருந்தன்மையைப் பற்றியும் விமான விபத்தைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அதன் பின் சத்தியமூர்த்தி உறங்கச் சென்றான். 'குத்து விளக்கு' வேலையை உதறித் தள்ளிய பின்பும் சில வடநாட்டு ஆங்கில இதழ்களுக்குத் தன் விருப்பத்துக்கிசைந்த கருத்தினைத் தன்னுடைய



**மனைவி :** நீங்கள் எதற்காக முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்கள்? அடுத்த வீட்டுக்காரன் வீடு இடிந்தது; அவன் மனைவி இறந்தாள்; நல்ல வேளையாக



நம் குடும்பம் தப்பிற்று! ஆண்டவனுக்கு நன்றி செலுத்துங்கள்.

**கணவன் :** நான் எதற்காக நன்றி செலுத்தவேண்டும்? அடுத்த வீட்டுக்காரன் அல்லவா ஆண்டவனுக்கு நன்றி செலுத்தணும்!

அபிப்பிராய சுதந்திரத்துக்குப் பங்கமில்லாத முறையில் கார்ட்டூன்களாக வரைந்து அனுப்பி அதற்கு மட்டும் சன்மானத் தொகையைப் பெறும் வழக்கத்தைக் குமரப்பன் கடைப்பிடித்து வந்தான். ஒவ்வொரு சனிக்கிழமை இரவும் குமரப்பனை அந்த வாரத்தின் முந்திய ஐந்து ஆறு தினங்களில் வெளியான தினப் பத்திரிகைகளின் குவியல்களுக்கு நடுவேதான் பார்க்க முடியும். அவற்றைப் படித்துக் கார்ட்டூன்களுக்குக் கருத்தைத் தேடி எடுப்பான் அவன். பகலில் 'குமரப்பன் ஆர்ட்ஸ்' என்ற விளம்பரக் கலைக் கடையைக் கவனிக்க வேண்டியிருந்ததனால் இரவில்தான் அவனுக்குக் கேலிச் சித்திரங்கள் வரைய நேரம் கிடைக்கும். அவன் ஒரு பிறவிக் கலைஞன். இந்த உலகத்தைக் குறும்புத்தனமான கார்ட்டூன் கண்களால் பார்த்துப் பார்த்து இரசிக்கிற சுகத்தை அவனால் ஒரு போதும் இழக்கவே முடியாது. அதனால் 'குமரப்பன் ஆர்ட்ஸ்' கடையில் போர்டுகளும், டிசைன்களும், ஸ்லைடுகளும் எழுதிக் கொடுப்பதன் மூலம் வருமானம் வந்தாலும் கூட அவனால் கார்ட்டூன் வரையாமல் சும்மா இருக்கவே முடியாது. போர்டுகளும்,—டிசைன்களும் வரைந்து சம்பாதிப்பதனால் அவன் திருப்திப்பட முடியும். ஆனால் கார்ட்டூன்களை வரையாவிட்டாலோ அவனால் சந்தோஷப்படவே முடியாது. அவனுடைய பிறவிக் கலைக் குணம் பண வருமானத்தினால் மட்டும் சந்தோஷப்படாத கலைப் பேராசை வாய்ந்தது. சத்தியமூர்த்திக்குக் குமரப்பனின் பல குணங்கள் பிடிக்கும். அவற்றில் மிக முக்கியமானது குமரப்பனுடைய இந்தக் கலை மனம்தான். இரவு பன்னிரண்டு மணிக்கு மேலும் கண் விழித்துக் காகிதத்தையும், மையையும் சிந்தனையையும் முதலாக வைத்துக் கொண்டு 'அந்த அகாலத்திலும் இந்த உலகத்தில் கேலி செய்வதற்கு ஏதாவது விஷயம் இருக்கிறதா?' என்று சிந்தித்துத் தவிக்கிற நண்பனை நினைந்துப் பெருமைப்பட்டான் சத்தியமூர்த்தி.

பூபதியின் மரணம் மல்லிகைப்பந்தல் நகரத்தையே அதிர்ச்சியடையச் செய்திருக்கிறது என்பது மறு நாள் பொழுது விடிந்ததிலிருந்து தெரிந்தது. பூபதியின் தொழில் நிறுவனங்களாலும், கல்வி நிலையத்தினாலும், எஸ்டேட்டுகள், கம்பெனிகளாலும்தான் அந்த ஊரே இத்தனை பெரியதாக வளர்ந்தது. அதனால் எங்கு திரும்பினாலும் விமான விபத்தைப் பற்றியும், அவருடைய மரணத்தைப் பற்றியுமே பேசிக் கொண்டிருந்தார்கள். ஊரே களையிழந்து போய் விட்டாற் போலத் தோன்றியது. யாரைச் சந்தித்தாலும் இந்த மரணத்தைப் பற்றியே ஒருவருக்கொருவர் துக்கம் விசாரித்துக் கொண்டு தயங்கி நின்றார்கள். விஜயதசமிக்கு அடுத்த நாள் கல்லூரி திறப்பதாக இருந்தது. ஆனால் அன்று காலையில் கல்லூரி திறந்தவுடனேயே கல்லூரியை நிறுவியவராகிய பூபதியின் அகால மரணத்துக்கு அநுதாபம் தெரிவிக்கும் முறையில் மூடி விடுமுறை விட்டு விட்டார்கள். ஆசிரியர்களும், மாணவர்களும் — மாணவிகளும், கறுப்புத் துணி பாட்ஜ் அணிந்து மல்லிகைப் பந்தல் வீதிகளில் துக்க ஊர்வலம் நடத்தியபின் கல்லூரி மைதானத்தில் ஓர் அநுதாபக் கூட்டமும் நடத்தினார்கள். அந்தக் கூட்டத்தில் மாணவர்கள் எல்லாரும் பூபதி அவர்களின் பெருந் தன்மையையும், கொடைப் பண்பையும் பற்றிப் பேசிக் கொண்டே சென்றார்கள். ஆனால் ஆசிரியர்களோ, பூபதிக்குப் பின்னர் கல்லூரி நிர்வாகக் குழுவின் தலைவராக யார் வர இடமிருக்கிறது என்பது பற்றிய வாதப் பிரதிவாதங்களுடன் சென்றார்கள். அநுதாபக் கூட்டத்துக்குக் கல்லூரி முதல்வர் தலைமை வகித்தார். பூபதியின் சிறப்புக்கள், தொண்டு, பெருந்தன்மை, இவற்றைப் பற்றியோ, அவருடைய மரணத்தினால் ஏற்பட்டிருக்கும் பெரிய தேசிய நஷ்டத்தைப் பற்றியோ ஒன்றுமே கூறாமல் தமக்கும் அவருக்கும் இடையே நிகழ்ந்த சில சொந்த நிகழ்ச்சிகளை மட்டுமே பேசி மாணவர்களைச் சலிப்படையச் செய்து

கொண்டிருந்தார் முதல்வர். ''என் மேல் அவருக்கு மிகவும் பிரியம் உண்டு. ஒரு முறை மாணவர் ஒருவர் ஆத்திரப்பட்டு என்னைக் கத்தியால் குத்த முயன்று நான் தோள் பட்டையில் கத்திக் குத்துக் காயத்தோடு ஆஸ்பத்திரியில் கிடந்தேன். அப்போது என்னைத் தேடிக் கொண்டு தம் மகனோடு ஆஸ்பத்திரிக்கே வந்து விட்டார் நம்முடைய கரஸ்பாண்டெண்டு'' என்று இப்படித் தம்மைப் பற்றியே பேசி முடித்தார் முதல்வர். மற்ற ஆசிரியர்களில் சிலரும் இதே விதமாகத்தான் பேசினார்கள். மாணவர்களில் இரண்டொருவர் மிக நன்றாகப் பூபதியின் கல்விப் பணியைப் பற்றியும் அவருடைய மரணத்தினால் தேசத்துக்கு ஏற்பட்டு விட்ட பேரிழப்பைப் பற்றியும் உணர்ந்து பேசினார்கள்.

கடைசியாகச் சத்தியமூர்த்தி பேச எழுந்திருந்தான்: ''இந்த மலைகளும், இங்கு நம்மைச் சூழ்ந்திருக்கும் வானளாவிய கல்லூரிக் கட்டிடங்களும், கடந்த சில தினங்களாகக் களையிழந்து போயிருக்கின்றன. நம்மைப் பார்ப்பவர்கள் கேட்பவர்கள் எல்லாரும் ஓர் உண்மையான பெருந் தன்மையாளரின் மரணத்தைப் பற்றி விசாரிக்கிறார்கள். நாம் கண்ணில் நீர் நெகிழ நம்மிடம் விசாரிப்பவர்களுக்கு மறுமொழி கூறவும் முடியாமல் தயங்கி நின்று விடுகிறோம். ஒல்லையூர்ப் பெருஞ் சாத்தன் இறந்தபின் அந்த வள்ளலின் வீட்டு வாயிலிருந்த முல்லைக் கொடியைப் பார்த்து, ''வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை—முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே?'' என்று குடவாயிற் கீரத்தனார் புறநானூற்றில் கேட்டது போல் இந்த அழகிய மலை நகரத்தில் உள்ள பூஞ்செடிகளையும், கட்டிடங்களையும், அருவிகளையும், ஏரிகளையும் பார்த்து உங்களுக்கு வளம் தந்த பெருமகன் மறைந்துவிட்டானே, தெரியுமா? என்று கேட்கத் தோன்றுகிறது நமக்கு. நம்மைக் கண் கலங்கச் செய்து விட்டு அவர் போய் விட்டார். இந்த உலகில் நல்லவர்களும், நல்லெண்ணமும் விரைவில் அழிந்து போய்க் கொண்டேயிருப்பதைப் பார்த்து நமக்குக் கவலையாக இருக்கிறது....'' என்று உருக்கமாகப் பேசத் தொடங்கியிருந்தான் சத்தியமூர்த்தி. அவன் பேசிக் கொண்டிருந்த போது கூட்டம் எழுதி வைத்த படம் போல அமைதியாயிருந்தது. உணர்ச்சி மிக்க அந்தச் சொற்பொழிவில் மனம் நெகிழ்ந்து சில மாணவர்கள் கண்கலங்கி விட்டார்கள். சத்தியமூர்த்தி, தனக்கும் பூபதிக்கும் உள்ள நேரடிப் பழக்க வழக்கங்களைப் பற்றியோ, தன் மேல் அவருக்கு அதிகப் பிரியம் உண்டு என்பதைப் பற்றியோ — எதுவுமே பேச வில்லை. அப்படியிருந்தும் கூட்டம் முடிந்து, அறைக்குத் திரும்பிக் கொண்டிருந்த போது, ''இவனிடம் அவருக்குக் கொள்ளைப் பிரியம்! இவனைத் திடீரென்று உதவி வார்டனாக்கினார், அடிக்கடி கூப்பிட்டுப் பிரியமாகப் பேசினார்.... இவனுடைய விரிவுரை ஒன்றைக் கேட்டு விட்டு 'ஆகா ஊகூ' என்று கொண்டாடினார். அப்படி எல்லாம் தன்னைத் தனி அக்கறையோடு கவனித்தவரை இவன் ஏன் புகழ மாட்டான்?'' என்று புறம் பேசிக்கொண்டு போன சில ஆசிரியர்களின் வம்புப் பேச்சைச் சத்தியமூர்த்தி தானே கேட்டு மனம் வருந்தினான். பாரதியும், ஜமீன்தாரும், இன்னும் இரண்டு மூன்று நாட்களில் மல்லிகைப் பந்தலுக்கு வந்து விடலாம் என்றும் பாரதி திரும்பி வந்தபின் எல்லா ஆசிரியர்களும் ஒரு முறைக்காக அவளை வீடு தேடிப் போய்த் துக்கம் கேட்டு விட்டு வர வேண்டுமென்றும், முதல்வர் கூறியிருந்தார். அடுத்த வாரம் நடைபெற இருக்கும் கல்லூரி நிர்வாகக் குழுவின் அவசரக் கூட்டத்தில் 'காலேஜ் போர்டின் புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவார்' என்பதைப் பற்றியும் ஆசிரியர்கள் தங்களுக்குள் பரவலாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். (தொடரும்)

# காப்பாற்றியது யார்?

கஸ்தூரி

முச்சலிக்காரர்கள், கொள்ளையடிப்பவர்கள், பொய்க் கையெழுத்திடுபவர்கள், கள்ள நோட்டு அச்சடிப்பவர்கள், மோசடி செய்பவர்கள் போன்றவர்களுடன்தான் திருமலைக்கு அதிகமான பழக்கம். அவர், தமது இருபத்தைந்தாவது வயது முதல் சென்ற நாற்பது வருட காலமாக அத்தகையவர்கள் யாரையாவது ஒருவரைச் சந்திக்காத நாள் இல்லையென்றே சொல்லலாம்.

அவர், திறமைசாலியான புகழ்பெற்ற ஒரு பெரிய கிரிமினல் வக்கீல்.

ஒரு நாள் அவர் தமது வீட்டில் தமது காரியாலய அறையில் உட்கார்ந்து இரண்டு பேருடன் பேசிக் கொண்டிருந்தார். இருவரும் வயதானவர்கள்.

"எனது கட்சிக்காரர் ஒருவர் சம்பந்தமாகச் சில தகவல்கள் தெரிய வேண்டியிருக்கின்றன. அதற்காகத்தான் உங்கள் இரண்டு பேரையும் கொஞ்சம் வந்து விட்டுப் போகும்படி கேட்டுக்கொண்டேன். அவர் பெயர் குருசாமி. அவரைப்பற்றிப் பத்திரிகைகளில் ஒரு விளம்பரம் போட்டேன். இதோ இருக்கிறது"



என்று கூறிப் பத்திரிகைகளிலிருந்து வெட்டியெடுத்த விளம்பரம் அடங்கிய பகுதிகளை அவர்களிடம் எடுத்துக் கொடுத்தார். அந்த விளம்பரமாவது:

> பத்து வருடங்களுக்கு முன்பு அக்டோபர் மாதம் முதல் தேதியன்று திருக்கழுக்குன்றத்திலிருந்து மகாபலிபுரம் போகும் சாலையின் பக்கமுள்ள ஒரு தோப்பிலிருந்து குருசாமி என்பவரைத் திருக்கழுக்குன்றத்திலுள்ள ஒரு வைத்தியர் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்த நண்பர், வக்கீல் திருமலையை அடியில் கண்டுள்ள விலாசத்தில் சந்திக்கவும். அவருக்குச் சன்மானம் அளிக்கப்படக் கூடும்.

இந்த விவரத்தைப் படித்த அவ்விருவரும் அந்தப் பழைய சம்பவத்தை ஞாபகப்படுத்திக் கொண்டு பார்க்க முயன்றனர். அவர்களுள் ஒருவரைப் பார்த்துத் திருமலை சொன்னார்:

"தண்டாயுதம்! நீங்கள் அப்பொழுது டாக்டர் ஷண்முகத்தினிடம் கம்பௌண்டரா யிருந்தீர்கள் என்று கேள்விப்பட்டேன். டாக்டர்தான், பாவம் காலமாகி விட்டார். உங்களுக்கு அந்த மனிதரைப் பற்றி ஏதாவது தெரியுமா?"

"நன்றாக ஞாபகம் இருக்கிறது. அன்று நான் டாக்டர் வீட்டிலேயே படுத்துக் கொண்டிருந்தேன். இராத்திரி சுமார் பத்து மணி இருக்கும். கதவைத் தடதட வென்று இடிக்கும் சத்தம் கேட்டது. போய்த் திறந்து பார்த்தேன். ஒரு வாலிபன் வியர்க்க விறுவிறுக்க நின்றிருந்தான். அவன், "ஐயா, ஓர் ஆளுக்கு மண்டையில் பலமாக அடிபட்டிருக்கு. வண்டியில் ஏற்றி வந்திருக்கிறேன்" என்று படபடப்புடன் கூறினான். அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டே வந்த டாக்டர், 'தண்டு! நீயும் கூடப் போய்த் தூக்கிக் கொண்டு வா' என்றார். அவர் விஷயம்தான் உங்களுக்குத் தெரியுமே. எந்த நோயாளி எந்தச் சமயத்தில் வந்தாலும் வைத்தியம் செய்வார். அதுவும் முக்கால்வாசி தர்ம வைத்தியம். நானும் அந்த வாலிபனுமாகச் சென்று ஒரு கைவண்டி மீது படுத்துக் கொண்டிருந்த அந்த மனிதரை உள்ளே தூக்கிக்கொண்டு வந்து ஒரு படுக்கையில் போட்டோம்."

"அந்த வாலிபன் பார்ப்பதற்கு எப்படி இருந்தான்?"



''நடுத்தர உயரம். பலசாலியாகவே காணப்பட்டான். மேலே ஒரு பனியன் போட்டிருந்தான். தலையில் காதைச் சுற்றி ஒரு பெரிய முண்டாக இருந்தது. முகம் முழுதும் நன்றாகத் தெரியவில்லை.''

''அப்புறம்?''

''டாக்டர் அந்த மண்டைக் காயத்தைப் பரிசோதிக்கத் தொடங்கினார். பின் பக்கம் வீங்கிப் போயிருந்தது. ஒரு பெரிய பிளப்பிலிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. டாக்டர், 'என், தம்பி! இவ்வளவு பெரிய காயம் எப்படி ஏற்பட்டது?' என்று கேட்டுத் தலை நிமிர்ந்தார். அப்போது அந்த வாலிபன் அறையில் இல்லை. நான் வெளியில் சென்று பார்த்தேன். அவனையும் காணோம்; அவன் கை வண்டியையும் காணோம். டாக்டர் அவன் சென்றுவிட்டதைப் பற்றிக் கவலைப்படாமல் அடிபட்டவருக்குச் சிகிச்சை செய்வதில் முனைந்திருந்தார்.''

''நோயாளி அவன் அப்படிச் சொல்லாமற் போய் விட்டதைப் பற்றி ஒன்றுமே கூறவில்லையா?'' என்று இருமலை கேட்டார்.

''அவர்தான் ஒரே மயக்கமாயிருந்தாரே. மறு நாள்தான் பேசத் தொடங்கினார். அவர் சென்னைப் பங்கு மார்க்கெட்டுத் தரகராம். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் எங்கேயாவது வெளியூருக்குச் சென்று விட்டுத் திங்களன்றுதான் திரும்புவாராம். அன்று திருக்கழுக்குன்றம் போவதற்கிருந்தவர் முதல் நாள் இரவே செங்கற்பட்டுக்கு வந்து 'ஒரு ஹோட்டலில் தங்கியிருக்கிறார். காலையில் எழுந்து முகக்ஷவரம் செய்து கொண்டு ஸ்நானம் செய்து விட்டுத் திருக்கழுக்குன்றத்துக்கு வந்திருக்கிறார். மகாபலிபுரம் செல்லும் சாலையோடு நடந்து போய் வழியில் ஒரு தோப்பில் நுழைந்திருக்கிறார். அவருக்குப் போட்டோ பிடிக்கும் பைத்தியம் உண்டு. தோப்பில் ஓர் அரச மரத்திலிருந்து ஒரு வேப்ப மரமும், ஒரு பலாமரமும் கிளம்பி யிருந்தன. அந்த அதிசயத்தைப் போட்டோ பிடிப்பதற்காக முயன்றிருக்கிறார். கையில் காமிராவை வைத்துக் கொண்டு படம் பிடிப்பதற்காகத் தாம் இருக்க வேண்டிய தூரத்தைச் சரி பார்த்துக் கொண்டிருந்தார். அதற்காக அவர் முழங்கால்களை மண்டியிட்டு உட்கார்ந்து மரத்தின் பிம்பம் காமிராவில் சரியாகத் தெரிகிறதா என்று பார்த்துக் கொண்டிருந்த போது திடீரென்று மண்டையில் பலமான அடி விழுந்தது. அப்போது தான் கீழே வைத்திருந்த கைத் தோற் பையை ஒருவன் எடுத்துக் கொண்டு ஓடுவது போல் கண்ணில் பட்டது. ஏனென்றால் அவருக்கு அப்போது தலை சுற்ற ஆரம்பித்து விட்டது. மயக்கம் போட்டு விழுந்து விட்டார்.''

''நேரில் பார்த்தது போல் வர்ணிக்கிறீர்!''

''குருசாமி ஆஸ்பத்திரியில் ஒரு வாரம் இருந்தார். அப்போது சிறுகச் சிறுக இந்த விவரங்களையெல்லாம் சொன்னார். அவர் அந்த இடத்தில் எத்தனை மணி நேரம் கிடந்






இரு ார் என்று அவருக்கே தெரியாதாம். வலி தாங்காமல் முனகிக் கொண்டிருந்தபோது ஒருவன் வந்து அவர் தலையைத் துடைத்து விட்டு ஒரு துணியைப் போட்டுக் கட்டினானாம். அவன் ஒரு சிறிய கைவண்டி விளக்கு வைத்திருந்தானாம்.''

''அவன் பார்ப்பதற்கு எப்படி இருந்தானாம்?'' என்று திருமலை விசாரித்தார்.

''உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்தபோது அவன் யார், எப்படியிருந்தான் என்று ஒன்றும் மனத்தில் படவேயில்லையாம். ஏன், அவனை நேருக்கு நேர் பார்த்த எனக்கும் டாக்டருக்கும் அவனைப் பற்றி ஒன்றும் தெரியாதே!''

''இப்போது அவனை நேரில் பார்த்தால் அடையாளம் கண்டு கொள்ள முடியுமா?'' என்று திருமலை கேட்டார்.

''அதுவும் பத்து வருஷங்கள் கழித்தா? ஒரு நாளும் முடியாது'' என்று தண்டாயுதம் தீர்மானமாகக் கூறினார்.

''அந்தச் சம்பவத்தைப் பற்றிப் போலீசுக்குத் தெரிவிக்கவில்லையா?''

''டாக்டர் ஷண்முகம் இது விஷயங்களில் கண்டிப்பானவராயிற்றே. மறுநாளே தெரிவித்து விட்டார். அவரைத் தாக்கிய அவன் வழிப்பறிக்காரன் போலிருக்கிறது. அவர் வைத்திருந்த தோல் கைப் பையை எடுத்துக் கொண்டு போய் விட்டானாம். அதில் கிட்டத் தட்ட ஆயிரம் ரூபாய்க்கு நோட்டுக்களாக இருந்ததாம். நம்ப பகபதி தான் அப்போது அங்கே ஹெட்கான்ஸ்டேபிளா யிருந்தார்'' என்று தண்டாயுதம் தம் பக்கத்திலிருந்தவரைக் காண்பித்துக் கூறினார்.

''அதனால்தான் அவரையும் வரச் சொன்னேன்'' என்றார் திருமலை.

தண்டாயுதம் கூறி வந்ததையெல்லாம் கவனமாகக் கேட்டு வந்து, நடுநடுவே அவர் கூறியதை ஆமோதிப்பதுபோல் தம் தலையை ஆட்டி வந்த பகபதி, ''எனக்கு இந்தச் சம்பவம் நன்றாக ஞாபகமிருக்கிறது. ஏனென்றால், அது நடந்த தினம் மலையில் பட்சிகள் சாப்பிட வரவில்லை'' என்றார்.

''ஆமாம் ஆமாம்!'' என்றார் தண்டாயுதம்.

''நாங்கள் அந்தத் தோப்புப் பக்கம் சென்று பார்வையிட்டோம். ஒரே ஓர் உடைந்த காமிரா கிடந்தது. குருசாமியைத் தாக்கியவனைப் பற்றி ஒரு தகவலும் கிடைக்கவில்லை. அந்த மனிதரும் பிழைத்துக்கொண்டுவிட்டதால் அந்த விஷயத்தில் மேற்கொண்டு ஒன்றும் செய்யவில்லை'' என்றார். பிறகு, ''எதற்காக நீங்கள் இதைப்பற்றி இப்போது விசாரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''நான் உங்களை விசாரிக்க அதிகாரம் கிடையாது. சிநேகித முறையில் கேட்டேன். அவ்வளவுதான்'' என்று திருமலை சிரித்துக் கொண்டே கூறினார். பிறகு சொன்னார்: ''அந்தக் குருசாமி பெரிய பணக்காரராகி விட்டார். இப்போது திடீரென்று யாரும் லட்சாதிபதியாவது அதிசயமில்லையே. அவர் கல்யாணம் செய்து கொள்ள வில்லை. அவர் தமது சொத்து முழுவதையும் தம்மை வைத்தியர் வீட்டுக்குத் தூக்கிக் கொண்டு வந்த ஆளுக்குச் சேரும்படி உயில் எழுதி வைத்திருக்கிறார். நான்தான் அதை எழுதினேன்.''

''ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. அவர் குணமாகி ஊருக்குப் போனதும் டாக்டருக்கு ஐந்நூறு ரூபாய் பணம் அனுப்பி அதில் எனக்கு நூறு ரூபாய் கொடுக்கச் சொல்லி யிருந்தார். தங்கமான மனிதர். இந்தச் சொத்து என்ன பெறும்?'' என்று தண்டாயுதம் கேட்டார்.

''கிட்டத்தட்ட இரண்டு லட்சம் ரூபாய்!''

''அப்பாடா? அப்படியானால் ஏகப்பட்ட பேர் நான்தான் அவரைக் காப்பாற்றினேன் என்று சொல்லிக் கொண்டு வருவார்களே!'' என்றார் பகபதி.

''கிட்டத்தட்ட நூறு பேர்கள் வந்தார்கள். அவர்களை யெல்லாம் வடிகட்டி விட்டேன். இப்போது இரண்டு பேர்தான் பாக்கி இருக்கிறார்கள். முருகேசன், சீனன் என்ற அந்த இரண்டு பேரும்தான் குருசாமியை வைத்தியரிடம் அழைத்துப் போனதாகச் சொல்கிறார்கள். அவர்கள் குருசாமி விழுந்து கிடந்த இடத்தைப் பற்றி, உடலில் அடிபட்டிருந்த இடத்தைப் பற்றி யெல்லாம் விவரமாகக் கூறுகிறார்கள். எல்லாம் சரியாயிருக்கின்றன. அதனால் குழம்பிப் போயிருக்கிறேன். சரியான ஆள் யார் என்று நிர்ணயிக்க முடியவில்லை. நீங்கள் அவர்களைப்

பார்த்தால் அடையாளம் கண்டுபிடிக்க முடியுமா?'' என்று திருமலை தண்டாயுதத்தைக் கேட்டார்.

அவர் தலையசைத்தார்.

''அவர்கள் இருவரும் இப்போது இங்கு தான் இருக்கிறார்கள். ஒருவர் என் குமாஸ்தாவின் அறையில் இருக்கிறார். இன்னொருவர் என் ஜூனியர் அறையிலிருக்கிறார். ஒருவர் வந்திருப்பது மற்றவருக்குத் தெரியாது. அவர்களைப் பார்த்து விட்டு வரலாம், வாருங்கள்!'' என்று வக்கீல் எழுந்தார்.

தண்டாயுதம் வக்கீலைப் பின்தொடர்ந்து சென்றார். பின்னால் சற்றுத் தூரத்தில் பசுபதியும் போனார்

குமாஸ்தாவின் அறையிலிருந்த மனிதரைத் தண்டாயுதம் கவனித்தார். அவர் கிராப் செய்த தலையுடன், நன்றாகவும் உடை உடுத்திருந்தார். அவரைப் பார்த்தால் 'அவர்' என்ற வார்த்தையையே அவரைப் பற்றி உபயோகிக்கத் தோன்றாது. பிறகு ஜூனியர் அறைக்குச் சென்றார்கள். வக்கீல் அவரிடம் பேச்சுக் கொடுத்துக் கொண்டிருக்கும் போது தண்டாயுதம் அங்கிருந்த மனிதரைக் கவனித்தார். அவரும் கிராப் தலையர். முகத்தில் அரும்பு மீசை வேறு இருந்தது.

மூவரும் திரும்ப வக்கீலின் அறைக்கு வந்த போது தண்டாயுதம் சொன்னார்: ''பத்து வருஷங்களாகி விட்டதல்லவா? அதற்குப் பிறகு எத்தனையோ மாறிப் போயிருக்கிறது. அந்த ஆள் தலையைக் கிராப் அடித்துக் கொண்டிருக்க வில்லை. அவன் குடுமி பின்னால் தொங்கம் தெரிந்தது. அவனுக்கு மீசை இல்லை. அது நன்றாக ஞாபகமிருக்கிறது.''

''நடை உடை பாவனைகளில் திடீரென்று எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டு விட்டனவே. அந்த விஷயம் என் மனத்தில் படவில்லை'' என்று திருமலை கூறினார்.

சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவ்விருவரையும் அனுப்பிவிட்டார்.

பிறகு சிந்தனையில் ஆழ்ந்தார். ஒரு யோசனை தோன்றிற்று. குமாஸ்தாவின் அறையிலிருந்த முருகேசனை அழைத்து வரச் செய்தார்.

''கடைசியில் நான்தான் என்று முடிவு செய்திருப்பீர்கள், இல்லையா?'' என்று கேட்டுக் கொண்டே முருகேசன் நாற்காலியில் அமர்ந்தான்.

''அநேகமாக அப்படித்தான். இருந்தாலும் இன்னும் ஒன்றிரண்டு விஷயங்கள் தெரிய வேண்டும். நீங்கள் திருக்கழுக்குன்றத்தில் கைவண்டி வைத்துக் கொண்டு வேலை செய்தீர்கள். பிறகு பட்டணத்துக்கு வந்து ஓர் அச்சாபீஸில் சேர்ந்து வேலை பார்த்து வருகிறீர்கள். இப்போது போர்மேன் ஆக இருக்கிறீர்கள். சரி, நீங்கள் ஒன்று செய்ய வேண்டும். நீங்கள் குருசாமியைப் பார்த்த இடத்திலிருந்து அவரை வைத்தியரிடம் கொண்டு போனது வரையில் சுருக்கமாக எழுதிக் கொடுங்கள். எனக்கு அந்த விவரங்கள் கோர்ட்டில் தாக்கல் செய்வதற்காக வேண்டும்'' என்றார்.

''அதற்கென்ன? எழுதிக் கொடுக்கிறேன்'' என்றான் முருகேசன்.

''நீங்கள் குமாஸ்தாவின் அறையில் உட்கார்ந்து நிதானமாய் எழுதிக்கொண்டு

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சீனப் படையெடுப்பு காரணமாக நாட்டில் பெருத்த விழிப்புணர்ச்சி ஏற்பட்டதும், நாடே சீறி எழுந்து எதிரிகளை விரட்டியடிக்க முற்பட்டதும் ஊர் அறிந்த உலகம் அறிந்த விஷயமாகும். இந்த மாதிரித் தருணத்தில் கொள்ளைக் கூட்டத்தினர்கூடப் பின் தங்கி விடவில்லை. அவர்கள் தங்கள் உணர்ச்சிப் பெருக்கைக் குறிப்பிட்டு ஒரு பத்திரிகைக்குச் செய்தி அனுப்பினார்கள். செய்தி வருமாறு:



''ஆசிரியர் அவர்களே!

இப்பொழுதுதான் சென்ற இருபத்து நான்காம் தேதி நாங்கள் பேயாபுரத்துக் காட்டில் கூடினோம். கொள்ளைக் கூட்டத் தலைவர் கப்பார்சிங் தலைமை வகித்தார்: எதிரிகளை விரட்டியடிக்க நாங்களும் பொருளுதவி செய்வதென்று ஏகமனதாக முடிவு செய்தோம். தேசத்தின் தற்காப்பு நிதிக்கு நாங்கள் வள்ளிசாக ஐம்பதாயிரம் ரூபாய் தருவதாகத் தீர்மானித்தோம். ஆனால் கஷ்டம் என்னவென்றால், ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு நாங்கள் எங்கே போவோம்? எனவே, சில சேட்டுகளுக்கு எச்சரிக்கைக் குறிப்பு அனுப்பியுள்ளோம், மரியாதையாகப் பணம் அனுப்பி வைக்குமாறு. எங்களது இந்தத் தர்ம காரியத்தில் அரசாங்கம் குறுக்கிடக் கூடாது என்று கேட்டுக் கொள்ளுகிறோம். எப்படியும் நாங்கள் எங்கள் வாக்குறுதியை நிறைவேற்றியே தீருவோம் என்பது உறுதி. இருந்தாலும் எங்கள் இந்தக் கடிதத்தைத் தங்கள் பத்திரிகையில் வெளியிடுங்கள். சேட்டுகளுக்கு நாங்களும் தர்ம காரியத்துக்காகத் தான் பணம் கேட்கிறோம், அதர்மத்துக்காக வல்ல என்பதாவது புலனாகட்டும்.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

வாருங்கள்'' என்று கூறி அனுப்பினார். பிறகு சீனனைத் தருவித்தார். அந்த மனிதரும் தாம் கைவண்டி வைத்துக் கொண்டு மூட்டைகள் ஏற்றிப் பிழைத்து வந்ததாகவும் பிறகு சென்னைக்கு வந்து வெற்றிலை பாக்கு, பத்திரிகைகள் விற்கும் கடை வைத்து இப்போது சுகமாகக் காலம் கழித்து வருவதாகவும் தெரிவித்திருந்தார்.

'' மீசை எப்போது வைத்துக் கொண்டீர்கள்?'' என்று திருமலை வேடிக்கையாகக் கேட்டார்.

''நம்ப சம்சாரம் வைத்துக் கொள்ளச் சொல்லிச்ச'' என்று சீனன் முகத்தில் வெட்கம் தோன்றக் கூறினார்.

''தாங்கள் ஒரு காரியம் செய்ய வேண்டும். தங்களுக்குத்தான் இப்போது எழுதப் படிக்கத் தெரியுமே. தாங்கள் குருசாமியை எங்கே பார்த்தீர்கள், அவர் எந்த நிலைமையில் இருந்தார் என்பதைப் பற்றிச் சுருக்கமாக ஒரு காகிதத்தில் எழுதிக் கொடுங்கள். கோர்ட்டில் தாக்கல் செய்ய வேண்டியிருக்கும்''.




அடுத்த மர்மக் கதை: கே. என். சம்பத் எழுதும் ''இவனே அவன்''

சுதந்திரம் என்பதன் பொருள் என்ன? நீங்களோ நானோ மோசடி செய்து பணம் சேர்ப்பதற்குத் தடையிருந்தால் நமக்குச் சுதந்திரம் இல்லை என்று கூறிவிடலாமா? கூடாது. நம்முடைய உடலையும் புத்தியையும் சொத்துக்களையும் நமது சுய விருப்பப்படி—பிறருக்கு எந்தத் தீங்கும் இழைக்காத முறையில்—உபயோகிக்க நாம் 'பிறப்புரிமை' பெற்றிருக்கிறோம். இதுவே சுதந்திரம். சொத்துக்களையும், கல்வியையும், ஞானத்தையும் பெற ஒரு சமுதாயத்தின் எல்லா மக்களும் சம வாய்ப்புப் பெற்றிருக்க வேண்டும்.

—ஸ்வாமி விவேகானந்தர்

"அதற்கென்ன எழுதிக் கொடுக்கிறேன்" என்று சினன் கூறி, "ஒரு காகிதம் கொடுங்கள்" என்று கையை நீட்டினார்.

திருமலை அவனை முன்போல் தமது ஜூனியர் அறையில் போயிருக்கச் சொன்னார்.

சற்று நேரத்துக்குப் பிறகு திருமலை அவர்கள் எழுதிக்கொடுத்த தகவல்களைப் படித்தார். இரண்டுபேர் எழுதியிருந்ததும் கிட்டத்தட்ட ஒன்றாகத்தான் இருந்தன. ஒரே ஒரு வித்தியாசம் மட்டும் இருந்தது. ஆனால் அது ஒரு பெரிய விஷயமாக அவருக்குத் தோன்றிற்று. அவர்கள் இருவரையும் அழைத்து வரச் செய்தார்:

"முருகேசன்! நீங்கள் குருசாமியைப் பற்றி எழுதியிருக்கும் விஷயங்கள் அநேகமாகச் சரியாகத்தான் இருக்கின்றன. உங்கள் கடிதத்தின் அடியில் உங்கள் கையெழுத்தைப் போடுங்கள். வீட்டு விலாசத்தையும், அச்சாபீஸ் விலாசத்தையும் குறிப்பிடுங்கள். செக் அனுப்புவதற்குச் சௌகரியமாயிருக்கும்" என்றார்.

முருகேசன் அப்படியே கையெழுத்திட்டு விலாசங்களையும் எழுதினார்.

"நீங்களும் அதே மாதிரி எழுதிக் கொடுங்கள் சினன்" என்றார் அந்த மனிதரைப் பார்த்து.

"நீங்கள் இது போன்று இன்னொரு ஆசாமியையும் வைத்துக் கொண்டிருப்பீர்கள் என்று நான் எதிர்பார்த்திருக்கவில்லை" என்று முருகேசன் குறை கூறினான்.

திருமலை சிரித்து விட்டு, சினன் கையெழுத்திட்டுக் கொடுத்த கடிதத்தையும் வாங்கி வைத்துக் கொண்டார். இரண்டொரு நிமிஷங்கள் அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகம் கடுமையாகிக் கொண்டே வந்தது. "இப்படியா நடந்திருக்கிறது?" என்று உறுமினார்.

"நீங்கள் இரண்டு பேர்கள் எழுதிக் கொடுத்த விஷயங்கள் அநேகமாக ஒரே விதமாயிருக்கின்றன. ஆனால் ஒரு சின்ன அம்சத்தில் மாத்திரம் வித்தியாசப்படுகிறது. ஒன்றில், அவர் முகம் வழவழவென்றிருந்தது என




எழுதப்பட்டிருக்கிறது. இன்னொன்றில் அவர் முகத்தில் ரோமம் இருந்தது. தடவிப் பார்த்த போது சொர சொர வென்றிருந்தது என்று எழுதப்பட்டிருக்கிறது. அவர் முகம் வழவழ வென்றுதான் இருந்தது....."

திருமலை மேலே சொல்லி முடிப்பதற்குள் "பார்த்தீர்களா! நான் எழுதியதுதானே உண்மை" என்று முருகேசன் பெருமையுடன் கூறினான்.

"ஓரளவுக்கு உண்மைதான்!"

"அதென்ன அப்படிச் சொல்கிறீர்கள்?"

"ஏன்? இப்போது குருசாமியைக் காப்பாற்றியவரைக் கண்டுபிடிப்பதோடு இன்னொரு பிரச்னையும்கூடக் கிளம்பியிருக்கிறது" என்றார் திருமலை.

"என்னது?" என்று சினன் ஆச்சரியப்பட்டார்.

"ஆமாம், கொலைகாரனையும் கண்டு பிடிக்க வேண்டும். அவரை அந்தக் கொலைகாரன் பின்பக்கமாக வந்து மண்டையில் ஏதோ கட்டையால் அடித்திருக்கிறான். அவர் கீழே விழுந்தபோது அவர் முகத்தைக் கவனித்திருக்கிறான்; வழவழவென்றிருந்திருக்கிறது. ஏனென்றால், அவர் செங்கற்பட்டிலிருந்து கிளம்பிய போது காலையில் எழுந்ததும் வழக்கம் போல் முக க்ஷவரம் செய்து கொண்டு காப்பி சாப்பிட்டதாக என்னிடம் தெரிவித்தார்....."

முருகேசனும், சினனும் விழித்தார்கள்;

"குருசாமிக்கு உதவி செய்தவர் அவரை அவர் அடிபட்டதற்குப் பதினைந்து பதினாறு மணி நேரம் கழித்தே பார்த்திருக்கிறார். ஆகையால் முகத்தில் ரோமம் சிறிது வளர்ந்து விட்டிருப்பதையும், மண்டையிலிருந்து வழிந்த இரத்தம் பட்டு ரோமம் சொரசொரவென்றிருந்ததையும்தான் பார்த்திருக்கிறார். தான் பார்த்தபடியே அவர் தமது கடிதத்தில் எழுதியிருக்கிறார். ஆகையால், அவர்தான் உதவி செய்தவராக இருக்க வேண்டும்" என்றார்.

பிறகு எழுந்திருந்து, "என்ன முருகேசா! நான் சொல்கிறது சரிதானே? கொலைகாரப் பயலே!" என்று கத்தினார்.

முருகேசன் அப்போது அறையை விட்டு வெளியே ஓடிக் கொண்டிருந்தான். அவன் தான் குருசாமியின் முகம் வழவழ வென்று இருந்தது என்று எழுதியவன்.

"அவன்தான் குருசாமியின் மண்டையில் அடித்து விட்டுப் பணப்பையைத் தூக்கிக் கொண்டு போனான் என்று நாம் நிரூபிக்க முடியாது. ஆகையால்தான் ஓடட்டும் என்று பேசாதிருந்து விட்டேன். நமக்கு நமது நண்பரைக் காப்பாற்றியவர் யார் என்று தெரிய வேண்டியது. அது மிஸ்டர் சினன் தான்!" என்று திருமலை அப்போது அங்கே வந்த ஜூனியரிடம் கூறினார்.

"இன்னொரு அம்சம் என்னை மிஸ்டர் சினன் கூறியதை நம்பச் செய்தது. அவர் தமது சம்சாரத்தின் விருப்பப்படி மீசை வைத்துக் கொண்டதாகத் தயங்காமல் சொன்னார். அதிலிருந்து அவர் உள்ளதை உள்ளபடி சொல்லக் கூடியவர் என்று நினைத்தேன்" என்று வேடிக்கையாகச் சொன்னார்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# அவள் அழகி...அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிறாள்




**உங்கள் முக சருமத்திற்கு மினுமினுப்பும்
இளமை வசீகரமும் அளிக்க
எண்ணெய்ப்பசையற்ற உன்னத**

## பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முக சருமத்தை பூப்போல மென்மையாகவும், மினுமினுப்பாகவும், மனோகரமாகவும் வைக்கிறது. முகத்திலுள்ள சிறு பருக்கள் போன்றவை நீங்க வழி செய்கின்றது. இதைத் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராக மணிக்கணக்கில் படிந்திருக்கும். உங்கள் முக வனப்புக்கு மெருகூட்ட பாண்ட்ஸ் ஃபேஸ் பவுடர் உபயோகியுங்கள். அது சீராகப்படிகிறது, முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்க உதவுகிறது.

**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:**



தினமும் இரவில் உங்கள் முகத்திலும், கழுத்திலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் தடவுங்கள். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு அதிகப்படியான க்ரீமைத் துடைத்து விடுங்கள். ஜலத்தினால் சுத்தம் செய்யமுடியாதபடி சருமத்தினுள் அடைந்து கிடக்கும் அழுக்கு முதலியவைகளை அது வெளியேற்றும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

